# KAMALASANI

## AN INTERESTING SOCIAL
## TAMIL NOVEL

ஸ்ரீ.

பிரமாதி௵ மாசி மீ ௨௩ உ

6/3/1940

BY

**O. SAMPATH**

*Author of*

"Sugunaranjini" "Kamalavathana" "Mysteries of Kamalabhavana" etc.



**Published By**

R. LOKANATHAN
PARK TOWN, MADRAS

1918

 [PRICE RE. 1.

# கமலாஸனி

அல்லது

காதலின் வெற்றி

ஓர் இனிய செந்தமிழ் நாவல்

"கல்வி" தந்த வெகுமதி

"சுகுணரஞ்சினி" "கமலவதனு" "கமலபவன அற்புதம்"
முதலியவைகளின் நூலாசிரியரான

ஏ. ஸம்பத் அவர்கள்

இயற்றியது

R. உலகநாதம் பிள்ளை

வெளியிட்டது

பார்க் டவுன், சென்னை.



1918

காபிரைட் ரிஜிஸ்டர் செய்தது] [விலை ரூபா 1.

உ

ஸ்ரீராமஜயம்

# கமலாஸனி

## 1. நாற்பதினாயிரம் ரூபாய்தான் வேண்டும்.

அறையில் யாதொரு சப்தமுமில்லாமலிருந்தது. மேஜையின் மேல் வைத்திருந்த ஓர் விளக்கின் பசுமையான ஒளி அவ்வறையை யலங்கரித்துக்கொண்டிருந்தது. அவ்வறையைப்பார்க்கும்போது அதன் சொந்தக்காரன் மிகுந்த செல்வ வந்தனாயிருக்க வேண்டுமென்றும், பெரிய வியாபாரியாயிருக்க வேண்டுமென்றுந் தோன்றுதலாகும். அது ஓர் தனவானுடைய அந்தரங்க அறை. அந்தக்கனவானைப்பார்த்து அவன் குணங்களை யறிந்துகொள்வது எப்படிப்பட்டவர்களுக்குந் அஸாத்தியமாகும்.

ஆயினும் அவன் சிறந்த அந்தஸ்துள்ளவனென்ப திரம் யாவருக்கும் தெற்றென விளங்கும். அவன் மற்ற விட நேர்த்தியாக உடைதரித்துக்கொண்டிருந்தானென அல்லது மிக்க தேகவலிமையுள்ளவனென்றாவது கருதி அவனை நாம் தனவானென்றும்கனவானென்றும் கூறவில்லை. அவனது முகத்தில் சித்தஸ்வாதீனம், ஸ்வாதந்தரியம், இதரர்களை உட்படுத்துதல் ஆகிய இவைகளின் குறிகள் தெளிவாய் விளங்கும். அவன் அமைதியுற்ற முகத்துடன் ஓர் மேஜையின் மேல்சாய்ந்துகொண்டு சில கடிதங்களைப்படிக்கலாயினான்.

அவனைப்பார்க்கும்போது அவன் நல்ல அந்தஸ்து வருங் காலத்து இறுமாப்புக்கொள்ளமாட்டானென்றும், துரதிர்ஷ்டமுண்டான காலத்தில் அதனைநினைந்து வருந்தமாட்டானென்றும் நன்கு புலனாயிற்று. தற்சமயம் அவன்முகத்தில் ஓர்வித இருள்மூடியது; ஆனால் தீனதயாளு அதைவிலக்கிச் சந்தோஷமுள்ளவன் போல் முகக்குறியை மாற்றிக்கொண்டான்.

திடீரென்று கதவைத்தட்டுஞ் சப்தங்கேட்டது. அதைக் கேட்டதும் தீனதயாளு, தன்வேலைக்காரனென்றறிந்து, உள்ளேவரும்படி கட்டளையிட்டான். அங்ஙனமே வேலைக்காரன் உள்ளே வந்து "ஐயா, மேகநாதர் வந்திருக்கின்றார்" என்றான்.

தீனதயாளு தன் தலையைத்திருப்பவில்லை; கையில் வைத்திருந்த கடிதங்களை வைத்துவிட்டு, மேகநாதனை அழைத்து

வரச்சொல்வதற்குமுன் மேஜையை ஒரு முறைபார்த்தான். மேகநாதன் என்பவன் தீனதயாளுவின் அந்தரங்க குமாஸ்தா-அவன் பேருக்கு மாத்திரம் அந்தரங்க குமாஸ்தாவாயிருந்தானேயொழிய ஒருபொழுதும் தீனதயாளுவின் அந்தரங்கத்தைத்தெரிந்து கொண்டானில்லை. மேகநாதன் அதிக உயரமில்லாமலும், சீக்கிரபோஜனம் செய்வதனால் மெலிந்ததேகமுள்ளவனாயுமிருந்தான். அவன் கண்கள் ஒருவித ஜோதியோடு கூடியிருந்தன. அவன் தன் எஜமானனிடம் கூச்சமுள்ளவனாயிருப்பான். அவன் சற்றுநேரம் கதவண்டை நின்று, பாதங்களிலிருந்த தூசியைத் தட்டிக்கொண்டிருந்தான்.

மேகநாதன் உள்ளே சென்றதும் "பனி அதிகமாயிருக்கிறது" என்றான். தீனதயாளு தலையை அசைத்துக்கொண்டே "ஆம், மேகநாதா; அதிகமாய் நனைந்துவிட்டாயோ?" என்றான். வாஸ்தவமாய் மேகநாதனைப்பற்றி தீனதயாளுவுக்கு யாதொரு கவலையுமில்லாவிட்டாலும் அவனிடம் அதிக அன்புடையவன்போல் நடித்துவந்தான்.

மேகநாதன் தீனதயாளுவுக்கு எதிரிலிருந்த நாற்காலி யி[illegible]ட்கார்ந்துகொண்டான். உடனே தீனதயாளு மேஜை யி[illegible]லிருந்த விளக்கின் வெளிச்சம் தன் முகத்தில் விழா [illegible]கநாதன் முகத்தில் பிரகாசிக்கும்படி அதைத்திருப்பினான்.

தீனதயாளு மேகநாதனைப்பார்த்து "மேகநாதா, இன்று நீ கொஞ்சம் நேரஞ்சென்று வரவில்லை?" என்று கேட்டான். இந்தக் கேள்வியைக் கேட்டதும் மேகநாதன் தன் எஜமானன் முகத்தைப் பார்த்து அவன் சஞ்சலத்துடன் இருக்கிறானென்று அறிந்துகொண்டான்.

மேகநாதன் :—ஐயா, கொஞ்சம் தாம்ஸமாகத்தான் வந்தேன். நான் துறைமுகத்திற்குப் போனேன். அதனால்தான் நேரமாய்விட்டது.

தீனதயாளு தன் பார்வையை உயர நிமிர்த்தி உடனே கீழிறக்கிவிட்டான். அவன் "துறைமுகத்திற்கா போயிருந்தாய்? என்ன சங்கதி?" என்றான்.

மேகநாதன் :—ஐயா மிகவும் கெட்ட சங்கதி? 'அரிஸா' என்னுங்கப்பலில் சேதமுண்டாய்விட்டது. அதைச் சொல்ல எனக்கு மிகவும் விசனமாயிருக்கிறது. அதை பால்டிக் கடலில் பிடித்துக்கொண்டார்கள். ஒன்பது பேர் இறந்துவிட்டார்களாம்.

இதைச் சொல்லும்போது மேகநாதனுடைய பார்வை தீனதயாளுவையே நோக்கியிருந்தது; அவன் குரல் நடுக்கமுற்றது; தீனதயாளு என்ன சொல்லுவானோ வென்று பயந்துகொண்டிருந்தான்.

தீனதயாளு மிகுந்தகோபத்துடன் "ஒன்பது பேரா?" என்றுன். உடனே தன்னை அடக்கிக்கொண்டு, தலையையசைத்து "ஒன்பது பேர்; மிகவும் விசனகரமானது; மிகவும் விசனகரமானது, மேகநாதா. அதைக்கேட்கும்போது எனக்கு மிகுந்த வருத்தமுண்டாகிறது. பாவம்!" என்று சொல்லிவிட்டுச் சற்றுநேரம் சும்மா இருந்தான். மறுபடியும், கீழ்நோக்கிய கண்களுடன் "மேகநாதா, சரக்கு என்னவாயிற்று?" என்றுன்.

மேகநாதன்: (பயத்துடன்) ஐயா, சரக்கு அநேகமாய் முழுகிப்போய்விட்டது. முற்றும் போய்விட்டதென்று சொல்லுகிறுர்கள்.

தீனதயாளு ஏதோ ஒருகாகிதத்தைத் தேடுபவன்போல் மேஜையைக் கவனத்துடன் பார்த்துக் கொண்டிருந்தான். அவன் அப்படிப்பார்த்துக் கொண்டிருந்தபோது "சரக்கு முழுவதும் முழுகிப்போய்விட்டதா? மேகநாதா! நாம் அதைஅதிக விலைகொடுத்து வாங்கினேமே! அதில் பாதிதான் இன்ஷியூர் செய்யப்பட்டிருக்கிறதென்பது உனக்குத் தெரிந்தவிஷயம்" என்றுன்.

தீனதயாளுவின் முகம் வெளுத்தது. அதைக்கவனித்த மேகநாதன் "ஐயா, அது மிகவும் விசனகரமானது" என்று சொல்லிவிட்டு அதற்கு மேல் சொல்லலாமா சொல்லக்கூடாதா வென்று யோசித்துப்பிறகு "கெட்ட சமாசாரம் எப்பொழுதும் தனித்து வருவதில்லை. ஐயா, இன்னும் ஒரு கெட்ட சமாசாரம் இருக்கிறதென்று சொல்ல எனக்கே நாவெழவில்லை. நான் துறைமுகத்திலிருந்து வந்துகொண்டிருந்த பொழுது ஒரு தரகனைக்கண்டேன். அவன் என்தோழனுகையால் நாங்களிருவரும் சற்றுநேரம் வார்த்தையாடிக் கொண்டிருந்தோம். ஒரு பேர்வழி நமக்குச்செய்து முடிப்பதாக ஒத்துக்கொண்ட காரியத்தில்........." என்றுமயங்கினுன்.

தீனதயாளு மிகுந்த கோபத்துடன் தன் குமாஸ்தாவின் மேல்பாய்ந்து "வெளியே போய்விடு. ஏன் மயங்குகிருய்? யார் அது?" என்று அதட்டிப் பேசினுன்.

மேகநாதன் "பெங்களூர் தரகன்" என்றுன். அதற்கு மேல் அவனுல் ஒன்றுஞ் சொல்லமுடியவில்லை. தீனதயாளு ஓர் நாற்காலியிற் படுத்துக்கொண்டான். அவன் முகம் சலவைக்கல்லைப்போலிருந்தது; உதடு துடித்தது; அவன் நாற்காலியைக் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டிருந்தான். அவனைப் பார்க்கும்போது திடீரென்று வியாதியால் பீடிக்கப்பட்டவன்போலிருந்தான். மேகநாதன் நாற்காலியினருகில்வந்து குனிந்துகொண்டிருந்தான். தீனதயாளு தன் குமஸ்தாவுக்கு அப்பாற்போகும்படி சைகை செய்துவிட்டு நாற்காலியினின்றுமெழுந்தான். தீனதயாளு எப்பொழுதும் தைரியத்தைக்

கவிடமாட்டான். அவன் புன்னகை செய்துகொண்டு தன் கம்பெனி மானேஜரைப் பார்த்து "ஐயா, என்னை மன்னிக்க வேண்டும். திடீரென்று எனக்கு மயக்கம் வந்ததால் இப்படி நடந்துகொண்டேன்" என்று சொல்லிக்கொண்டே கைக்குட்டையை எடுத்து முகத்தைத்துடைத்துக்கொண்டான். பிறகு "மேகநாதா, எனக்கு இப்போதுண்டான நஷ்டம் எவ்வளவென்று உனக்கே தெரியும். ஆகையால் என்மனம் கலங்கிவிட்டது. பயப்படாதே, நடந்தது நடந்துவிட்டது. நீபெங்களூர் தரகனைப்பற்றி ஏதோசொன்னாயே—" என்றான்.

மேகநாதன் தன் எஜமானனுடைய நடவடிக்கையைப்பற்றி யோசித்துக்கொண்டே என்ன சொல்லலாமென்று சிந்தித்துக்கொண்டிருந்தான். பிறகு "ஐயா, நான் அவசரப்படவில்லை யென்று நம்புகிறேன். நான்—"என்று சொல்லிவிட்டு மயங்கினான்.

தீனதயாளு புன்னகை செய்துகொண்டே "மேகநாதா, நீ என்னிடம் ஒன்றும் சொல்லவில்லை யென்பதை மறந்துவிட்டாயே. பெங்களூர் தரகனுக்கு ஏதாவது சம்பவித்ததா என்ன?" என்றான். மேகநாதன்:—"தவறிவிட்டான்" என்று பதில் சொன்னான்.

தீனதயாளு "தவறிவிட்டானா? மேகநாதா, இதுவும் ஓர் கெட்ட சமாசாரந்தான். சரி, 3—ம். நம்பர் கணக்குப்புஸ்தகத்தை எடு" என்றான். மேகநாதன் அதையெடுத்துத் தன் எஜமானனிடங்கொடுத்தான். தீனதயாளு கணக்குப் புஸ்தகத்தைத் திறந்து பார்த்துக்கொண்டிருந்தான். அப்பொழுது அவன் முகம் மேகநாதனுக்குத் தெரியவில்லை. தீனதயாளுவின் முகத்தில் முத்துப்போன்ற வியர்வைத்துளிகள் நிறைந்திருந்தன. அவன் சற்றுநேரம் கணக்குப் புஸ்தகத்தைப்புரட்டிப் புரட்டிப்பார்த்துக் கடைசியில் தான் தேடியதைக்கண்ணுற்றான். உடனே அவன் கணக்குப் புஸ்தகத்தை மூடி அதைத் தன்குமாஸ்தாவினிடங் கொடுத்துவிட்டான். அப்பொழுது "மிகவுங்கெட்டது. ஆனால் நான் நினைத்ததுபோல் அவ்வளவு கெடுதி சம்பவிக்கவில்லை. இன்னும் ஏதாவதுவிசேஷமுண்டா?" என்றான். மேகநாதன் "இல்லை, ஐயா. தினசரிக்கணக்கும் பாஸ் புஸ்தகமும் இதோ இருக்கின்றன. ஏதாவது கடிதங்களுண்டா?" என்றான்.

தீன:—இவ்வளவு தான், வேறொரு விசேஷமுமில்லை.

மேக:—சரி நான் போகலாமா?

தீன:—ஆஹா, போகலாம்.

மேகநாதன் தன் எஜமானனுக்கு வந்தனமளித்து விட்டுக் கதவண்டை சென்றான். அப்பொழுது தீனதயாளு அவனைக் கூப்பிட்டு "உனக்கு எச்சரிக்கை செய்ய மறந்துவிட்டேன். 'அரிதுஸா' வைப்பற்றியாவது பெங்களூர் தரகனைப்

பற்றியாவது ஒருவரிடமுஞ் சொல்லவேண்டாம்" என்றான்.

மேகநாதன்:—நான் சொல்லமாட்டேன்.

தீனதயாளு:— உனக்கு எச்சரிக்கை செய்யவேண்டுவ தில்லை. ஆனாலும் அப்படிச் செய்வது நலமென்று தோன் றிற்று. வந்தனம், நீ போகலாம்." என்றான். மேகநாதன் தன் னிருப்பிடம் போய்ச்சேர்ந்தான். கதவை மூடிக்கொண்டு தீனதயாளு தனியாயிருந்தான்.

இப்பொழுது அவன் முகத்தில் இருள் வந்தடைந்தது. நாற்காலியைப் பின்புறம் தள்ளிவிட்டு நேராக நின்றான்; பிறகு அவ்வறையில் இங்குமங்கும் நடந்துகொண்டிருந்தான்; புருவத்தை நெரித்தான்; அவன்முகக்கட்டை பாறையைப் போல் உறுதியாயிருந்தது; அவனது குளிர்ச்சி பொருந்திய கண்கள் காந்தியை வீசின.

அவன் தனக்குள் "அரிதுஸா என்னுங் கப்பல் அநியாய மாய்ப் போயிற்று. பெங்களூர் தரகனும் பேயோட்டம் காட் டிவிட்டான். ஓர் தெய்வாதீன சம்பவம் நிகழ்ந்தாலன்றி நான் நாசமடைவது நிச்சயம். ஹா! இன்னும் ஆறு மாதகாலம் ஒரு கெடுதியுமில்லாமலிருக்குமானால் என் ஸ்திதி என்னவா யிருக்கும்! என் போன்ற மூடன் எவனுமிரான். 'பேராசை பெரு நஷ்டம்' என்னும் நீதி சரியாய்விட்டது. எனக்குக்கி டைத்தமட்டில் போதுமென்று திருப்தியுடனிருந்திருப்பேனா னால் யாதொரு தீங்கும் நேரிட்டிருக்காது. அதிர்ஷ்டம் என் னை நிராஹரிக்குமென்று நான் முன்னமே அறிந்துகொண்டி ருக்கலாம். கடவுளே! நான் கடைத்தேறுவதெங்ஙனம்? நான்—தீனதயாளு—நாசமடைந்துவிட்டேனே! நான் இழந்த பொருளை மறுபடியும் சம்பாதிக்க முடியாது——முடியாது. முற்றும் நாசமடைவதற்குள் ஏதாவதொருவழி ஏற்பட வேண்டும் நாற்பதினாயிரம் ரூபாய் என்னைக் காப்பாற்றக்கூடும். அதை வைத்துக் கொண்டு இன்னும் ஆறுமாதகாலம் வியா பாரஞ் செய்தால் நான் சுகமடைவேன். நாற்பதினாயிரம் ரூபாய்— நாற்பதினாயிரம் ரூபாய்தான்" என்று தனக்குள் சொல்லிக்கொண்டே நடந்துகொண்டிருந்தான். அவன் சிரசு சற்றே சாய்ந்திருந்தது; கரங்களைப் பின்புறம் வைத்துக் கொண்டிருந்தான். அவன் ஏதேதோயோசனை செய்துகொண் டும் அடிக்கடி "நாற்பதினாயிரம் ரூபாய்—நாற்பதினாயிரம் ரூபாய் தான்" என்று பிதற்றிக்கொண்டுமிருந்தான்.

தீனதயாளு வியாபார விஷயங்களில் கைதேர்ந்தவனா யிருந்தானெனினும் அவன் இளமைப்பருவமுள்ளவனாகவே யிருந்தான். அவன் ஓர் கம்பெனியின் எஜமானனாயும், ஒரு ரெயில்வே கம்பெனியின் டைரெக்டராகவும், ஒரு பாங்கின் பங்காளியாயும், ஒரு இரும்பு ஷாப்பின் மானேஜராயும் இருந் தான். இப்பொழுது அவனுக்குச் சுமார் முப்பது வயதிருக்

கலாம். அவன் தேகவலிமையும் கம்பீரமான பார்வையும் சௌந்தரியமும் வாய்ந்தவன்.

அவன் நல்ல அந்தஸ்தில் இருந்தானென்பது சென்னை வாசிகளுக்கெல்லாந் தெரியும். "தீனதயாளு அண்டு கம்பெனி" என்னும் வர்த்தகசாலை அவன் பெயர்கொண்ட அவன் பாட்டனரால் ஸ்தாபிக்கப்பட்டது. அவர் அந்தக் கம்பெனி நிலைத்திருக்கவேண்டுமென்று செய்த ஏற்பாட்டினுல் நம்முடைய கதை ஆரம்பிக்கும் வரையில் அது சென்னையிலுள்ள பெரிய வர்த்தகசாலைகளி லொன்றாய் விளங்காநின்றது. இந்தக் கம்பெனியை ஏற்படுத்தியவர் வெகுகாலம் அதைச் செம்மையுற நடத்திவந்தார். பிறகு அவர் குமாரர் வர்த்தகஞ் செய்யத் தொடங்கினர். அவர் தன் தகப்பனர் வைத்துப் போன செல்வத்தை வைத்துக்கொண்டு கம்பெனியைப் பலப்படுத்தினர். அவர் திரண்ட செல்வத்தைச் சேகரித்தார்; ஓர் பெரியகிராமமும் வாங்கினர். அவர் காலத்திற்குப் பிறகு தீனதயாளு கம்பெனித் தலைவனானன். அவன் ஏற்கெனவே இருந்த செல்வத்தை வைத்துக்கொண்டு திருப்தியுடனிராமல் மேன்மேலும் பேரவாக்கொண்டு கொஞ்சக்காலத்திற்குள் நல்ல கீர்த்தியையும் சம்பாதித்துக்கொண்டான். சென்னையிலிருந்த வர்த்தகர்களும் இதரமான கனவான்களும் அவனைச் சிறந்தவனாக மதித்தார்கள். அவன் பெயர் சிறு குழந்தைகளுக்கும் தெரியும். ஆனல் அவனுடைய நடவடிக்கை நல்லதா கெட்டதாவென்று ஜனங்கள் அறிந்தார்களில்லை. அவனுடைய அந்தஸ்தை மாத்திரம் கவனித்து வந்தனர்.

தீனதயாளு மிகவும் பாக்கியசாலி. அவனுக்கு நுங்கம்பாக்கத்தில் ஓர் பெரிய பங்களாவும் கோடம்பாக்கத்தில் மற்ருேர் பங்களாவும் உண்டு. அவைகளைப் பார்க்கும்போதே கிராமவாஸம் இப்படிப்பட்ட சுகமுடையதென்று நன்கு விளங்கும். கலியாணமாகவேண்டிய பருவத்தை யடைந்திருக்கும் பெண்களின் பெற்ருேர் தீனதயாளுவின்மேல் கண் வைத்திருந்தனர். ஆனல் அவன் ஒருவரையும் அணுகவில்லை. அவன் ஏன் அப்படி இருந்தானென்பது ஓர் அற்புதமாக இருந்தது. அவன் நல்ல கீர்த்தி வாய்ந்தவன்; செல்வவந்தன்; நல்ல அந்தஸ்துள்ளவன். இப்படிப்பட்ட ஸ்திதியிலிருந்த அவன் இன்னும் ஏன் விவாகஞ் செய்துகொள்ளவில்லை?

இவ்விஷயத்தில் அவன் என்ன எண்ணியிருந்தானென்று ஒருவரும் அறிந்துகொள்ளவில்லை. அவன் மனதிலுள்ளதை மேகநாதனும் அறிந்தவனல்லன். தீனதயாளு பல விஷயங்களைப்பற்றிப் பேசுவான். அவன் சமயோசிதமாய்ப் பேசும் வாக் சாதுர்யம் வாய்ந்தவன். ஏதாவதொரு விஷயத்தைப் பற்றிப்பேசவேண்டுமானல் தகுந்தபதங்களை அமைத்து நன்கு விளங்குமாறும், ஆனல் அவனெண்ணங்களைப் பிறர் அறிந்து

கொள்ள முடியாமற்படிக்கும், பிறரெண்ணங்களைத் தான் அறிந்துகொள்ளும் வண்ணமாகவும் பேசுவான்.

சென்னைவாசிகள் "தீனதயாளு சற்குணசம்பன்னன்; அடுத்தவரை ஆதரிக்கும் வள்ளல்; எந்த விஷயத்தையும் ஆராய்ந்து உணர்பவன்" என்று சொல்வது வழக்கம். அவனது குணம் பொதுவில் நன்கு மதிக்கப்பட்டதாயிருந்தபோதிலும் அதில் சில அம்சங்கள் நம்மால் போற்றற்பாலதன்று. அது புண்ணியம் பாவம் ஆகிய இரண்டும் கலந்ததாயிருந்தது. தீனதயாளு பிடிவாதமுள்ளவன்; பழிக்கஞ்சாதவன்: தைரியமுள்ளவன். ஏதாவது ஒரு காரியம் செய்யவேண்டியிருந்தால்—நல்லதோ கெட்டதோ—அவன் அதைச் செய்தே தீருவான். தன் விருப்பத்தைப் பூர்த்திசெய்வதற்காக அவன் ஒருவரையும் ஆதாரமாக வைத்துக்கொள்ளமாட்டான். தன் எண்ணங்களையே ஆதாரமாகக் கொள்வான்; தன் சுகத்தை இழந்தாலும் இழந்துவிடுவான்; இதரர்களுடைய லாபகஷ்டத்தையுங் கருதான். இதுவரையில் அவன் லாபமடைந்து வந்தான். நம்மிடம் பணமிருக்கும் வரையில் யாதொரு கவலையுமில்லாமல் சந்தோஷமாய்க் காலங் கழிப்போம். கையில் காசுவற்றினல் அப்பொழுது பைத்தியக்காரன் போலாவோம்; பிறரிடத்தில் அருமையை கொள்வோம்; எதை வேண்டுமானுலும் செய்யத் துணிவோம்; மானத்திலும் திருஷ்டி வைக்க மாட்டோம். தற்போது தீனதயாளு அண்டு கம்பெனி தத்தளித்துக்கொண்டிருந்தது. அது க்ஷீணதசைக்கு வந்தால் தீனதயாளுவின் செல்வம் ஒழிந்துபோகும்; அவன் பேராசையும் தொலைந்துவிடும்; சுகம் கஷ்டமாக மாறும்; கௌரவமும் போய்விடும். தீனதயாளு சாய்ந்த தலையோடும் நெரித்த புருவங்களோடும் தன் அறையில் நடந்துகொண்டிருந்தான். விளக்கின் ஒளி அவனுடம்பில் விழுந்தது. அந்த வெளிச்சம் அவன் கைவிரலில் அணிந்திருந்த வைரமோதிரத்தின் மேல் படவே அது ஜ்வலித்தது; அவன் முகம் அந்த வெளிச்சத்தில் கொஞ்சங் கோரமாய்க் காணப்பட்டது. தரையின்மேல் விரித்திருந்த கம்பளத்தின்மேல் நடந்துகொண்டிருந்தானுதலால் அவன் காலடி சப்தங்கேட்கவேயில்லை. அவன் அரைமணிநேரம் இம்மாதிரி நடந்துகொண்டிருந்தான். வரப்போகுந்துன்பத்தை விலக்குவதற்காக அவன் ஏதேதோ யோசனைசெய்துகொண்டிருந்தான். ஒரு விஷயந்தான் துன்பத்தை நீக்கக்கூடும்—நாற்பதினுயிரம் ரூபாய்—நாற்பதினுயிரம் ரூபாய்தான்!

கதவைத் தட்டுஞ் சப்தம் கேட்டது. தீனதயாளு திடீரென்று தன் முகக்குறிப்பை மாற்றிக்கொண்டு "உள்ளே வா" என்றுன். வந்த வேலைக்காரன் "சுந்தரம் வந்திருக்கிறுர்" என்றுன்.

ஒரு கணப்பொழுதில் தீனதயாளுவின் முகத்திலிருந்து

வரிகளெல்லாம் மறைந்துபோயின; அவன் கவலையற்றவன் போலவும், சந்தோஷமுள்ளவன் போலவும், அதிக அழகுள்ளவனுகவுங் காணப்பட்டான். அவன் "சுந்தரம்! வா. உன்னைக் காண அதிக விருப்பமுள்ளவனு யிருக்கிறேன். நீ நடந்து வரவில்லையே? பனியில் நடந்துவந்தால் உன் தேகத்திற்கு ஏதாவது கெடுதி சம்பவிக்கும்" என்றான்.

சுந்தரம் தீனதயாளுவாற் காண்பிக்கப்பட்ட ஓர் நாற்காலியி லுட்கார்ந்தான்.

சுந்தரம் தீனதயாளுவைக்காட்டிலும் வயதில் சிறியவன்; தயாளகுணமுள்ளவன்; புன்சிரிப்போடு கூடிய முகம் வாய்ந்தவன்; மிக்க அழகுடையவன்; அவன் டாம்பீகமாய் உடை தரித்துக்கொண்டு வரவில்லை. அவன் பாதங்களில் புழுதி படாமலிருந்ததால் அவன் வண்டியில் வந்திருக்கலாமென்று தோன்றியது.

சுந்தரம் அவ்வறையைச் சந்தோஷத்துடன் பார்த்துவிட்டு, "தீனதயாளு! இதுதான் உன் அந்தரங்க அறையோ? உன் அந்தஸ்திற்கும் குணத்திற்கும் ஏற்றவாறே அமைந்திருக்கின்றது. எப்படிப்பட்ட வேலையைச் செய்யவேண்டுமென்றாலும் இங்கே கஷ்டந்தோன்றாது. இதை விவாகமாகாதவனுடைய மோக்ஷலோகமென்றே சொல்லலாம். இங்கே நீ ஒருவரையும் வரவிடாதது ஆச்சர்யமானதல்ல. யாராவது இங்கு வந்தால் உன்வேலை தடைப்படும். உன் க்ஷேமலாபம் எப்படியிருக்கிறது?" என்றான்.

தீனதயாளு நாற்காலியில் சாய்ந்துகொண்டு புன்னகையுடன் "கடவுளருளினாலும் உன் போன்றவர்களுடைய தயவாலும் நான் எப்பொழுதும் சுகமாய் வாழ்ந்துவருகிறேன். நீயும் அங்ஙனமே இருக்கிறாயென்று நம்புகிறேன்" என்றான்.

சுந்:—ஆஹா, சுகமாகத்தா னிருக்கிறேன். நான் இப்பொழுது இங்கே வந்ததைப்பற்றி நீ ஆச்சர்யப்படுவாயென்று நினைக்கின்றேன். எதற்காக இங்கு வந்தேன்? தெரிவிப்பார்ப்போம்.

தீன:— வேடிக்கை யார்த்தமாய் வந்திருக்கிறா யென்று நினைக்கிறேன். ஒரு டம்ளர் லெமனேட் எடுத்துக்கொள். இந்தத்தினுசு எனெக்கென்று தனியாய் வரவழைக்கப்பட்டது என்று சொல்லிக்கொண்டே இரண்டு டம்ளர்களில் லெமனேட்டை ஊற்றி அவைகளிலொன்றைச் சுந்தரத்தினிடங் கொடுத்தான்.

சுந்:—நான் கேட்ட கேள்விக்கு இன்னும் மறுமொழி கூறவில்லையே.

தீன:—சிநேகவிஷயமாய் என்னைப் பார்க்கவந்திருக்கலாமென்று எண்ணுகிறேன்.

சுந்:—பிசகு. நீ அதை அறிந்து கொள்வாயென்று

எனக்குத்தோன்றவில்லை. ஆகையால் அதை நானே சொல்லி விடுகிறேன். நான் ஒரு வேலையின் பொருட்டு வந்திருக்கிறேன்.

தீன :—(ஆச்சர்யத்துடன்) மிகவும் ஸந்தோஷம்! நீ நாடி வந்தகாரியம் இன்னதென்று தெரிவிக்கவேண்டும்.

சுந் :— கருணானந்தர் இருந்தாரே, அவர் உனக்குத் தெரியுமா? அழகில் பேர்பெற்ற கமலாஸனியின் தந்தை.—

தீன:—கமலாஸனியைப்பற்றிக்கேள்வியுற்றிருக்கிறேன். நீ சொல்வதுபோலவே அவள் நல்ல அழகுவாய்ந்தவளென்று அநேகர் கூறுகின்றனர்.

சுந்:—சரிதான். அவளைப்பற்றி அநேகர் கேள்வியுற்றிருக்கலாம். அழகில் அவளுக்கு மிஞ்சிய பெண் கிடைப்ப தருமை.

தீன:—வாஸ்தவமாக இருக்கலாம். பிறகு?

சுந்:—நான் கமலாஸனியின் கார்ட்டீணாக நியமிக்கப்பட்டிருக்கிறேன். கார்ட்டீண, டிரஸ்டியா? அதை நீங்கள் என்னவென்று சொல்வது?

தீன:—எப்படிவேண்டுமானாலுஞ் சொல்லலாம். சங்கதியைத் தெரிவி. நான் தெரிந்துகொள்ளுகிறேன்.

சுந்:—கருணானந்தர் செய்தது மிகவும் பரிகஸிக்கத்தகுந்தகாரியம். அவர் மனைவிக்கு ஏதேனுங் கெடுதிசம்பவித்தால் இந்தப்பெண்ணை நான் காலில் கட்டிக்கொண்டு கஷ்டப்படவேண்டும். கமலாஸனி என்னை மதிக்கிறதில்லை—நான்ஒருசிறுவனென்று கருதுகிறாள்.

தீன:—(சிரித்துக்கொண்டே)நீ அவளை விவாகஞ்செய்துகொண்டால் எல்லாஞ் சரியாய்விடும்.

சுந்—: அது முடியாதகாரியம். நான் என்மாமன் மகள் ரத்னாவை மணம் புரிந்துகொள்ளவேண்டுமென்று என் பெற்றோர் முன்னமே ஏற்பாடு செய்திருக்கின்றனர். நாங்களிருவரும் குழந்தைகளாயிருந்தபோதே அந்த ஏற்பாடு நடந்ததாம் தக்ககாலத்தில் அது நிறைவேறிவிடும்.

தீன:—சரி, நீ கோரிவந்த கரியத்தைத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன்.

சுந்:—மித்ரா, நான் வியாபார விஷயத்தில் கொஞ்சமேனும் பழக்கமில்லாதவனென்பது உனக்குத் தெரிந்தவிஷயமே. கருணானந்தர் ஒரு பெரிய கம்பெனிவைத்து அதில் ஏராளமான திரவியந் தேடிவைத்திருக்கிறார். அவர் இறக்குந்தருணத்தில் என்னைத் தன்மகளின் கார்ட்டீணாகநியமித்துவிட்டார். பிறகு நானென்னசெய்வது? அதை ஏற்றுக்கொள்ள வேண்டியதாயிற்று.

தீனதயாளு ஒரு டம்ளரில் லெமனேட்டை ஊற்றி மறுபடியுங்குடித்தான். அவன்அதைக்குடித்தானதும்சுந்தரத்தைப்

பார்த்து, "நீ சொல்வது நன்குவிளங்குகின்றது. கமலாஸனிக்கு ஏராளமான பணமிருந்தால் உனக்கு அதிக வேலையிருக்கும்" என்று ஜாடையாய்ச் சொன்னான்.

சுந்:—அவளுக்கு நாற்பதினாயிரம் ரூபாய் இருக்கிறது. அந்த நாற்பதினாயிரம் ரூபாயும் என்னிடஞ் சிலகாலமிருந்தது. நான் அதைப்பற்றி யாதொரு கவலையு மெடுத்துக்கொள்ளவில்லை. அவர்கள் அதை எங்கேயாவது கம்பெனியில் போட்டு வைக்கவேண்டுமென்று சொல்லுகிறார்கள். வட்டி மிகவும் குறைந்ததாகையால் பாங்கில் போட்டுவைக்க அவர்களுக்கு இஷ்டமில்லை. வியாபாரிகளுக்குக் கொடுத்தால் லாபங்கிடைக்கும். அந்தவிஷயம் எனக்குத் தெரியாது. அதைப்பற்றி விசாரிக்க வக்கீல்களிடம் போக எனக்குச்சம்மதமில்லை. ஏனெனில் ஒரு மாதம்வரையில் அவர்கள் கடிதமெழுதிக் கொண்டிருப்பார்கள். பிறகு தாங்கள் செய்தவேலைக்கு பீஸ் வேண்டுமென்று இருப்பதில் கொஞ்சந்துவாரஞ் செய்வார்கள்.இதைப்பற்றி யோசித்துக்கொண்டிருக்கையில் உன்ஞாபகம் வந்தது. எனக்கு உதவிபுரியக்கூடியவன் நீதான். இம்மாதிரி விஷயங்களில் உன்னைப்போல் அநுபவமுடையவன் வேறெவனுமிரான். எல்லோரும் உன் சாமர்த்தியத்தை மெச்சுகிறார்கள். பணத்தை என்னசெய்யலாமென்று நீதான் சொல்லவேண்டும்.

தீனதயாளுவின் இருதயம் துடித்தது. ஏதேனுமொரு தேவதை அவனுக்குதவிசெய்யுமாறு அவன் பக்கஞ்சென்று சுந்தரம் அவன் வலையில் சிக்கிக்கொள்ளுமாறு அவனை இங்கே இழுத்துக்கொண்டுவந்திருக்குமோ ?

தீன:—(சந்தோஷத்துடன்) சுந்தரம், நீ என்னிடம் இவ்வளவு நம்பிக்கைவைத்திருப்பதற்காக உனக்கு மனதார வந்தனமளிக்கிறேன்.

சுந்:— சந்தேகமின்றி உன்னை நம்புகிறேன். ஏன் நம்பக்கூடாது? ஒருவன்யாரையாவது நம்பியேதீரவேண்டும். இவ்வுலகிலிருக்கும் மற்றெல்லோரையும்விட உன்னையே நம்பலாமென்று எனக்குத் தோன்றுகிறது. தீனதயாளு, நான் சொல்வதைக் காதுகொடுத்துக்கேள். நீ கமலாஸனியையும் அவள் செல்வத்தையும்பற்றிச் சிரத்தை யெடுத்துக்கொள்வாயானால் எல்லாம் நான் நினைக்குமாறே முடிந்துவிடும். சற்று முன்னே, நான் அவளை விவாகஞ் செய்து கொள்ளலாமென்று தெரிவித்தாயல்லவா ? அதை உனக்குச் சொல்லுகிறேன். நான் பரிகாஸமாய்ச் சொல்லவில்லை. அவள் அழகும் அந்தஸ்தும் வாய்ந்தவள். ரத்னாவை நான் மணந்துகொள்ளவேண்டுமென்ற ஏற்பாடில்லாவிடில் எப்படியாவது கமலாஸனியையே விவாகஞ் செய்துகொள்வேன். ஆனால் அவள் என்னை விவாகஞ்செய்யமாட்டாள்.

இதைக்கேட்டதும் தீனதயாளுவுக்கு அடங்காத ஆனந்த

முண்டாயிற்று. அவன் சிரித்துக்கொண்டே "நெடுநாளாய் விவாகமில்லாத எனக்கு இந்த ஏற்பாடு செய்வது மிக்க சந்தோஷத்தை உண்டுபண்ணுகிறது" என்றான்.

சுந்:— நீ கமலாஸனியை எப்பொழுதாவது பார்த்திருக்கிறாயா?

தீன:— இல்லை.

சுந்:—நல்லது, நான் உன்னை ஒரு முறை அங்கே அழைத்துப்போகிறேன், வருகிறாயா? என்று சொல்லிக்கொண்டே நாற்காலியினின்று மெழுந்தான்.

தீன:— ஆஹா, கட்டாயம் வருகிறேன். அவ்வளவு அழகிய பெண்ணைப்பார்க்க யார் தான் விரும்பார்!

சுந்:— சந்தோஷம். பணவிஷயத்தைப்பற்றி ஏற்பாடு செய்கிறாயா?

தீன:— கட்டாயஞ் செய்கிறேன். இன்னும் இரண்டொரு நாளில் அனுப்பு. வேண்டாம்—அவசர மொன்றுமில்லை. இதைக்கேள். நான் தெரிவிக்கும் வரையில் அனுப்ப வேண்டாம். அதைப்பற்றி விசாரித்து உனக்கு எழுதுகிறேன்.

சுந்தரம் அவ்விடம் விட்டுப்போனதும், தீனதயாளு ஏதோ ஒரு பெரிய ஆபத்தினின்றுந் தப்பியவன் போலப் பெருமூச்செறிந்து கலகலவென்று சிரித்தான். அவனுக்குத் தேவையாயிருந்த நாற்பதினாயிரம் ரூபாயும் சமீபத்திலிருந்தது! அவனுடைய சுறுசுறுப்பான மனம் இனி நடக்கவேண்டிய காரியங்களைப் பற்றி யோசிக்கத்தொடங்கிற்று. இப்பொழுது கிடைப்பதாயிருந்த நாற்பதினாயிரம் ரூபாயும் ஆறுமாதகாலத்திற்குப் போதுமென்று அவன் நினைத்தான்; தான் எதிர்பார்த்திருந்த கம்பெனியின் நாசத்தை இந்தப்பணம் நிவர்த்திக்குமென்றெண்ணினான். வாஸ்தவத்தில் அந்தக்கம்பெனி மூடப்படுமானால் தீனதயாளுவின் கதி என்னவாகும்! செல்வம்—கமலாஸனியின் செல்வம்—அவனை விட்டு நீங்கிவிடும். அவன் கமலாஸனியை மணம்புரிந்துகொண்டால் க்ஷேமமடைவான். நாற்பதினாயிரம் ரூபாயும் கமலாஸனிக்குச் சொந்தமானது. அவள் புருஷன் அதைவைத்துக்கொண்டு லாபஞ்சம்பாதித்தால் அவளுக்கு அதுகளிப்பைத்தரும், அஃதன்றி அவன் அதை இழந்து கஷ்டப்படுவானானல் அவளுங் கஷ்டப்படுவாள். தீனதயாளு கமலாஸனியை விவாகஞ் செய்துகொள்ளத்துணிவானோ?

ஏன் துணியக்கூடாது? இதற்கு மறுமொழி கதவைத்தட்டும் சப்தமே. தீனதயாளு எப்பொழுதும் போல் சாந்தமான குரலுடன் "உள்ளேவா" என்றான்.

வேலைக்காரன் அறையினுள்ளே வந்ததும் தீனதயாளுவினிடம் ஒரு கடிதத்தைக்கொடுத்தான், அக்கடிதத்தின்

உறை அழுக்கடைந்துங் கசங்கியுமிருந்தது. அதன்மேல் எழுதியுள்ள விலாசத்தைப் பார்க்கும்போது அக்கடிதம் நடுக்கமுற்ற கையாலெழுதப்பட்டதென்று நன்கு விளங்கிற்று.

தீனதயாளு அந்தக்கடிதத்தைப் பார்த்ததும் அவனுக்கு ஒரு பயங்கரமான எண்ணம்தோன்றிற்று. அந்தக்கையெழுத்தைப்பார்த்தவுடன் அவனுக்கு ஏதோ ஒரு ஞாபகம்வந்தது. அந்தக் கடிதத்தை யார்கொடுத்தார்களென்று அவன் தன்வேலைக்காரனை வினவினுன். அவன் அது ஒரு ஸ்திரீயால் கொடுக்கப்பட்டதென்று பதிலுரைத்தான். தீனதயாளு அவள்காத்திருக்கிருளோ வென்று அவனைக்கேட்டான். அவள் காத்திருக்கிருளென்று தெரிந்துகொண்டு, அவன் தன் வேலைக்காரனை நோக்கி "நான் வேலையா யிருக்கிறேன். அவளை இப்பொழுது பார்க்கமுடியாது" என்ருன்.

வேலைக்காரன் வெளியேசென்றதும் தீனதயாளு கடிதத்தைப்பிரித்துப் பார்த்தான். அதில் எழுதியிருந்த சங்கதிமிகவுஞ் சுருக்கமானது. அதைப்படித்தால் கன்னெஞ்சுடையவனும் கண்ணீர்விடுவான்.

அதில் பின்வருமாறு எழுதியிருந்தது:—

"என்னருமை நாயகருக்கு மிகவும் வணக்கத்துடன் எழுதியது. நான் தங்களை அநேக இடங்களில் தேடிப்பார்த்தேன். நான் உடம்புஸ்வஸ்தமில்லாமல் படுத்துக் கொண்டதும் அவர்கள் என்னை வேறுருவீட்டிற்கு எடுத்துப்போய்விட்டார்கள். அது உங்களுக்குத்தெரியாது. அதுமுதல் நாம் பிரிந்துவிட்டோம். நாம்பிரிந்ததற்கு அதுதான் காரணம்—அல்லவா? அதுமுதல்நான் உங்களைத்தேடிக் கொண்டிருந்தேன். இப்பொழுது தான் உங்களைக்கண்டுபிடித்தேன். நீங்கள் இங்கேநல்ல அந்தஸ்திலிருப்பதால் நான் உங்களெதிரில் திடீரென்றுவரலாமோ வரக்கூடாதோ வென்று பயப்படுகிறேன். என்காதலா! என்னிடம்வாருங்கள். நான் இன்னும் அஸௌக்கியமாகத்தானிருக்கிறேன்; பசியால் வருந்திக் கொண்டிருக்கிறேன். நான் இச்சமயத்தை வெகுநாளாய் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்.

தங்கள் பிரியமுள்ள
பத்மாவதி."

அக்கடிதம் தீனதயாளுவின் கையிலிருந்து கீழே விழுந்தது. அவன் நாற்காலியில் அசைவற்று உட்கார்ந்து விளக்கைப் பார்த்த வண்ணம் ஆழ்ந்தயோசனையிலிருந்தான். அவன் மனம் கடந்த சிலவருஷங்களைப் பின்பற்றிச்சென்றது. சிலவருஷங்களுக்குமுன் அவன் பத்மாவதியைக் கோடம்பாக்கத்தில் முதல் முதல் கண்டது, இப்பொழுது அவன் ஞாபகத்திற்கு வந்தது. அவளைக் கண்டதும் அவன் அவளைக் காதலித்துவிட்டான்——காதலித்ததாக அவன் எண்ணியிருந்தானே யொழிய அது உண்மைக் காதலல்ல—பத்மாவதி அவனை உண்மை

யாகக் காதலித்தாள். இருவரும் ஒருவரை விட்டொருவர் பிரிவதில்லையென்று வாக்குத்தத்தஞ் செய்துகொண்டனர். தீனதயாளு ஒருவருக்குந்தெரியாமல் பத்மாவதியை மணம்புரிந்து கொண்டான். அவன் சிலகாலம் வரையில் பத்மாவதியுடன் கோடம்பாக்கத்தி லிருந்தான். அவன் அப்பொழுது தன்க்கு மிஞ்சிய சுகபுருஷன் வேறெவனுமிரானென்று எண்ணிக் கொண்டிருந்தான். பிறகு அவன் சென்னையிலிருந்து கோடம்பாக்கத்திற்குப்போவதும் வருவதுமாக இருந்தான். அவன் தகப்பனார் காலஞ்சென்றபிறகு அவன் பத்மாவதியிடம் போவதையே நிறுத்திவிட்டான். ஒருவருஷகாலமாகச் சென்னையிலேயே நிலையாய் வசித்ததனால் அவன் மனம் முற்றும் மாறிவிட்டது. 'வெறுந்தீனதயாளு' இப்பொழுது 'தீனதயாளு அண்டுகம்பெனியின் சொந்தக்காரரும், புதுப்பேட்டை மிட்டாதாரரும், ரெயில்வே கம்பெனியின் டைரெக்டருமான தீனதயாளு' என்று மாறிவிட்டான். பத்மாவதியின் கதி என்னவாயிற்று? தீனதயாளு அவளை முன்னே நேசித்ததுபோல் இப்பொழுது நேசிக்கவில்லை. ஆடவர்களைப் பிரமிக்கச்செய்யும் பலவித ஆடைகளையும் ஜிலுஜிலுவென்றுபிரகாசிக்கும் ஆபரணங்களையுமணிந்திருக்கும் சென்னை மாதர்களின் கருங்குவளைக் கண்களைக்கண்டதும் தீனதயாளுவின் மனம் கலங்கிவிட்டது. அம்மங்கையர் அணிந்திருக்கும் வைரநகைகள், பிரகாசத்தில் அவர்களுடைய நேத்திரங்களால் மாத்திரம் தோற்கடிக்கப்படுகின்றன. இவைகளையெல்லாங்கண்ட தீனதயாளு பத்மாவதியை எங்ஙனம் நேசிப்பான்? அவன் அவளை உண்மையாகக் காதலித்திருந்தால்அது நிலைத்திருக்கும் அப்படியன்றி அவன் காமத்தையே காதலென்று பிசகாய் எண்ணியிருந்தான்.

இவ்விஷயத்தில் தீனதயாளு மிக்க பாவஞ்செய்தவனாகிறான். சூதுவாதில்லாமல் வளர்ந்து வந்த பத்மாவதி இத்தகையவனுக்கு எப்படி மனைவியாகக்கூடும்? அவன் பத்மாவதியிடம் போவதை நிறுத்திய பிறகு வாரத்திற்கொருமுறை அவளுக்குப் பணமனுப்பித்துக் கொண்டிருந்தான். ஒருமுறை அவன் பத்மாவதிக்கு எழுதிய கடிதம் அவள் ஊரிலில்லை யென்று திருப்பப்பட்டது. அதைக்கண்டதும் அவனுக்கு ஒரு தைரியம் பிறந்தது. மறுவாரம் எழுதியகடிதமும் அங்ஙனமேதிருப்பப் பட்டது. அதன்பிறகு அவன் கடிதமெழுதுவதையே நிறுத்திவிட்டான். அவன் பத்மாவதியைப்பற்றி விசாரிக்கவில்லை. அவன் இப்பொழுது உலகவிஷயங்களை அறிந்தவனாதலால், தான் முன்பு ஆய்ந்தோய்ந்து பாராமற்செய்துகொண்ட விவாகம் என்றைக்காவது தன் கழுத்துக்குக் கத்தியாக வருமென்பதை உணர்ந்திருந்தான்.

அவன் பயந்திருந்தது சரியாகவே முடிந்தது. அவன் என்ன செய்வது? ஒரு புறம் நாற்பதினாயிரம் ரூபாயோடு

கமலாஸனி இருந்தாள்; மற்றொருபுறம் தன்னை நம்பியிருந்த எளிய பத்மாவதி இருந்தாள். அவன் தன் கொடூரமான பார்வையினாலேயே பத்மாவதியைத் துரத்தி விடலாமென்றறிந்தான். அவன் இப்பொழுது ஒரு நம்பிக்கையற்ற சூதாட்டம் ஆடுபவன்போல் ஆனான். அதன் ஜயம் அவன் உருட்டும் பாச்சிகையினாலேயே ஏற்படவேண்டியதாயிருந்தது. சற்றுநேரம் விளக்கைப் பார்த்தவண்ணம் ஏதோ யோசனை செய்துகொண்டிருந்தான். அவன் நாற்காலியை விட்டெழுந்தபொழுது ஏதோ ஒரு தீர்மானஞ்செய்து கொண்டானென்று அவன் முகக்குறியால் ஏற்பட்டது. அவன் தனக்குள் "சந்தர்ப்பங்களை யனுசரித்தே நடக்கவேண்டும். இந்த விஷயத்தை உடனே முடித்துவிடுகிறேன்" என்றான்.

அவன் தன் வேலைக்காரனைக் கூப்பிட்டு "இந்த யாசகக் கடிதத்தை யார் கொண்டுவந்தது? அவள் மறுபடியும் இங்கே வந்தால் அவளைக் கல்தா கொடுத்துத் தள்ளிவிடு. எனக்கு அவளைப்பற்றி ஒன்றுந்தெரியாது" என்றுசொன்னான். ஆசைக் காதலன் அருமையான மனைவியை இவ்வளவு பக்ஷமாக நடத்தலானான்.

தீனதயாளு அன்றிரவெல்லாம் நாற்பதினாயிரம் ரூபாய் தான் வேண்டும் என்று பிதற்றிக்கொண்டே சரியான நித்திரையில்லாமல் படுக்கையில் புரண்டு கொண்டிருந்தான்.

## 2. கமலாஸனியின் தீர்மானம்.

"கண்மணி! கமலாஸனி, ஸந்தர்ப்பங்களுக்குத் தகுந்தாற்போல் நாம் நடக்கவேண்டியிருக்கிறது" என்று ஸரஸ்வதி தன்மகளிடம் சொல்லிக்கொண்டு அவளோடு ஓரறையில் உட்கார்ந்திருந்தாள்.

இரண்டொருநாளைக்கு முன்னர் சுந்தரம் கமலாஸனியின் அழகைப்பற்றிக் கூறியதெல்லாம் உண்மையே. அவள் பாலபருவமுள்ளவள்; அவளுக்குப் பதினாறு வயதிருக்கலாம். பால்யம் என்னும் மொக்குமலர்ந்து யௌவனம் என்ற புஷ்பமாகப் புஷ்பிக்குந் தருணத்தில் தோன்றும் ரூபலாவண்யம் அவளிடம் பொருந்தியிருந்தது. கருங்குவளை போன்ற அவளது கண்களும், முழுமதிபோன்ற முகமும், கருமேகம் போன்ற கூந்தலும், சங்கம்போன்ற கழுத்தும், வள்ளையை யொத்த செவிகளும், பிடியிலடங்குமிடையும் பார்ப்பவர் மனத்தைக் கவரும்படி யிருந்தன.

கருணாநந்தா இரண்டு மூன்றிடங்களில் பங்களா வாங்கியிருந்தும், ஸரஸ்வதி திருவல்லிக்கேணியிலுள்ள பங்களாவில் வசித்துவந்ததற்குத் தகுந்த காரணமுண்டு. அவள் புதல்வி விவாகமாகவேண்டிய பருவத்தையடைந்திருந்தாள். அவளை நல்ல அந்தஸ்துள்ளவனான சுந்தரத்திற்கு விவாகஞ் செய்து

கொடுக்கவேண்டுமென்பது ஸரஸ்வதியின் அவா. அதற்காக வே அவள் சுந்தரம் தங்கள்வீட்டிற்கு வரவும் தாங்கள் அவன் வீட்டிற்குப் போகவும் சௌகர்யமா யிருக்குமென்று கருதித் திருவல்லிக்கேணியி லிருந்தாள்.

சுருணனந்தர் ஒரு கம்பெனி ஏற்படுத்தி அதில் அதிக லாபஞ் சம்பாதித்தார் அவர் தன் மனைவியை ஏராளமான செல்வத்திற்கு அதிகாரியாக்கிவிட்டுக் காலஞ்சென்றனர். சுந்தரம் கூறியது போலவே, அவர் கமலாஸனிக்கென்று தனியாய் நாற்பதினாயிரம் ரூபாய் வைத்துப்போனார்.

ஸரஸ்வதி திடத்த தேகமும் சிறந்தவனப்பும் உதார குணமும் வாய்ந்தவள். அவள் தன் மகளை மிகவும் நேசித்து வந்தாள். அவ்வளவு செல்வமிருந்தும், ஸரஸ்வதி தன்மகளைச் செல்வவந்தனுக்கே கொடுக்கவேண்டுமென்று பேராசைகொண்டிருந்தாள். அவள் இவ்விஷயத்தைப்பற்றிக் கமலாஸனியை அடிக்கடி வற்புறுத்துவாள்.

கமலாஸனி யாதொரு கவலையுமின்றி ஒரு நாற்காலியில் உட்கார்ந்திருந்தாள். அவள் கையில் ஒரு புஸ்தகமிருந்தது. அவள் மடிமீது ஓரழகிய நாய்க்குட்டி படுத்திருந்தது. அவள் தன் தாயார்சொல்லியதை நினைத்துப் புன்னகை கொண்டனள் பிறகு, நாற்காலியை விட்டெழுந்துபோய் ஓர் நிலைக் கண்ணாடியி னெதிரில் நின்று, தன் பிரதிபிம்பத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

கமலா:— அம்மா, நான் அதைப்பற்றி அடிக்கடி கேள்வியுற்றிருக்கிறேன். ஆனால் அதை நான் நம்பவில்லை. நமக்குண்டாகும் உணர்ச்சியே விஷயங்களை மாற்றிவிடுகின்றது. அம்மா, நான் ஏன் சுந்தரத்தை விவாகஞ்செய்து கொள்ளவேண்டும்? அவருக்கு அம்மாதிரி எண்ணம் தோன்றாமலிருக்கும் போது நாம் ஏன் வலியப்போகவேண்டும்?

அதைக்கேட்டதும் ஸரஸ்வதி பெருமூச்செறிந்து தன் தலையை அசைத்தாள். கமலாஸனி பிடிவாதமுள்ளவளென்பது அவளுக்குத் தெரியும். சுந்தரம் ஒரு ஜமீன்தாரனது பற்றியும் அவனுக்கு வருஷத்தில் முப்பதினாயிரம் ரூபாய்க்குக் குறையாமல் வரும்படி கிடைக்குமென்பதுபற்றியும் ஸரஸ்வதி தன் மகளை அவனுக்கு விவாகஞ்செய்து கொடுக்கவேண்டுமென்று எண்ணியிருந்தாள். ஆனால் இதுவரையில் அவ்விஷயத்தைப்பற்றித் தன்மகளை வற்புறுத்த அவளுக்கு இஷ்டமில்லை.

ஸரஸ்:—கமலா, நீ திருத்தக்கூடாதவளா யிருக்கிறாய். சுந்தரம் நல்ல அந்தஸ்துள்ளவன். அதோடு, அவன் ரூபத்திலும் குணத்திலும் சிறந்து விளங்குகிறான். நீ அவனை லக்ஷியஞ் செய்யாதகாரணம் என்னமோ? மேலும் அவன் நம்மிடம் எப்படி நடந்துகொள்ளுகிறான் பார்த்தாயா? உன்னிடத்தில்

அதிக விசுவாசம் வைத்திருக்கிறான். நீ ஏன் அவனை நேசிக்கக் கூடாது?

கமலா:—அவர் ஒரு வாலிபனைப்போல் நடந்துகொள்ளுகிறாரே யொழிய ஒன்றும் விசேஷமாய்த் தோன்றவில்லையே. மேலும் அவர் விளையாட்டுக் குணமுடையவராயிருக்கிறார்.

ஸரஸ்:—சண்ணே! என்ன சொன்னாய்? வாலிபனா? அங்ஙனங் கூறுவது தவறு. அவன் மிகவும் ஸரஸமாய்ப் பேசுகிறான். அவனைப்போல் வேறு யாரிருப்பார்? இவ்வளவு செல்வமிருந்தும் அவனுக்குக் கொஞ்சமேனுங் கர்வமிருக்கிறதா? அவனைப் பார்த்தால் யாராவது 'அவன் பி—ஏ. பாஸ் செய்தவன்' என்று சொல்வார்களா? அவன் சுபாவம் மிகவும் நல்லது. ஜம்பமென்பதே கிடையாது.

கமலா:—ஆம் அம்மா, நீ சொல்வதெல்லாஞ் சரிதான். அவர் நடவடிக்கை எனக்குக்கூடத் திருப்திகரமாகத்தானிருக்கிறது. பிறருக்குத் தீங்கிழையார்—கோள் சொல்வதைக் கனவிலுங் கருதார்—கபடவேஷந் தரிக்கமாட்டார். அதெல்லாஞ் சரிதான். நான் அவரைப் புருஷனாகவும் அவர் என்னை மனைவியாகவுங் கோராமலிருக்கும்போது நீ சொல்வது எங்ஙனம் நிறைவேறும்? நாங்களிருவரும் சிநேகர்களாயிருக்கிறோமே தவிர அம்மாதிரி எண்ணம் எங்களுக்குத் தோன்றவில்லையே! அவருக்கு என்னை விவாகஞ் செய்து கொள்ளச் சம்மதமிருக்குமானால் அவர் அதை நேராகவோ பிறர் மூலமாகவோ தெரிவிக்கவேண்டுமல்லவா?

ஸரஸ்:—(கடுகடுத்த முகத்துடன்) கமலா! உனக்குக் கொஞ்சமேனுந் தெரியவில்லைபார்த்தாயா! அவனுக்குச் சம்மதமிராவிட்டாலும் நாமாவது நம்முடைய விருப்பத்தைத் தெரிவிக்க வேண்டும். அவன் நம்மிடத்தில் எவ்வளவு விசுவாசமுள்ளவனாயிருந்தாலும், இவ்விஷயத்தைப் பற்றி நம்மிடம் சொல்ல வெட்கமுறமாட்டானா?

கமலாஸனி ஒன்றும் மறுமொழி கூறாமல் நின்றிருந்தாள். அப்பொழுது அவள் முகத்தில் ஒரு விதமான பிரகாசம் தோன்றிற்று. அவள் கண்களில் துணிவும் வெறுப்புங் கலந்த ஒளி வீசியது. அவள் அப்பொழுது மிகவும் அழகுடையவளாகக் காணப்பட்டாள்.

ஸரஸ்வதி தன் மகளுடைய வடிவழகைக் கண்டு, பெருமையுடன், "கண்மணி! அவனுக்கு முன்னமே உன்மேல் ஆசையில்லாமலிருந்தால் இப்பொழுது உன்னைக் கண்டால் காதலிப்பானென்பதில் சந்தேகமில்லை" என்றாள்.

அதைக்கேட்டதும் கமலாஸனிக்கு மிக்ககோபமுண்டாயிற்று. சாதாரணமான சமயங்களில் அவள் தன் தாயாரை எதிர்ப்பதில்லையென்றாலும், தற்சமயம் அவள் எதிர்த்தே தீரவேண்டியிருந்தது. விவாகத்தாலுண்டாகும் நன்மை தீமை

களைக் கமலாஸனி அநுபவிக்க வேண்டுமேயன்றி ஸரஸ்வதி யா அநுபவிப்பாள்? ஆனதுபற்றி இவ்விஷயத்தில் தன்னிஷ்டம்போல் நடக்கவேண்டுமென்று கமலாஸனி தீர்மானிக்கலானாள். அவள் கடைசியாக "அம்மா, நான் சுந்தரத்தை விவாகஞ்செய்துகொள்ள மாட்டேன்" என்று கூறினாள்.

ஸரஸ்:—என் அருமைக் கண்மணி! நீ இப்படிச் சொல்வது என்னை எவ்வளவு வருத்துகிற தென்பதை நீ அறியவில்லை பார்த்தனையா! கண்ணே! நீ அங்ஙனம் சொல்லக்கூடாது. சுந்தரம் ஒரு ஜமீனுக்கு அதிபதி. அவனுக்கு வருஷத்தில் முப்பதினாயிரம் ரூபாய் வரும்படி கிடைக்கிறது. அந்த ஜமீன் நவாபுகாலம் முதல் அவர்களுக்குச் சொந்தமாயிருக்கிறது.

கமலா:—அப்படியானால் நான் அவரை மணம்புரிந்து கொள்ளவேண்டுமோ? அம்மா, இப்படி என்னைக் கட்டாயப்படுத்துவதால் நீ எனக்கு மிகுந்த துன்பத்தை விளைவிக்கிறாய். சுந்தரம் என்னிடத்தில் சாதாரண சிநேகம் வைத்திருக்கிறாரேயன்றி விசேஷமாய் நடந்து கொள்வதில்லை. அவர் ஜமீன் நவாபுகாலம் முதலல்லாமல் ராமர் காலம் முதல் நிலைத்திருந்தாலும், நம் தேசத்திலுள்ள வெள்ளி, பொன், நவரத்தினங்கள் முதலிய யாவும் அவருக்குச் சொந்தமாயிருந்தாலும் நான் அவரை விவாகஞ்செய்து கொள்ளமாட்டேன். என்னை அதிகப் பொருளுள்ளவனுக்கு விற்றுக் கொள்வதைவிட அதோ போகிற பாதசாரியையாவது மணம் புரிந்து கொள்வேன். (என்று சுட்டிக் காட்டினாள்.)

ரோட்டில் சென்றவன் கமலாஸனி தன்னைச் சுட்டிக் காட்டியதைப் பார்த்ததும் மந்திரத்தால் கட்டுண்டவன்போலப் பிரமித்து நின்றான். அவள் தன்னை ஏன் சுட்டிக்காட்டினாளென்று அவனுக்கு ஏற்படவில்லை. அவன் நின்றவிடத்திலிருந்தே சுட்டிக்காட்டிய கையுடன் நின்றிருந்த கமலாஸனியைக்கண்டு அது ஓர் சித்திரப்பாவையோவென்று சந்தேகித்தான்!

ரோட்டில் சென்று கொண்டிருந்தவன் திடீரென்று நின்றதைக் கமலாஸனி கண்டாள். இருவர் கண்களும் சந்தித்தன. கமலாஸனியின் மனத்தில் வழிப்போக்கனுடைய உருவமும் அவன் மனத்தில் கமலாஸனியின் உருவமும் நன்றாய் ஊன்றிவிட்டன. அவைகளை மரணந்தான் துடைத்தல் கூடும்!

அந்த வழிப்போக்கன் பார்த்தது, கோபக்குறியோடு கூடிய முகத்துடன் கையை நீட்டிக்கொண்டு நின்றிருந்த ஒரு பெண். அவளை அப்போது ஒரு சித்திரவேலைக்காரன் பார்த்திருப்பானாகில், தான் நல்ல பெயர் சம்பாதித்துக்கொள்ளும் பொருட்டும் லாபமடையும் பொருட்டும் அவளுருவத்தைப் படத்திலமைத்து விடுவான். கமலாஸனி ஜன்னல்வழி

யாய்ப்பார்த்தது, களங்கமற்ற முகமும் வலிமையுள்ள தேகமும் வாய்ந்த ஒரு யௌவன புருஷன். அவனது கரிய கண்களைப் பார்க்கும்போதே அவன் இனிய குணம் வாய்ந்தவனென விளங்கும். அவனது நெற்றியில் ஆழ்ந்த யோசனை செய்ததனாலுண்டான வரிகளிருந்தன.

"கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்களென்ன பயனுமில." கமலாஸனி அவனைப் பார்த்த மாத்திரத்தில் அவனது குணங்கள் யாவும் அவளுக்கு நன்றாய் விளங்கின. அவன் தரித்திருந்த வஸ்திரம் அழுக்கில்லாமலும் அதிக விலையுள்ளதாயில்லாமலு மிருந்தது; அவன் அணிந்திருந்த சட்டையும் டாம்பீகமானதன்று—மற்ற விஷயங்களைக் கவனிக்க நேரமில்லை—அந்த நிமிஷம் பறந்துபோய் விட்டது.

அந்த வழிப்போக்கன், கமலாஸனி தன்னைச் சுட்டிக்காட்டியது தனக்குக் காட்டிய சைகையாயிராதென்று உணர்ந்து சாய்ந்த தலையுடன் தன் வழியே சென்று கொண்டிருந்தான்.

மாந்தர்களின் இருதயம் மிகவும் விசித்திரமானது! அந்த வழிப்போக்கன் அவ்விடம் விட்டுப்போனவுடன் கமலாஸனியின் மனத்தில் ஓர் விசனகரமான எண்ணந்தோன்றிற்று. அவனைத் தான் மறுபடி எங்ஙனங் காண்பதென்று அவள் வருந்தினாள். அவள் கண்களிலிருந்த கோபக்குறி நீங்கிவிட்டதும் மெய்ம்மறந்தவளாய் யாதும் பதில் பேசாது தன் தாயார் செய்துகொண்டிருந்த பிரஸங்கத்தைக் கேட்டுக்கொண்டிருந்தாள். கடைசியாக ஸரஸ்வதி "கமலா, உனக்கு இதுவரையில் எத்தனை வரன் வந்திருக்கிறது?" என்றனள்.

கமலா—(அலக்ஷியமாய்) எனக்குத்தெரியாது. இரண்டு—மூன்று—ஐந்து—ஆறு—எனக்கு ஞாபகமில்லை. அதைப் பற்றி இப்பொழுது ஆவதென்ன? உன்னிஷ்டம் போலவே நான் அதையெல்லாம் மறுத்துவிட்டேன்.

ஸரஸ்—கண்ணே! நற்குணமுள்ள பெண்ணைப்போலவே நீ உன் தாயாரின் புத்திமதியின்படி நடந்துவந்தாய். கமலா, அமைதியுடன் காத்திரு— நல்லகாலம் வரும். சுந்தரம் உன்னிடம் பிரீதி வைத்திருக்கிறானென்பது எனக்குத் தெரியும். நான் உன்னை அவன்மனைவியாகப் பார்க்குங்காலம் வருமென்று நம்பி யிருக்கிறேன்.

கமலாஸனி தன் தாயார் சொல்லியதில் வெறுப்புற்றவளாய் அவ்விடம் விட்டுப் புறப்பட்டாள். அவள் "அம்மா, இன்றிரவு நம்வீட்டில் விருந்து நடக்கிறதா? அதற்கு நான் நல்ல ஆடையாபரணங்களை யணிந்துகொள்ள வேண்டுமோ? என்று கேட்டாள்.

ஸரஸ்:— சந்தேகமில்லாமல்—மறந்துவிட்டாயா என்ன? கண்ணே! நீ எதையும் மறந்துவிடுகிறாயே! சுந்தரம் இன்றிரவு இங்கே வருவான். அவன் தீனதயாளுவையும் அழைத்து

வருவதாகச் சொல்லியிருக்கிறான்.

கமலா:—அப்படியா! தீனதயாளு என்பவர் யார்?

ஸரஸ்:— அவர் சென்னையிலிருக்கும் தனவந்தர்களி லொருவர். மேலான செல்வாக்கு வாய்ந்தவர். அவரைப்பற்றி நீ இது வரையில் கேள்வியுறாமலிருப்பது எனக்கு ஆச்சரியத்தை விளைவிக்கின்றது. அவர் சுந்தரத்தின் சிநேகர். நீ இது வரையில் அலக்ஷியமாயிருந்ததுபோலிராமல் இன்று சுந்தரத்தை உற்சாகப்படுத்துவாயென நம்புகிறேன்.

இதைக்கேட்டதும் கமலாஸனி கோபமேலீட்டினால் புன்னகைசெய்து அவ்வறையை விட்டகன்றாள். அவள் தனக்குள் "அவனை உற்சாகப்படுத்தவாவேண்டும்? நான் பொழுதுபோக்காக ஜனங்களை நகையூட்டச் சம்பளம் வாங்கும் வேஷதாரியோ? அம்மா! உன் விவேகத்தை நானென்னென்று கூறுவேன்!" என்றனள்.

அன்றிரவு அந்தப் பங்களாவின் ஓரறை காந்தவிளக்குகளால் அலங்கரிக்கப் பட்டிருந்தது. அந்த விளக்குகளின் ஒளி அவ்வறையிலிருந்த சிங்காரமான பொருள்களின்மீதும் சுவரில் ஒட்டியிருந்த வர்ணக்கடுதாசிகளின் மேலும் விழவே அவ்வறை மிகவும் மனோகரமாய்க் காணப்பட்டது.

அன்றிரவு இரண்டு கனவான்களுக்கு விருந்துசெய்ய வேண்டுமென்று ஸரஸ்வதி ஏற்பாடு செய்திருந்தமையால் அவள் சமையற்காரனை அழைத்து அதிவிமரிசையாய்ச் சமையல் செய்யும்படி கட்டளையிட்டிருந்தாள். சமையற்காரன் அங்ஙனமே பக்குவமாய்ச் சமைத்து வைத்துவிட்டு, சமைத்த பதார்த்தங்களை மிகவுந்திருப்திகரமான பார்வையுடன் பார்த்துக்கொண்டிருந்தான்.

ஏழேமுக்கால் மணி ஆயிற்று. விருந்தினர் வருஞ்சமயமும் நெருங்கிவிட்டது. ஸரஸ்வதி தன்னை நல்ல ஆடையாபரணங்களால் அலங்கரித்துக்கொண்டு விருந்தினரை வரவேற்பதற்காக முன் புறத்திலுள்ள ஹாலில் உட்கார்ந்திருந்தாள்.

அவள் வெறுப்புடன் கெடியாரத்தைப்பார்த்தாள். அவள் வெறுப்புக்குக்காரணம் கமலாஸனி அவ்விடம் வாராமலிருந்ததே! சுந்தரமும் அவன் நண்பனும் வருஞ்சமயமாயிற்று. தன் மகள் அவர்களை வரவேற்கவேண்டுமென்பது ஸரஸ்வதியின் அபிப்பிராயம். ஆனால் அவளெண்ணம் சிதையும்படி நிகழ்ந்தது.

ஒரு மோட்டார்கார் வருஞ்சப்தம் ஸரஸ்வதியின் காதில் விழுந்தது. அந்த வண்டி பங்களாவாயிலில் வந்து நின்றது. விருந்தினர் வந்துவிட்டனர். முதலில் சுந்தரம் உள்ளேவந்தான். அவன் எப்பொழுதும் போல் விளையாட்டுத்தனமுடையவனாயும், கபடமற்றவனாயும், சந்தோஷமுள்ளவனாயு மிருந்தான். அவன் உடை சாதாரணமானதாயிருந்தது. அவன் இடுப்பில்

சலவை மல் உடுத்திருந்தான். அவன் அணிந்திருந்த சொக்காய் பட்டென்றாலும் அவ்வளவாய் விலையேறப்பெற்றதன்று. அவன் காலில் ஜோடில்லாமலிருந்தான். தலையில் ஒரு பணிக்குல்லாய் தரித்திருந்தான். அவன் காதிலணிந்திருந்த வைரக்கடுக்கனும் கைவிரல்களில் அணிந்திருந்த வைர மோதிரங்களும் விளக்கின் ஒளியில் பிரகாசித்தன.

அவன் உள்ளே வந்ததும் ஸரஸ்வதியை நோக்கி "அம்மா, தீனதயாளு வந்திருக்கிறார், அழைத்து வரலாமா?" என்று கேட்டான்.

தீனதயாளு முன்னமே சுந்தரத்தைப் பின்பற்றி உள்ளே சென்றிருந்தான். அவனைக்கண்டதும் ஸரஸ்வதிக்கு அளவிலடங்காத ஆனந்தமுண்டாயிற்று. நல்ல அந்தஸ்துள்ளவர்களைக் காணும் போதெல்லாம் அவளுக்கு மகிழ்ச்சியுண்டாவது வழக்கம். அவள் தன் மகள் அங்கே வராமலிருந்ததை நினைத்து வருத்த முற்றாள். அவள் புன்னகை செய்துகொண்டே இரண்டு கனவான்களிடத்திலும் பேசிக்கொண்டிருந்தாள்.

சுந்தரம் ஸரஸ்வதியின் க்ஷேமலாபங்களை விசாரித்துக் கொண்டிருந்தான். தீனதயாளு அதிகமாய்ப்பேசவில்லை; சில ஸந்தர்ப்பங்களில் இரண்டொருவார்த்தை சொன்னான். அவன் ஸரஸ்வதியின் முகத்தைப்பார்த்து, ஒரு புஸ்தகத்தைப்படித்து அதிலிருக்கும் விஷயங்களை யுணர்வதுபோல், அவள் குணங்களைத் தெரிந்துகொண்டான். அவள் செல்வாக்குள்ளவர்களிடம் சிரித்துப்பேசுபவளென்றும் அந்தஸ்தில்லாதவர்களை அலக்ஷியஞ் செய்பவளென்றுந் தீனதயாளு அறிந்துகொண்டான். அவள் தான் வந்ததைப்பற்றி ஸந்தோஷமடைந்தாளென்பதையுணர்ந்து அவன் தனக்குள் நகைக்கலானான்; தன்னெண்ணம் தடையில்லாமல் நிறைவேறுமென்று அவன் நம்பியிருந்தான்; ஸரஸ்வதி கமலாஸனியைத் தனக்கு விவாகஞ் செய்து கொடுக்கச் சம்மதிப்பாளென்று அவனுக்குத் தோன்றிற்று. ஆனால் பத்மாவதியை என்ன செய்வது? அவன் அவள் விஷயத்தைப்பற்றி இன்னும் ஒரு தீர்மானமும் செய்யவில்லை. ஸந்தர்ப்பங்களை யனுசரித்தே செய்யவேண்டியதாயிருந்தது. இங்கே வந்து ஸரஸ்வதியின் குணங்களைக் கண்டறிந்ததும் அவன் மனதில் ஒரு எண்ணந்தோன்றிற்று. பத்மாவதியை—

அவன் தனக்குள் இம்மாதிரி யோசனை செய்துகொண்டிருக்கையில் கதவைத் திறந்துகொண்டு யாரோ அவ்விடம் வந்த சந்தடி கேட்டது. வருவது கமலாஸனியாயிருக்கலாமென்று அவன் யூகித்தான்.

ஸரஸ்:— கமலா, இந்நேரம் எங்கிருந்தாய்? சுந்தரமும் அவர் நண்பரும் வெகு நேரமாய் இங்கிருக்கிறார்களே.

தீனதயாளு கமலாஸனியைக் கண்டதும் தனக்குள் "ஆஹா! சுந்தரம் சொல்லியது மிகவும் ஸரி. இவள் ரம்பை

யைப்போலிருக்கிறுளே!" என்று மனதில் எண்ணிக்கொண்டான்.

அவன் கமலாஸனியை இமை கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்தான். அவன் வாஸ்தவத்தில் அவளைக் காதலித்தானோ அல்லது அவளிடமிருந்த செல்வத்திற்காக அவளை மணம்புரிய எண்ணினுனோவென்பது விளங்கவில்லை.

கமலாஸனி தீனதயாளுவைக் கண்டதும் வெறுப்புடன் முகத்தைத் திருப்பிக்கொண்டாள். அவள் அவனை வெறுத்தளோ? பெண்களின் இயற்கையறிவு மிகவும் விசித்திரமானது!

சற்றுநேரத்திற்கெல்லாம் கமலாஸனி அவ்விடம் விட்டு நீங்கி ஓர் தனி யிடஞ்சென்றனள். அவள் வெகுநேரம் தனக்குள் ஏதேதோ யோசனை செய்து கடைசியாக ஒரு முடிவு செய்துகொண்டாள். தன்னைச் செல்வ வந்தனுக்கு விற்றுக்கொள்ளக்கூடாதென்பதே கமலாஸனியின் தீர்மானம்.

## 3. சுட்டிக் காட்டியது எதற்காக?

ஒரு பேர்வழி திருவல்லிக்கேணிக் கடைத்தெருவின் வழியாய் மவுண்டுரோட்டுக்குச் சென்று கொண்டிருந்தான். அவன் எல்லாக் கம்பெனிகளையுங் கடந்து, கடைசியாக ஒரு சிறிய ஷாப்பிற்குச் சென்று அதன் கதவைத் திறந்துகொண்டு உள்ளே நுழைந்தான்.

அந்த ஷாப்பின் கீழறையில் சலவைக் கல்லாற்செய்யப்பட்ட சிலைகளும், களி மண்ணும், பலவித உருவங்களும் நிறைந்திருந்தன. அவ்வறை சிறியதாயிருந்த தெனினும் பார்வைக்கு அழகாகக் காணப்பட்டது. அவ்வறையின் சுவர்கள் அலங்கரிக்கப் பட்டிருக்கவில்லை. தலைகள், கால்கள், கைகள் முதலிய அவயவங்கள் அங்கங்கே வைக்கப்பட்டிருந்தன. ஒரு புறத்தில் பாதம் வரையில் மணலிற்புதைந்திருந்த பெண் சிலையொன்று நிறுத்தப்பட்டிருந்தது. அந்தச் சிலை நம்பிக்கையின்மை, பயம் முதலிய குறிகள் அமைந்திருக்கப்பெற்றது. அதன் தலை மயிர் காற்றில் அசைவது போலிருந்தது. சுவரின்மேல் 'செல்வராஜன்' என்று வரைந்துள்ள பலகையொன்று ஒரு புறத்தில் விளங்கியது. அவ்வறையின் மத்தியில் ஈரத்துணியால் மூடப்பட்ட சிலையொன்று நிறுத்தியிருந்தது. அங்கே நாற்காலிகளாவது மேஜைகளாவது அதிகமாகக் கிடையாது.

மாடியின்மேல் ஒரு சிறிய ஹால் இருந்தது. அதில் ஒரு மேஜையும், ஸோபாவும், இரண்டு மூன்று நாற்காலிகளும் போடப்பட்டிருந்தன. கஷ்டப்பட்டு வேலைசெய்பவன் சௌக்கியமாய்ப் பொழுதுபோக்க அதுவே தகுந்த இடமாகும். அவ்வறை அதிக உயரமில்லாமலும், சாய்ந்த கூரையையுடை

யதாயுமிருந்தது. வெளிச்சமுங் காற்றும் வருவதற்காக அந்த ஹாலில் இரண்டு ஜன்னல்கள் வைக்கப் பட்டிருந்தன. தரையின்மேல் இரண்டு இரத்தினக் கம்பளங்கள் விரித்திருந்தன.

அந்த ஷாப்பின் சொந்தக்காரன் கீழறையிலிருந்த ஒரு பெஞ்சியின் மேற்சாய்ந்த வண்ணம் நின்றிருந்தான். அவனுக்குச் சுமார் இருபத்தைந்து வயதிருக்கலாம். அவன் முகத்தைப் பார்க்கும்போதே அவன் சிற்ப வித்தையில் நிபுணனென விளங்கும். அவன் தேகமுங் கண்களும் கருமை நிறம் வாய்ந்திருந்தன. அவன் நற்குடிப் பிறப்புவாய்ந்தவனென்று எவருக்குந் தோன்றலாகும். அவன் பெஞ்சியின் மேற்சாய்ந்து கொண்டே கையில் சிறிது களி மண்ணை வைத்துக்கொண்டு அதைப் பலவித உருக்களாகும்படி இழுத்துக் கொண்டிருந்தான். சற்றுநேரம் இழுத்ததும் அது முகமாகத்தோன்றிற்று. அதை நீளமாக இழுக்க ஆரம்பித்தான். அப்பொழுது அந்த முகம் விசனகரமாகத் தோன்றிற்று. அதைத் தன்னிருகரங்களுக்கு மிடையில் வைத்து அழுத்தினான். உடனே அந்த முகம் ஸ்தூலித்ததாயும் சந்தோஷமுள்ளதாயுங் காணப்பட்டது. அதைப் பார்த்தவுடன் அதைச் செய்தவன் நகைக்க ஆரம்பித்தான்.

கதவைத் தட்டுஞ் சப்தங்கேட்டது. உடனே அந்தச் சிலை வேலைக்காரன் தன் கையிலிருந்த களிமண் உருண்டையை ஓர் பெட்டியிலிருந்த களிமண்ணிற் போட்டுவிட்டான்.

கதவைத் திறந்ததும் ஒரு யௌவன புருஷன் உள்ளே வந்தான். அவன் சந்தோஷத்துடன் "செல்வராஜா! எப்படியிருக்கிறாய்?" என்றனன்.

செல்வராஜன்:—ஒன்றுந் திருப்திகரமாக இல்லை. வேலையின் மேல் மனம் நாடவில்லை.

அவன்:—பரிகாசஞ் செய்கிறாயோ? உன் போன்ற சாதுர்ய முள்ளவர்களின் வார்த்தையின் பொருளை யுணர எனக்குச் சக்தியில்லை. சிலைவேலை செய்வதில் நிபுணனான உனக்கு என்ன குறை? கொஞ்ச நாளைக்கு முன் செய்த பெண்சிலையால் உனக்கு நல்ல பெயர் வந்துவிட்டது. அப்படியிருக்க, உனக்கு வேலையின்மேல் விருப்பமில்லாத காரணம் என்ன?

செல்வ:—அதன் காரணம் இன்னதென்று எனக்குத் தோன்றவில்லை. என் மனம் ஒருவாறு கலங்கியிருக்கிறது.

அவன்:—ஏன் அப்படி யிருக்கவேண்டும்? நீ கஷ்டப்பட வேண்டிய காலம் ஒழிந்துவிட்டது. நீ அந்தப் பெண் சிலையை முடித்தது முதல் நல்ல பொருள் சம்பாதித் திருக்கவேண்டுமே.

செல்வ:—(சிரித்துக்கொண்டே) ஆமாம், நான் லக்ஷாதிகாரியாய் விட்டேன்! அதோ, முகம் வேலை தீராத பெண்சிலை

இருக்கிறதே, அதை விற்றுவிட்டேன். அதை ஒருவாரத்திற்கு முன்னேயே வாங்கினவர்களிடங்கொடுத்திருக்கவேண்டும். இந்த ஷாப்பில் விலையுயர்ந்த சாமான்களிருக்கின்றன. பல்லாவரத்தில் ஒரு பாழடைந்த வீடு இருக்கிறது. அதைப் பழுதுபார்க்கக் கூடச்சக்தியற்றவனு யிருக்கிறேன்.

அவன் :—உன் முக்கியமான ஆஸ்தியை மறந்துவிட்டாயே!

செல்வ :—அதென்ன?

அவன் :—உன் சாமர்த்தியம்.

செல்வ:—முக்கியமான ஒரு பொருளில்லாமல் சாமர்த்தியம் இருந்தென்ன பயன்?

அவன் :—செல்வப் பொருளா?

செல்வராஜன் 'சந்தோஷ வாழ்வு' என்பதற்குப் பதிலாக 'முக்கியமான ஒரு பொருள்' என்றான்.

செல்வ :—ஆமாம், எனக்குச் சாமர்த்திய மிருப்பதாகச் சொல்லுகிறாய். இப்பொழுது வீட்டைப் பழுதுபார்க்கப் பணந் தேவை யாயிருக்கிறது. சாமர்த்தியத்தினுல் பணங் கிடைக்குமாவென்று பார்க்கவேண்டும்.

அவன் :—"நல்லது, நான் போய் வருகிறேன். நீ எப்படி யிருக்கிறாயென்று பார்த்துப்போக வந்தேன். போய் வருகிறேன். (என்று சொல்லிக்கொண்டே அந்த ஷாப்பை விட்டுப் போனான்.)

செல்வராஜன் அவ்வறையின் மத்தியிலுள்ள சிலையின் மேல் மூடியிருந்த ஈரத்துணியை எடுத்துவிட்டான். அந்தச் சிலை அலையிலிருந்து எழும்பும் ஒரு பெண்ணைப்போல் செய்யப்பட்டிருந்தது. அதன் ஒவ்வொரு அவயவமும் அலங்காரமாய்க் காணப்பட்டது. அது நம்பிக்கை சந்தோஷம் முதலிய குறிகளோடு கூடியிருந்தது. அதன் எல்லா அவயவங்களும் பூர்த்தியாய் விட்டன. முகம் மாத்திரந் தீரவில்லை. செல்வராஜன் சற்றுநேரம் அதை உற்று நோக்கிவிட்டுப் பிறகு ஒரு பலகையின்மேலேறினான். அவனது மெல்லிய விரல்கள் மிக்க பழக்கத்தால் விரைவில் வேலைசெய்யத் தயாராயிருந்தன. அவன் வேண்டிய போதெல்லாம் தன் சட்டைப்பையிலிருந்த சாமான்களிற் சிலவற்றை யெடுத்துச் சிலபாகங்களை மழமழப்பாக்கிக் கொண்டும், சில பாகங்களைச் செதுக்கித் தள்ளிக்கொண்டுமிருந்தான். அவன் விரல்களின் வேகத்தினுலேயே வேலை நடக்கவேண்டியதாயிருந்தது. கொஞ்சங் கொஞ்சமாய் முகந்தோன்ற ஆரம்பித்தது—மூக்கு, கண், வாய்—முதலியவை முதலிற் கரடு முரடாய்க் காணப்படும். அதன் பிறகு நன்றாய் இழைத்தால் முகம் சன்னமாகும்; அப்பொழுது தான் அது அழகாகத் தோன்றும்.

அந்த நிலைமையை யடைவதற்கு முன்னமே செல்வ

ராஜனுக்கு அதிருப்தி யுண்டாயிற்று. அவன் சற்று நிதானித்துத் தான் செய்த வேலையைக் கவனத்துடன் பார்த்தான். பிறகு அவன் வெறுப்புள்ளவனாகி, வேலை செய்வதை நிறுத்திவிட்டான். அந்தச் சிலையின் முகம் இப்பொழுது ஒரு முட்டையைப் போலிருந்தது.

செல்வராஜன் மறுபடியும் பெஞ்சியண்டை சென்று, அதன் மேற்சாய்ந்து கொண்டு நின்றான். தன் கண்முன் ஒரு பெண்ணினுருவந் தோன்றிக் கொண்டிருந்ததால் அவன் கலக்கமுற்றான் இந்த ஷாப்பின் சொந்தக்காரனான செல்வராஜனை கமலாஸனியைப் பார்த்துவிட்டுத் திருவல்லிக்கேணியிலிருந்து மவுண்ட்ரோட்டுக்கு வந்து ஷாப்பிற்குள் நுழைந்தபோ வழி. தன்னைச் சுட்டிக்காட்டிய பெண்ணினுருவமே இப்பொழுது அவன் கண்முன் தோன்றிற்று. அவன் சற்றுமுன்னர் தன் நண்பனிடம் "வேலையின்மேல் மனம் நாடவில்லை" என்று கூறியதற்குக் காரணம் இது தான். அது எல்லோருக்குமுண்டாவது இயற்கையன்றோ? எப்படிப்பட்ட சித்த ஸ்வாதீனமுள்ளவனுக்கும் இந்த உணர்ச்சி உண்டாகாமற்போகாது. அந்தப் பெண் வெறுப்புடனும் பிடிவாதத் துடனும் நின்று கொண்டிருந்ததைப் பார்த்தது முதல் தன் மனம் ஒருவாறு கலங்கிவிட்டதென்று செல்வராஜன் உணர்ந்தான். கமலாஸனி ஏன் இவனைச் சுட்டிக் காட்டினாள்? ஒரு வேளை இவனைப் பரிகாசம் செய்தாளோ? இல்லை; அவள் முகக்குறி அம்மாதிரி இருக்கவில்லை. அவள் வதனத்தில் கோபக்குறி பெருமை முதலியவைகள் இருந்தன. பரிகாசக் குறியே தோன்றவில்லை. அநேக முகங்களைப் பார்த்தும் செய்தும் இருக்குஞ் செல்வராஜனுக்குக் கமலாஸனியின் முகக்குறி இன்னதென்று தெரியாதா? அவள் ஏன் இவனைச் சுட்டிக் காட்டினாள்?

காலம் விரைவிற் சென்று கொண்டிருந்தது. செல்வராஜன் இன்னும் பெஞ்சியின் மேற்சாய்ந்த வண்ணம் எதோ யோசனை செய்துகொண்டிருந்தான். கமலாஸனியின் முகம் அவன் கண்ணெதிரிலேயே இருந்தது. அவன் அதைத் தெளிவாய்ப் பார்த்துக் கொண்டிருந்தான். அவள் கண்களில் அனல் வீசியது; பேச வாயெடுப்பதுபோல் உதடுகள் அசைந்தன. சற்றுநேரஞ் சென்றதும், அவன் சற்றுமுன்னே வேலை செய்து கொண்டிருந்த பெண் சிலையண்டைபோய் மறுபடியும் வேலைசெய்யத் தொடங்கினான். அவன் மிக்க சந்தோஷத்துடன் "இந்தச் சிலையின் முகம் அந்தப் பெண்ணின் முகத்தைப் போலவே இருக்கவேண்டும்" என்றான்.

அவன் அந்தப் பெண் தன்னைச் சுட்டிக்காட்டியது எதற்காக வென்று வெகு நேரம் யோசித்துப் பார்த்தும் ஒன்றும் விளங்கவில்லை யாதலால் மனக்கலக்கத்துடன் வேலைசெய்து கொண்டிருந்தான்.

## 4. கமலாஸனி கண்ட அதிசயம்.

செல்வராஜன் செய்துகொண்டிருந்த சிலையை வாங்கின வர் எடுத்துக் கொண்டுபோன மூன்று வாரங்களுக்கெல்லாம், ஒருநாட் சாயங்காலம் தீனதயாளு சொகுசான உடை தரித் துக்கொண்டு தன் அந்தரங்க அறையில் நின்றிருந்தான்.

அன்றிரவு ஏதோ ஒரு விசேஷத்தை முன்னிட்டு, சுந்த ரம் தேனும்பேட்டையிலுள்ள தன் பங்களாவில் ஓர் விருந் தளிப்பதாய் ஏற்பாடு செய்திருந்தான். அதோடு திருக்கோ டிக்காவல் கிருஷ்ணையர் அவர்களை வரவழைத்துக் கச்சேரி வைப்பதாகவும் ஏற்பாடாயிருந்தது. சுந்தரம் தீனதயாளு வுக்கும் ஒரு கடிதமனுப்பி யிருந்தான். தீனதயாளு அதற் குப்போகத் தயாராயிருந்தான்.

அவன் சுந்தரத்தோடு நட்புக்கொண்டிருக்க வேண்டு மென்பது அவனது முதற்கருத்து. ஏனெனில், அவன் சிநே கத்தால் நாற்பதினாயிரம் ரூபாய் கிடைப்பதாயிருந்தது. இரண் டாவது, அவன் கமலாஸனியை அங்கே காணலாமென்றெண் ணியிருந்தான்.

தீனதயாளு தேனும்பேட்டைக்குப் புறப்படுவதற்கு முன்னர் தன் கம்பெனி மானேஜரிடம் இரண்டொரு வார்த் தைசொல்லிப் போக எண்ணியிருந்தபடியால் மேகநாதன் வருவானென்று அவன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தான்.

சில வாரங்களாக தீனதயாளு அண்டு கம்பெனியின் விஷயங்கள் ஓரே நிலைமையிலிருந்தன—லாபமுமில்லை நஷ்டமு மில்லை—இது நன்மைக் கடையாளமென்று தீனதயாளு எண் ணலாயினன். கம்பெனி க்ஷீண தசையை யடையாமலிருந் தால் கமலாஸனியின் செல்வத்தைக் கொண்டு அதைச் சரிப்ப டுத்தி விடலாமென்றிருந்தான்.

கதவைத் தட்டுஞ் சப்தங்கேட்டது. தீனதயாளு கத வைத் திறந்ததும் மேகநாதன் உள்ளே வந்தான். இருவரும் கம்பெனியின் விஷயங்களைப்பற்றிக் கால்மணி நேரம் பேசிக் கொண்டிருந்தனர். மேகநாதன் தன் எஜமானனிடம் கம் பெனி ஜாப்தாவைக் கொடுத்துவிட்டு அவன் அதைப் பார்க் கும்போது அவன் முகத்தை உற்று நோக்கிய வண்ணம் உட் கார்ந்திருந்தான்.

அவனால் தன் எஜமானனுடைய முகக்குறியை அறிய முடியவில்லை. தன்னை இதரர்கள் கவனத்துடன் பார்த்துக் கொண்டிருப்பார்களென்றறிந்து, தீனதயாளு தன் முகத்தை விருப்பு வெறுப்பற்றவனுடையது போலாக்கிக் கொள்வான்.

மேகநாதன் தீனதயாளுவின் அந்தரங்க குமாஸ்தாவாக வும், கம்பெனியின் மானேஜராகவு மிருந்தபோதிலும், கம் பெனி இன்ன நிலைமையிலிருக்கிறதென்பதைச் சரியாக அறிந்

தானில்லை. கம்பெனி நல்ல நிலைமையிலில்லை யென்பதுமாத்திரம் அவனுக்குத் தெரியும். நடந்த வருஷத்தில் கம்பெனிக்குப் பலமுறை நஷ்டம் வந்திருக்கிறதென்பதும் அவனுக்குத் தெரியும். ஆனால் கம்பெனி க்ஷீணதசையை யடைந்ததும் அடையாததும் அவனுக்குத் தெரியாது. அந்த ஸ்திதிக்கு வந்திருக்கலாமென்று அவன் யூகித்தான். இதன் வாஸ்தவத்தை யறியுமாறு தன் எஜமானன் முகத்தை இமைகொட்டாது பார்த்துக்கொண்டிருந்தான். மேகநாதன் தடுக்கின் கீழே நுழைந்தால் தீனதயாளு கோலத்தின் கீழ் நுழைகிறவனாயிற்றே! அப்படியிருக்க அவனெண்ணங்களை மேகநாதன் எங்ஙனமறிவது?

மேகநாதன் தன எஜமானனிடங் கொடுத்த ரிப்போர்ட்டு எப்பொழுதும் போலிருந்தது—லாபமுமில்லை நஷ்டமுமில்லை—தீனதயாளு அதை மேஜையின்மேல் வைத்துவிட்டுத் தன் குமாஸ்தாவை நோக்கினான்.

தீன:—மேகநாதா, அந்த உயிலை (Will) வாங்கிக்கொண்டு வந்தாயா?—கருணானந்தர் எழுதிவைத்த உயில்—

மேக:—ஆஹா, கொண்டுவந்திருக்கிறேன். இப்பொழுது தங்களிடங்கொடுத்த ரிபோர்ட்டோடு வைத்திருக்கிறேன். அந்தப் பணம் நிபந்தனையில்லாமல் வைக்கப்பட்டிருக்கிறது.

தீன:—நிபந்தனை யில்லாமலா? சந்தோஷம். அதைத்தான் தெரிந்துகொள்ள வேண்டுமென்றிருந்தேன். தங்கமணியின் சங்கதி என்ன? அவன் என்ன சொல்லுகிறான்?

மேக:—ஐயா, அது மிகவும் சொற்ப விஷயம். ஆனாலும் அதை நீங்கள் தெரிந்துகொள்வது உசிதமென்று தோன்றுகிறது. அவன் ஒரு மேஸ்திரி அவனுக்குச் சில்லரை வரும்படியும் வருவதுண்டு. நாம் திருட்டைக் கண்டு பிடிப்பதற்கு முன்னமே அவன் என்னிடம் வந்து தன் குற்றத்தை ஒத்துக்கொண்டான். அவன் கைப்பற்றின பணத்தைத் தன் சம்பளத்தில் கொடுத்து விடுவதாகவுஞ் சொல்லுகிறான். ஆனால் இம்மாதிரி விஷயங்களை நான் மேல்விசாரணை செய்யக்கூடாதென்று எனக்குத் தோன்றுகிறது.

தீன:—ஊம்—அவன் நம்மிடம் எவ்வளவு காலமாக வேலைசெய்து வருகிறான்?

மேக:—சுமார் ஒரு வருஷகாலமாக இருக்கிறான். அவன் செய்ததை நினைக்க நினைக்க எனக்கு ஆச்சர்யமுண்டாகிறது. அவன் யோக்கியன் போலவும் நம்பத்தகுந்தவன் போலவுங் காணப்பட்டான். அவன் வீட்டில் ஏதாவது சங்கடம் நேரிட்டிருக்குமென்று நினைத்தேன். இன்று காலையில் அம்மாதிரியே கேள்விப்பட்டேன். நீங்கள் அவனைத் தண்டிக்க நினைத்திருப்பதையும் இல்லாததையும் அறியுமாறு இப்பொழுது தங்களிடம் இதைக் கூறினேன்.

தீனதயாளு தன் சட்டைப் பையிலிருந்த பொற்பூணமைத்த பௌன்டென் பேனவை யெடுத்து அதன் மூடியைத் திறப்பதும் மூடுவதுமாக இருந்தான். கடைசியாக அவன் ஏதோ யோசனைசெய்து முடித்து "இல்லை, நான் அம்மாதிரி செய்வேனென்று நினைக்கவில்லை" என்றான்.

மேக :—அவனைத் தண்டிக்காமல் வேலையினின்றும் நீக்கிவிட எண்ணி யிருக்கிறீர்களோ?

தீன :—அவன் யோக்கியனென்று நினைக்கிறாய்?

மேக :—ஆம், நான் அப்படித் தான் எண்ணி யிருந்தேன்.

தீன :—அப்படியானால் அவனை வேலையினின்றும் நீக்க வேண்டாம். நானே அவனைக் கண்டு பேசுகிறேன். அவன் முன்போலவே வேலைசெய்து கொண்டிருக்கட்டும். ஆனால் பணத்தை ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொண்டுவா.

இதைக் கேட்டதும் மேகநாதன் ஆச்சர்யமுற்றான். அவனால் இதை நம்பமுடியவில்லை. இது வியாபாரக் கிரமத்தை மீறியதாக இருந்தது. மேலும் தீனதயாளு இது வரையில் இம்மாதிரி நடந்ததில்லை.

மேக :—ஐயா, இது சரியான தல்லவென்று எனக்குத் தோன்றுகிறது. தங்கள் உதாரகுணம் பிறர்கொண்டாடத் தகுந்தது தான். ஆனால் வியாபார விஷயங்களில் அவ்வித எண்ணம் உண்டாகக்கூடாதென்று எனக்குத்தோன்றுகிறது. மலிவாய் விற்குமிடத்தில் வாங்கி நஷ்டமாய் விற்குமிடத்தில் விற்பதே வியாபாரத்தின் போக்கு. நமக்கு ஒருவன்மேல் நம்பிக்கை யில்லையாகில்—எவ்வளவு ஆப்தனாயிருந்தாலும்—அவனை உடனே நீக்கி விடவேண்டும்.

தீன:—மேகநாதா, நீ சொல்வது மிகவுஞ் சரியே. ஆனால் நான் அநேக காரணங்களைக் கொண்டே இம்மாதிரி தீர்மானிக்கலானேன். நான் அவனைப் பார்க்கவேண்டும். இன்னும் ஏதாவது விசேஷமுண்டா?

மேக :—ஒன்று மில்லை.

தீன :—சரி, அப்படியானால் நீ போகலாம்.

மேகநாதன் தீனதயாளுவை விட்டகன்றதும், தீனதயாளு தன் மோட்டார்காரைக் கொண்டுவந்து நிறுத்தும்படி ஒரு வேலைக்காரனிடந் தெரிவித்தான். சற்று நேரத்திற்கெல்லாம் மோட்டார்கள் தெருவில் நின்றது. தீனதயாளு அதிலேறிக்கொண்டு தேனும்பேட்டையை நோக்கிச்செல்லும் போது இந்திரவிமானத்தில் தெய்வலோகத்திற்கே நேராகச் சென்று அங்குள்ள காட்சிகளைக் கண்டு போகங்களை அனுபவிப்பதாக மனோபாவஞ் செய்துகொண்டு இறுமாந்திருந்தான்.

சுந்தரத்தின் பங்களா பார்வைக்கு மிகவும் ரமணீயமானது. அதைச் சுற்றிலும் தென்னை, கமுகு, மா, பலாமுத

விய விருக்ஷங்களும் பலவிதப் புஷ்பச் செடிகளும் அடர்ந்த ஒரு சிங்காரத் தோட்டமுண்டு. கோகிலங்கள் எப்பொழுது பார்த்தாலும் 'கூ கூ' வென்று கூவிக்கொண்டே யிருக்கும். அந்தத் தோட்டத்தில் இரண்டு மூன்று மான்களும் ஒரு மயிலு மிருந்தன.

சுந்தரம் எதிர்பார்த்திருந்த விருந்தினர்கள் அநேகமாய் வந்து விட்டார்கள். கச்சேரி நடக்கும் ஹாலில் கூட்டம் மிகுதியாயிருந்தது. ஸரஸ்வதியும் அவள் மகளும் இன்னும் வரவில்லை. அன்றைத் தினம் அங்கே அநேக கனவான்கள் வந்திருந்தார்கள்—தீனதயாளுவைப் போல் வியாபாரவிஷயங்களின் கைதேர்ந்த நிபுணர்கள், டாக்டர்கள், ஆங்கிலம் பயின்ற வித்துவான்கள், சட்டத்தை யுணர்ந்த வக்கீல்கள்—ஆகிய எல்லோரும் வந்திருந்தனர்.

தெருவில் ஒரு மோட்டார்கார் வந்து நின்றது. அதிலிருந்து ஸரஸ்வதியும் கமலாஸனியும் உள்ளே வந்தார்கள். சுந்தரத்தின் தாயார் அவர்களை நல்வரவேற்று உபசரித்தாள். கமலாஸனி அப்பொழுது என்று மில்லாத அழகுடன் விளங்கினாள். சுந்தரம் அவர்களை விசாரித்துக் கொண்டிருந்த சமயத்தில் அவனுக்குப் பின்புறத்தில் ஒருவன் வந்து நின்றான். திரும்பிப் பார்த்ததும் அவன் தீனதயாளு வென்றறிந்து கொண்டு, சுந்தரம், ஸரஸ்வதி முதலியவர்களை விடுத்து அவனுடன் சென்றான்.

விருந்தினரெல்லாம் போஜனஞ் செய்தானதும் கச்சேரி ஆரம்பித்தது. கிருஷ்ணையர் அவர்கள் சர்றுபிர்தமாய்ப் பிடில் வாசித்தார். புருஷர்களெல்லாம் நாற்காலிகளிலும் ஸ்திரீகளெல்லாம் ஒரு புறமாய் இரத்தினக் கம்பளங்களின் மேலும் உட்கார்ந்திருந்தனர்.

கமலாஸனி கச்சேரி நடக்குமிடத்திற்குப் போகவில்லை. அவள் போகாமலிருந்தது பாட்டின்மேல் விருப்பமில்லாமலன்று. அவள் மனம் ஒருவாறிருந்ததால், சற்றுநேரம் வேடிக்கையாய்க் காலங்கழிக்கலாமென்று கருதிப் புஷ்பச் செடிகள் வைத்திருந்த இடத்திற்குச் சென்று ஓர் நாற்காலியிலுட்கார்ந்தாள். அவள் ஒரு ரோஜாப் புஷ்பத்தைப் பறித்துக் கையில் வைத்துக்கொண்டு, சில நாளைக்கு முன் தான் ஜன்னலின் வழியாய்ச் சுட்டிக்காட்டிய பொழுது ரோட்டில் சென்று கொண்டிருந்த மனிதனைப்பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தாள்.

அந்த வழிப்போக்கனுடைய முகம் அவள் கண் முன்னேயே இருந்தது. அவனைப்பற்றி நினைக்குந்தோறும் அவள் மனதில் அவளை யறியாமல் ஓர் உணர்ச்சி யுண்டாயிற்று. அவனை மறுபடி எங்ஙனங் காண்பதென்று வருந்தினாள்.

அத்தருணத்தில் "கமலாஸனி, இங்கு ஏன் தனியாயி

ருக்கிறாய்?" என்று சொல்லிக்கொண்டே ஒருவன் அங்கே வந்தான். செடிகள் மறைத்துக் கொண்டிருந்தமை பற்றி, கமலாஸனிக்கு அவன் இன்னானென்று தெரியவில்லை.

தீனதயாளு அவளெதிரில் வந்து, அங்கிருந்த நாற்காலியிலுட்கார்ந்தான். அவனைக் கண்டதுங் கமலாஸனியின் முகத்தில் வெறுப்புக் குறிதோன்றிற்று. அவ்விடத்தைவிட்டுப்போகலா மென்றெழுந்தாள்; தீனதயாளு இனிய குரலுடன் "கமலா, ஏன் போகிறாய்? சற்று உட்காரு" என்றான். அவளுக்கு அங்கே இருக்க இஷ்டமில்லை யென்றாலும் அவனிஷ்டத்திற்கு விரோதமாய் எழுந்து சென்றால் ஏதாவது தீங்கு நேரிடுமென்றறிந்து, தந்திரத்தினாலேயே அவனிடமிருந்து, தப்பித்துக்கொள்ள வேண்டுமென்றெண்ணி அங்கே மறுபடியும் உட்கார்ந்தாள்.

தீன:—கமலா, உன்னைக் காண்பதற்காகவே இன்று இங்கே வந்தேன். கச்சேரி நடக்குமிடத்தில் உன்னைத் தேடிப் பார்த்தேன்; அங்கே காணாமல் உன்னைப் பலவிடங்களிலுந் தேடிக்கடைசியாக இங்கே வந்தேன்.

கமலா:—ஐயோ! தாங்கள் என் நிமித்தம் ஏன் இவ்வளவு சிரமப்படவேண்டும்? கச்சேரி நடக்கு மிடத்திலேயே இருந்திருக்கலாமே!

தீன:—(வெட்கியவனாய்) இல்லை, உன்னைப் பார்க்க வேண்டுமென்றிருந்தேன்; அதனால் தான் இங்கு வந்தேன். உங்களுக்குப் பல்லாவரத்தில் ஒரு பங்களா இருக்கிறதாமே, வாஸ்தவந்தானா?

கமலா:—ஆமாம்; நாங்கள் அங்கே போவதாயிருக்கிறோம். இரண்டு மாதகாலம் அங்கே இருக்கவேண்டுமென்று என் தாயார் சொல்லிக் கொண்டிருக்கிறாள்.

தீன:—நானும் பல்லாவரத்திற்குப் போவதாயிருக்கிறேன். உங்கள் பங்களா எங்கே இருக்கிறது?

கமலா:—ரெயில்வே ஸ்டேஷனுக்கு மேற்கே இரண்டு மைல் தூரத்திலிருக்கிறது.

இதைக் கேட்டதும் தீனதயாளு ஒருவாறு சந்தோஷித்தான். கமலாஸனி தன் தாயாரிடம் போகவேண்டுமென்று சொல்லிவிட்டு அவ்விடம் விட்டுப்போனாள். தீனதயாளுவின் மனதில் அடங்காத ஆனந்த முண்டாயிற்று. கமலாஸனியைப்போல் அழகு வாய்ந்த பெண்ணைத் தானெங்குங் கண்டதில்லையென்று எண்ணினான். அவன் வாஸ்தவத்தில் கமலாஸனியைக் காதலித்தானென்பதும், அல்லது அவள் செல்வத்தைக் கைப்பற்றுவதற்காக அவளை மணம்புரிய எண்ணினானென்பதும் தற்சமயம் ஏற்படவில்லை.

கமலாஸனி ஓரறைக்குள் நுழைந்தாள். அதில் ஒரு எலெக்ட்ரிக்விளக்கு பிரகாசமாய் எரிந்து கொண்டிருந்தது.

அவ்வறையின் ஒரு சுவரில் ஒரு வாசற்படி இருந்தது. அவள் அதன் வழியாய் மற்றோரறைக்குச் சென்றாள். அதில் ஒரு விளக்கு மங்கலாய் எரிந்துகொண்டிருந்தது. அவ்வறையின் மத்தியில் சலவைக் கல்லினாற்செய்த சிலையொன்று நிறுத்தியிருந்தது. கமலாஸனி அதை யணுகி உற்று நோக்கினாள். அது அலையினின்றும் எழும்புவது போலிருந்தது. அதன் முகம் அவளுக்குச் சரியாய்த் தெரியவில்லை. அவள் அவ்வறையிலிருந்தவிளக்கைக் கையிலெடுத்து, வெளிச்சம் சிலையின் முகத்தில் விழும்படி பிடித்துக்கொண்டு அதைப் பார்த்தாள்.

சற்றுநேரம் பார்த்த பிறகு அவள் தன் முகத்தை அங்கிருந்த நிலைக்கண்ணாடியில் பார்த்துக் கொண்டாள். மறுபடியும் சிலையின் முகத்தைப் பார்த்தாள். கொஞ்சமேனும் பிசகில்லை; அவள் மனதில் தோன்றியது வீணெண்ணமன்று. அச்சிலையின் முகம் கமலாஸனியின் முகத்தைப் போலவே இருந்தது!

அவள் கையிலிருந்த விளக்கு நடுங்கிற்று. அவள் மனதில் ஆச்சர்யமும் பயமுங்கலந்த ஓரெண்ணந் தோன்றிற்று. அவள் முகம் வெளுத்தது; உதடுகள் துடித்தன; மறுபடியுஞ் சிலையைப் பார்க்கலாயினாள். எல்லா அவயவங்களும் தன்னுடையது போலவே இருந்தன. அதற்கு உயிரில்லை அவளுக்கு உயிரிருந்தது; சிலைக்கும் அவளுக்கு முள்ள வித்தியாசம் இவ்வளவு தான். அச்சிலையி னடிப்புறத்தில் 'செல்வராஜன்' என்று எழுதி இருந்ததை அவள் கண்டாள்.

அவள் பிரமித்து நிற்கையில் சுந்தரம் அங்கே வந்தான். கமலாஸனிக்கு உண்டான கலசுத்தின் காரணம் அவனுக்கு நன்கு விளங்கிற்று. இம்மாதிரி நிகழுமென்று அவன் முன்னமே உணர்ந்திருந்தான்.

சுந்:—கமலா, ஏன் இங்கே நின்று கொண்டிருக்கிறாய்?

கமலா:—ஒன்றுமில்லை, இந்தச் சிலையைப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

சுந்:—எப்படி யிருக்கிறது?

கமலா:—நன்றாயிருக்கிறது. இதை யார் செய்தது?

சுந்:—செல்வராஜன் என்றொரு சிலைவேலைக்காரனிருக்கிறான், அவன் தான் இதைச் செய்தான்.

சற்றுநேரமானதும், ஸரஸ்வதியும் கமலாஸனியும் வீட்டிற்குப் புறப்பட்டனர். கமலாஸனி கண்ட அதிசயம் அவள் மனதில் மிகுந்த கலக்கத்தை யுண்டு பண்ணியது.

## 5. பழிக்குப் பழி வாங்கவேண்டும்.

சுந்தரத்தின் பங்களாவில் விருந்து நடந்த மறுநாட்சாயங்காலம் தீனதயாளு பட்டினத்தில் தன் வேலைகளை முடித்

துக்கொண்டு நுங்கம்பாக்கத்திற்குப் போய்க்கொண்டிருந்தான். அப்பொழுது மாலை சுமார் 6½-மணி இருக்கலாம். ஆகாயத்தில் எங்கே பார்த்தாலும் மேகங்கள் ஓடிக்கொண்டிருந்தன; மரங்களின் இலைகள்கூட அசையவில்லை; தெருக்கள் முற்றும் இருள் மூடியிருந்ததைப் பார்க்கும்போது ஒரு பெரிய கறுப்புக் கம்பளியைப் போர்த்திருப்பது போலிருந்தது. சற்றுநேரத்திற்கெல்லாம் மழைபெய்ய ஆரம்பித்தது. தீனதயாளு கமலாஸனியைப் பற்றி ஏதேதோ யோசனைசெய்துகொண்டே போனான். அவளை விவாகஞ்செய்துகொள்ள வேண்டுமென்றெண்ணியபோது அவனுக்குப் பெருமகிழ்ச்சியுண்டாயிற்றென்றாலும் இன்னொரு விஷயம் அவனுக்குப் பெரும்பயத்தை யுண்டுபண்ணிற்று. அழகிய கமலாஸனியைத் துணிந்து மணம்புரிந்து கொள்ளலாமாவென்று யோசனை பண்ணினான்.

எவ்வளவு நேரம் யோசித்துப் பார்த்தும் தான் அவளை மணம்புரிந்து கொள்வதே நலமென்று எண்ணினான். அவனுக்குத் தற்சமயம் நாற்பதினாயிரம் ரூபாய் வேண்டியிருந்தது அதை யடையுமாறு அவன் கமலாஸனியைக் கலியாணஞ்செய்துகொள்ள வேண்டியதாயிருந்தது. ஆனால் பத்மாவதி இருந்தனளே! அவளை என்ன செய்வது? அவளைக் கைவிடலாமா? தீனதயாளு அப்படித் தான் செய்யவேண்டுமென்றெண்ணினான். ஆனால் அவன் மனம் இடந்தரவில்லை. அம்மாதிரி செய்தால் தனக்கு ஏதேனுந்தீங்கு நேரிடுமென்றெண்ணினான். ஆனால் அவன் ஒரு விஷயத்தில் நம்பிக்கைவைத்திருந்தான். பத்மாவதி வியாதியாலும், உணவில்லாமையாலும், விசனத்தினாலும் உடல் மெலிந்து நடக்கச் சக்தியற்றிருந்தாளாதலால் அவள் சீக்கிரமே இறந்து விடுவாளென்று தீனதயாளு நம்பியிருந்தான்.

மழை நின்றுவிட்டது. தீனதயாளு தன் பங்களாவையணுகினான். மோட்டார்கார் பங்களா வாசற்படியண்டைநின்றது. தீனதயாளு அதினின்று மிறங்கி மெதுவாய் நடந்துபோனான். ஒரு ஸ்திரீ தன் மெல்லிய கரத்தை அவன்மேல் வைத்து "நாதா, நாதா!" என்றனள்.

தீனதயாளு பிரமித்தவனாய்ச் சுற்றுமுற்றும் பார்த்தான் தன் மேல் கையை வைத்திருந்த பத்மாவதியைத் தவிர அங்கே வேறொருவருமில்லை. அவன் அவள் முகத்தை ஜாடையாகப் பார்த்தான். அது இரத்தமின்மையால் வெளுத்துச் சுருங்கியிருந்தது. அவளுடைய கால்களும் கைகளும் மெலிந்திருந்தன. அவள் உடுத்தியிருந்த ஆடை அழுக்காயும் கிழிந்துமிருந்தது. அவள் ஒரு கையில் துணியால் மூடப்பட்ட ஒரு குழந்தையை வைத்துக்கொண்டு மற்றொரு கையைத் தீனதயாளுவின் மேல்வைத்திருந்தாள்.

இம்மாதிரி ஏதாவது நடக்குமென்று தீனதயாளுமுன்ன மே அறிந்திருந்தபடியால் தான் என்ன செய்யவேண்டுமென் பதை ஆலோசித்து முடித்திருந்தான். அவன் பச்சாத்தாப மில்லாமல் "பெண்மணீ! நீ ஏதோ பிசகாய் எண்ணியிருக் கிருய். நீ இன்னுரென்பதை நானறியேன், இதைவிட்டு அப் புறஞ்சென்று விடு. இங்கிருந்தால் ஏதேனும் கெடுதி சம்பவிக் கும்" என்று சொல்லிக்கொண்டே ஒரு சவரனைக் கீழே எறிந்தான்.

பத்மாவதி அந்தக் கண்ணெடுத்தும் பார்க்கவில்லை. அவன் அதைக் கவனிக்கவில்லை போலும் தரை ஈரமாயிருந்த தால் பவுன் விழுந்த சப்தம் அவள் காதில் விழவில்லை. பத் மாவதி சற்றுநேரம் திகைத்து நின்றுள். தீனதயாளுபோக ஆரம்பித்தான். பத்மாவதி அவனைப் பின்பற்றி அவன் சட் டையைப் பிடித்துக் கொண்டாள்.

அவள் அழுத வண்ணம் "தீனதயாளரே! என் காதலா! நான் பத்மாவதி—உங்கள் மனைவி! உங்களுக்குக் கியாபகமி ல்லை? ஐயோ! ஞாபக மிருக்கவேண்டுமே நான் உங்களை வெகு நாளாய்த் தேடிக்கொண்டிருந்தேனே. நான் இறந்துவிட்டே னென்று எண்ணிக் கொண்டிருந்தீர்களோ? பிராண நாதா! நான் மிகவும் எளியவள் துரதிர்ஷ்டசாலி என்னசங்கதி? ஆத்ம நாதா! நீங்கள் என்னை எங்ஙனம் மறந்திருக்கக்கூடும்? நீங்கள் என்னைக் கை——ஐயோ!" என்று கெஞ்சினுள்.

தீனதயாளு கோபங்கொண்டவனுய் அவளைத் திட்டிக் கொண்டே சென்றுன். அவன் சந்தேகத்துடன் சுற்றுமுற் றும் பார்த்து ஒருவரு மில்லாதிருந்ததைக் கண்டு சந்தோஷ மடைந்தான்.

ஆனல் பத்மாவதி இன்னும் ஒழியவில்லையே! தீனதயா ளுவின் கடூரமான பார்வையின் பொருளைப்பத்மாவதி அறிந்து கொண்டாள். ஆயினும் அவள் கையில் தன்னுயிரினும் மே லான பொருளொன்றை வைத்துக் கொண்டிருந்தனளே! அதைக் காப்பாற்றுவதற்காகவே அவள் வறுமையுடனும் பிணியுடனும் போர்செய்து கொண்டு தன் சுகத்தைக் கருதா மல் இவ்வளவு தூரம் நடந்து வந்தாள். அந்தக் குழந்தை யைப் பார்த்த பிறகாவது தீனதயாளுவின் மனம் உருகுமெ ன்று எண்ணியிருந்தாள்.

அவள் அதிகச்சிரமத்தோடு மறுபடியும் தீனதயாளுவை யணுகி, தன் கையிலிருந்த அழகிய குழந்தையை அவனுக்குக் காட்டினுள். அப்போது குழந்தையைக் கையிலேந்தியவண் ணம் பத்மாவதி நின்றிருந்ததைத் தீனதயாளு எப்பொழுதும் மறந்தானில்லை. அவன் அம்மாதிரி காட்சியை இன்னொரு முறை பார்க்கவேண்டியதாயிற்று!

பத்மாவதி "நாதா, இக்குழந்தை தங்களுடையதே

இதை யெடுத்து ஆதரித்தாற்போதும். என்னைப்பற்றி நீங்கள் கவலையுறவேண்டாம். அன்பா! தாங்கள் இவ்வளவு கடூரமாயிருத்தல் தகுதியன்று நீங்கள் அலக்ஷியஞ் செய்வீர்களாகில் குழந்தை இறந்து விடும் அதைக் காப்பாற்ற எனக்குச் சக்தியில்லை. ஏழையின் வேண்டுகோளைத் தள்ளாமலிருங்கள்" என்றனள்.

தீனதயாளுவின் முகம் வெளுத்தது. ஆனால் அவன் தைரியத்தை விடாமல் "பெண்மணி, போய்விடு நீபிசகாய் எண்ணியிருக்கிறுயென்று முன்னமே சொன்னேனே நான் தீனதயாளுவல்ல! நான் உன்னை அறியேன்! என் கையை விட்டு விடு.—சீக்கிரம்" என்ருன்.

அவன் மிகுந்த கோபத்துடன் பேசினுன். ஒரு வண்டியின் சப்தம் அவன் காதில் விழுந்ததும் அந்தக் காட்சியைச் சீக்கிரத்தில் முடிக்கவேண்டு மென்றெண்ணினுன். அவன் ஒரு பெண்ணுடன் வாதாடிக் கொண்டிருந்ததை அவன் சிநேகிதர்களில் யாரேனுங்கண்டிருந்தால் அவன் நடவடிக்கையைப் பற்றி என்ன நினைத்திருப்பார்கள்?

பத்மாவதிக்கு ஒன்றுந் தோன்றவில்லை. அவள் மனதில் தோன்றியிருந்த ஆசை நம்பிக்கை முதலியயாவும் அழிந்தன. பசியால் துடித்துக் கொண்டிருந்தாள். குழந்தைக்கும் உணவு கொடுக்கவில்லை. கையில் கொஞ்சமேனும் பணமில்லை. என்ன செய்வாள்? பாவம்! கடவுளையும் நிந்திக்கவில்லை! தன் வினைப் பயனையே வெறுத்துக் கொண்டாள். அவள் பங்களாவை விட்டுச் சற்றுத்தூரம் வந்ததும் மயக்கத்துடன் கீழே விழுந்தாள். நல்ல வேளையாய்க் குழந்தைக்குக் காயம்படவில்லை. பத்மாவதி ஏதோ ஒரு நம்பிக்கையை வைத்துக் கொண்டு இவ்வளவு காலம் ஜீவித்திருந்தாள். இப்பொழுது அது ஒழிந்து விடவே அவள் ஜீவனும் அழியுந் தருணம் நெருங்கியது தீனதயாளு அவளை நேசித்தகாலத்தில் அவன்சொல்லிய இனியவார்த்தைகளெல்லாம் இப்பொழுது அவளைவிட்டகன்றன. குழந்தை அவள் வயிற்றின் மேற்படுத்துக்கொண்டு "அம்மா, அம்மா" என்று கூவிக்கொண்டிருந்தது.

பத்மாவதி குழந்தையைச் சேர்த்தணைத்து முத்தந் தந்து, கண்ணீருடன், 'என் மாணிக்கமே! நான் உன் தாயல்ல; உன்னைக்கொல்ல வந்த பெண் பிசாசு! என்னை நீ அழைப்பதினுல் உனக்கென்ன சுகமுண்டாகப்போகிறது? என்போன்ற பாதகி இவ்வுலகில் வேறொருவளுமிருக்கமாட்டாள். உன் துரதிர்ஷ்டத்திற் கேற்றவண்ணம் உன் தகப்பனும் உன்னைக் கைவிட்டு விட்டார். நான் போகுங்காலம் சமீபித்துவிட்டது. உன்னை இந்த இடத்தில் விட்டுப்போக என் மனம் எப்படித் துணியுமோ? கண்மணீ, உன்னை யார் காப்பாற்றுவார்களோ? நீயும் என்னுடனிறந்து விட்டால் நான் சந்தோஷமாய்ச் சா

வேன். ஆஹா! நான் என்ன பாவம் பண்ணினேனே!" என்று கதறினுள்.

மறு நிமிஷத்தில் அவளுயிர் போய்விட்டது. அவள் விழுந்துகிடந்த இடம் ஓர் இருளடைந்த மூலையாக இருந்தது. ஆகையால் கொஞ்சநேரம் வரையிலும் அவளை ஒருவருங் கவனிக்கவில்லை. குழந்தைதாயின் மார்பின் மேற்படுத்த வண்ணம் நித்திரைசெய்து கொண்டிருந்தது.

அரைமணி நேரமாயிற்று. சாலையில் வண்டிகள் ஓடிக்கொண்டிருந்தன. ஜனங்களும் இங்கு மங்குஞ்சென்று கொண்டிருந்தனர். சற்றுநேரத்திற் கெல்லாம் ஒரு குள்ளன் அவ்வழியே வந்தான். அவன் முகம் விகாரமாயும் முதுகு வளைந்து மிருந்தது; அவன தலை உடலுக்குத் தகுந்ததாயிராமல் மிகப் பெரிதாக இருந்தது; அவன் கைகள் அதிகமாய் நீண்டிருந்தன; அவன் கைகளை வீசிக்கொண்டே நடந்துசென்றான். அவன் தனக்குள் "நான் சற்றுநேரம் உலாவவேண்டும். ஹா! அதோ கடைகளில் எரியும் விளக்குகள் எவ்வளவு பிரகாசமாயிருக்கின்றன! அவைகளை எவ்வளவு பணங்கொடுத்து வாங்கினார்களோ! அந்தக் கடைகளிலுள்ள சாமான்களும் வெகு நேர்த்தியாயிருக்கின்றன. நான் அதைப்பற்றிப் பேசி என்ன லாபம்? எனக்கேதேனுங் குழந்தை குட்டியிருந்தாலும் அதற்கு விளையாட்டுப் பொருள்களை வாங்கித்தருவேன்." என்று சொல்லிக்கொண்டே தன் சட்டைப் பையிலிருந்த செப்பு நாணயங்களையும் வெள்ளி நாணயங்களையும் எடுத்துப் பார்த்தான். அவன் அவைகளைத் திரும்பவும் சட்டைப்பையிற் போட்டுவிட்டு "இதைச் செலவிடமாட்டேன். ஏதேனுமொரு குழந்தைக்கு இதைத் தருவேன்" என்று சொல்லிக்கொண்டே விரைவாய் நடந்து சென்றான்.

அவ்வழியே சென்ற இரண்டு வாலிபர்கள் இந்தக் குள்ளனைப் பார்த்து "அடே குள்ளா! இன்னுங் கொஞ்சம் உயரமாட்டாயா?" என்று பரிகாசம் செய்தார்கள்.

அந்தக் குள்ளன் கோபங்கொண்டவனாய், "பிள்ளைகளே, நீங்கள் மிகுந்த அழகுடையவர்களோ? வாயை மூடுங்கள், எனக்கு அழகிருந்தாலென்ன இல்லாவிட்டாலென்ன? நான் கிழவனாய் விட்டேன்" என்றான்.

அந்தக் குள்ளன் அதிகக் கோபத்துடன் சாலையின் ஓரமாய் விரைந்து சென்றான். அவன் இருளான வழியிற்போவதே உத்தமமென்று நினைத்து அங்ஙனமே சென்றான்.

அவன் காலில் ஏதோ இடறியதால் அவன் கீழே விழுந்தான். உடனே எழுந்து நின்று "யார் இங்கே? வழியில் படுத்துக்கொண்டு போகிறவர்களை விழச்செய்வது நியாயமா?" என்றான். ஒருவரும் பேசவில்லை. ஒரு குழந்தை "அம்மா" என்றது.

அந்தக் குள்ளன் மனமகிழ்ச்சியுடன் "ஐயோ! ஏதோ ஒரு குழந்தை இங்கே இருக்கிறாற் போலிருக்கிறதே! அதற்குக் காயப்பட்டுவிட்டதோ? குழந்தாய்! இதோ பார்! தலையைத் தூக்கு ஏன் அம்மா?—ஓ! இந்த ஸ்திரீ—இறந்துவிட்டாள்—ஆமாம்" என்று சொல்லிக்கொண்டே சவத்தின் தலையைத்தூக்கிப் பார்த்தான். அவனுக்குச் சற்றுநேரம் ஒன்றுந் தோன்றவில்லை; நெற்றியில் வியர்வை யுண்டாயிற்று. கண்களினின்றுங் கண்ணீருதிர்ந்தது.

அவன் சுற்று முற்றும் பார்த்து வழிப்போக்கர்களில் யாராவது உதவிசெய்ய வரவேண்டுமென்று கூவினான். நல்ல வேளையாய் ஒரு போலீஸ் சேவகன் சமீபத்திலிருந்தான். அவன் குள்ளனிருந்த இடத்திற்கு வந்து என்னசங்கதியென்று விசாரித்தான். அந்தக் குள்ளன் அவ்விடத்தில் ஒரு ஸ்திரீ இறந்து கிடப்பதாகத் தெரிவித்தான். சேவகன் அங்கே ஒரு குழந்தையு மிருக்கக் கண்டு "ஒரு குழந்தைகூட இருக்கிறதா! ஐயா! இங்கேயே இரு. ஒரு வண்டிகொண்டு வருகிறேன். சற்றுநேரம் இங்கேயே இருக்கிறாயா? வண்டியையும் இன்னொரு மனிதனையுந் தயார்செய்து கொண்டு வருகிறேன்" என்றான்.

குள்ளன் அங்கேயே யிருப்பதாகத் தலையையசைத்தான். போலீஸ் சேவகன் அவ்விடம் விட்டுப்போய்ச் சற்றுநேரத்திற்கெல்லாம் ஒரு வண்டியுடனும், இன்னொரு சேவகனுடனும் வந்துசேர்ந்தான். இரண்டு சேவகர்களும் சவத்தையெடுத்து வண்டியிலேற்றினர். குழந்தையையும் சவத்தினருகில் விட்டனர். அந்தக் குழந்தை சவத்தைத் தழுவிக்கொண்டு "அம்மா, அம்மா!" என்று கூவிக்கொண்டிருந்தது.

குள்ளன் குழந்தையைத் தட்டிக்கொடுத்து விட்டு, ஒரு போலீஸ் சேவகனை நோக்கி "இந்தக் குழந்தையை என்ன செய்வது?" என்று கேட்டான். அதற்கொரு சேவகன் அலக்ஷியமாய் "கொஞ்சகாலம் வளர்த்தால் கூலி வேலை செய்ய உதவுவான்" என்றான்.

இதைக் கேட்டதும் குள்ளன் கோபங் கொண்டவனாகவ "கூடாது பாவம்! ஒன்று மறியாப் பாலகனாயிற்றே! அவன் கஷ்டப்படக் கூடாது." என்று சொல்லிவிட்டுக் குழந்தையை நோக்கி "அருமைக் குழந்தாய்! அழாதே அம்மாளுக்கு ஒன்றுமில்லை—தூங்கிக் கொண்டிருக்கிறாள்" என்றனன்.

எப்படிச் சொல்லியும் குழந்தை அழுவதை நிறுத்தவில்லை. சேவகன் அதன் மெல்லிய கரத்தைப் பிடித்திழுத்து அதைச் சவத்தினின்றும் அப்புறப்படுத்தினான். இதைப் பார்த்திருந்த குள்ளனுக்கு மிகுந்த துக்கமுண்டாயிற்று. அவன் "இந்தக் குழந்தையை நான் காப்பாற்றுகிறேன் எனக்குச் சொந்தமாய் ஒரு குழந்தைகூடக் கிடையாது. ஆகையால்

இதை எடுத்து வளர்க்கிறேன்" என்ருன்.

உடனே குள்ளன் அந்தக் குழந்தையை யெடுத்துக்கொண்டு குழந்தாய்! அழாதே. அம்மாள் க்ஷேமமாகத் தானிருக்கிருள். உன்னைக் குள்ளன் காப்பாற்றுவான்" என்ருன்.

எல்லோரும் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய்ச்சேர்ந்தார்கள். பிணங்களை வைப்பதற்கென்றிருக்கும் அறையில் இப்பொழுது எடுத்து வந்த சவம் வைக்கப்பட்டது. டாக்டர் சவத்தைப் பரிசோதித்துப் பார்த்துப் பத்மாவதி இறந்த காரணத்தை உரைத்தார்; அவள் மனக்கவலையாலும் வியாதியாலும் உணவின்மையாலும் மெலிந்து இறந்தாளென்று சொன்னர்.

இன்ஸ்பெக்டர் குழந்தையைச் சட்டையி னுட்புறத்தில் வைத்திருந்த குள்ளனைப் பார்த்தார். அந்தக் குள்ளன் அணிந்திருந்த சொக்காய் அவனைவிட மூன்று பங்கு அதிகமாகப் பருத்த தேகமுடையவனுக்குப் போதுமானதாயிருந்தது. அவன் தன் தேகத்தையுங் குழந்தையையும் அந்தச் சொக்காயில் மறைத்துக் கொண்டிருந்தான்?

இன்ஸ் :—உன் பெயரென்ன?

குள் :—குள்ளன்.

இன்ஸ் :—நீ குள்ளமாயிருப்பது வாஸ்தவந்தான், உன் பெயரென்ன?

குள்ளன் :—அம்பலவாணன்.

இன்ஸ் :—உன் இருப்பிடம் எது?

அம் :—அப்பாசாமி முதலி தெரு, 25-ம் நம்பர் வீடு.

இன்ஸ் :—எந்த ஊரிலிருக்கிருய்?

அம் :—இங்கே தான் அய்யா, நுங்கம்பாக்கத்தில்.

இன்ஸ் :—உனக்கென்ன வேலை?

அம் :—தையல்வேலை; ஷர்ட்டு, கோட்டு, ரவிக்கை, பாவாடை ஜாக்கெட்டு முதலியவைகள் நன்ருய்த் தைப்பேன்.

இன்ஸ் :—சரி, இந்தக் குழந்தையை நீ எடுத்துக்கொண்டுபோகிருயா? குழந்தை ஆணு பெண்ணு?

அம் :—ஆண் குழந்தை தான். இதை நான் வளர்க்கிறேன்.

இன்ஸ் :—சரி, இதை ஜாக்கிரதையாகக் காப்பாற்றவேண்டும். போலீஸார் தெரிவிக்கும் போதெல்லாம் நீ ஆஜராகவேண்டும். குழந்தையின் சௌக்கியத்தைப் பற்றி எங்களுக்கு அடிக்கடி தெரிவித்துக் கொண்டிருக்கவேண்டும்.

அம் :—ஆஹா, அப்படியே செய்கிறேன். அதைவிட எனக்கு வேறென்ன கவலை யிருக்கிறது? உங்களுக்கு ஏதேனும் பணங்கொடுக்க வேண்டுமோ?

இன்ஸ் :—(புன்னகை செய்துகொண்டே) "பணமா?"

அம் :—ஆம், ஏதாவது சர்க்கார் தீர்வை செலுத்தவே

ண்டுமோவென்று கேட்டேன். உங்களைப்போன்ற உத்தியோகஸ்தர்கள் ஏதாவது கேள்விகள்கேட்டு அவைகளைப் புத்தகத்தில் பதிவுசெய்து கொண்டால், பணங்கேட்பது வழக்கம்.

இன்ஸ்:—இல்லை, பணங்கொடுக்கவேண்டாம். குழந்தையை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்.

உடனே அம்பலவாணன் குழந்தையை யெடுத்துச் சட்டையால் மூடிக்கொண்டு போலீஸ் ஸ்டேஷனைவிட்டுப் போனான். அவன் சென்ற ஐந்து நிமிஷத்திற்கெல்லாம் ஒருவன் ஸ்டேஷனில் நுழைந்து இன்ஸ்பெக்டரெதிரில் வந்துநின்றான். அவன் "சற்று முன்னே ஒரு ஸ்திரீ ரோட்டில் கண்டெடுக்கப் பட்டாளென்று கேள்வியுற்றேன். அவளைப் பற்றி உங்களுக் கேதேனுந்தெரியுமா?" என்று இன்ஸ்பெக்டரைக் கேட்டான்.

இன்ஸ்:—அவள் இறந்துவிட்டாள்.

வந்தவன்:—இறந்து விட்டாளா?

இன்ஸ்:—ஆம், உனக்கு அவள் யாரென்று தெரியுமா?

வந்தவன் சற்றுநேரம் பிரமித்து நின்றான். அவன் மார்பு படபடவென்றடித்துக் கொண்டது. அவனுக்குண்டான துக்கத்தை யடக்கிக்கொண்டு மேஜையின்மேல் சாய்ந்தவண்ணம் ஏதோ யோசித்துக் கொண்டிருந்தான். அவனைப் பார்க்கும்போது அவன் கைத்தொழில் செய்பவனென்று தோன்றிற்று. அவன் உடை மிகவும் அழுக்கடைந்திருந்தது. கடைசியாக அவன் "நான் சவத்தைப் பார்க்கலாமா?" என்று கேட்டான்.

இன்ஸ்பெக்டர் யாதும் மறுமொழி பேசாது அவனைப் பிணங்கள் வைத்திருக்கும் அறைக்கு அழைத்துச் சென்றார். அம்மனிதன் சவத்தைப் பார்த்து ஏதேதோ சிந்தித்துக் கொண்டே வெகு நேரம் நின்றிருந்தான். அவன் முகத்தில் இருள் மூடியது. இன்ஸ்பெக்டர் ஒன்றும் பேசாமல் காத்துக்கொண்டிருந்தார். வந்த மனிதன் பிணத்தைப் பார்ப்பதை நிறுத்தினவுடன் இன்ஸ்பெக்டர் அவனை நோக்கி "அவள் இன்னாளென்று உனக்குத் தெரியுமா?" என்றனர்.

அம்மனிதன் இன்ஸ்பெக்டர் கேட்ட கேள்வியைக் கவனியாதவன்போல் "அவள் கொலை செய்யப்பட்டிருக்கிறாள்" என்றான். இன்ஸ்பெக்டர் தான் முன்னே கேட்ட கேள்வியையே திரும்பவும் கேட்டுக் கொண்டிருந்தார்.

அம்மனிதன்:—நீங்கள் நான் சொல்வதை நம்பவில்லை. ஆயினும் அது உண்மைதான். ஒருவனைக் கத்தியாற் குத்திக் கொன்றாலும் ஒன்றுதான்; சோறு தண்ணீரில்லாமல் வதைத்துக்கொன்றாலும் ஒன்றுதான். இவள் நிச்சயமாய்க் கொல்லப் பட்டாள்.

இன்ஸ்:—அப்படி நிகழ்ந்திருக்கலாம். விசாரணை நடக்கும்போது அதையெலலாஞ் சொல்லிக்கொள். நாம் செய்ய

வேண்டிய முதல் வேலை என்னவெனில், அவள் இன்னாரென் பதை யறிந்துகொள்ளவேண்டும். உனக்கு அவள் யாரென்று தெரியுமா?

அந்த மனிதன் ஆம், தெரியும்.

இன்ஸ்பெக்டர் அவனை யழைத்துக்கொண்டு மேஜை யண்டை சென்றனர்.

இன்ஸ்:—அவள் பெயரென்ன?

அந்த மனிதன்:—"பத்மாவதி"

இன்ஸ்:—அவள் உன் சொந்தக் காரியா?

அந்த மனிதன்:—என் சிறிய தகப்பன் மகள்.

இதை விசாரித்துக்கெண்டு இன்ஸ்பெக்டர் இன்னும் அநேக கேள்விகள் கேட்டார். அவளுடைய வயது, பிறந்த இடம், முதலியவைகளை அந்த மனிதன் சொன்னான்.

இன்ஸ்பெக்டர் பத்மாவதியின் வாழ்க்கையைப் பற்றி ஏதேனுந் தெரியுமாவென்று அந்த மனிதனைக் கேட்டார்.

அதற்கு அவன் "அவள் ஐந்தாறு வருஷங்களுக்கு முன்னே திடீரென்று காணமற் போயினள். அவள் யாரோ ஒரு மனிதனுடனிருந்தாள். ஆனால் அவள் அவனை விவாகஞ் செய்து கொண்டதும் கொள்ளாததும் தெரியவில்லை. மூன்று மாதங்களுக்கு முன்னர் நான் அவளைச் சென்னையில் கண்டேன். நான் அவளுக்கு வேண்டிய சௌகரியங்களைச் செய்தேன். ஆனால்—" என்று சொல்லிக் கண்ணீர் விட்டான்.

இன்ஸ்:—இவ்வளவு தான் உனக்குத் தெரியுமோ? சரி, விசாரணை நடக்கும்போது நீ ஆஜராகவேண்டி யிருப்பதால் உன் விலாசத்தை எழுதிவைத்து விட்டுப்போ.

அந்த மனிதன் தன் பெயர் தங்கமணி யென்று சொல்லித் தன் விலாசத்தையும் எழுதி வைத்தான்.

இன்ஸ்:—உன் தொழிலென்ன?

தங்க:—துறைமுகத்தில் மேஸ்திரியா யிருக்கிறேன்.

இன்ஸ்:—உன் எஜமானனின் பெயரென்ன?

தங்க:—தீனதயாளு அண்டு கம்பெனியார்.

இன்ஸ்:—அவ்வளவு தான், நீ போகலாம்.

தங்கமணி அவ்விடம் விட்டுக் கதவண்டை சென்றான். அவனுக்கு ஏதோ ஞாபகம் வந்ததால் திரும்பவும் இன்ஸ்பெக்டரிடம் வந்தான்.

தங்க:—குழந்தை என்னவாயிற்று? எங்கேயிருக்கிறது?

இன்ஸ்:—குழந்தையா? அதை ஒரு கிழவன் எடுத்துப் போயிருக்கிறான். அவன் அதைக் காப்பாற்றுவதாகச்சொல்லி யிருக்கிறான். ஆனால் நீ இறந்தவளுக்கு நெருங்கிய பாத்தியஸ்தனாயிருப்பதால் அந்தக் குழந்தையை வளர்க்க நீயே பாத்தியமுடையவன். அதைப் பற்றி நீ போலீஸாருக்குத் தெரிவித்தால் குழந்தை உன்னிடம் வந்து சேரும்.

தங்க :—வீட்டுக்கா எடுத்துக் கொண்டுபோனுன்? அவன் எப்படிப் பட்டவன்? அவன் காப்பாற்றுவானென்று உங்களுக்கு எப்படித் தெரியும்?

இன்ஸ் :—நாங்கள் அதைப்பற்றி ஜாக்கிரதை எடுத்துக் கொள்வோம். அந்தக் கிழவனைப் பார்க்கும்போதே அவனுக்குக் குழந்தையினிடம் அதிக ஆசை யிருக்கிறதென்று தெரிகிறது. வேண்டுமானுல் அவன் விலாசத்தைச்சொல்லுகிறேன், நீ அங்கே சென்று குழந்தையைப் பார்க்கலாம்.

தங்கமணி சற்றுநேரம் தாமதித்தான். பிறகு இன்ஸ்பெக்டர் எழுதிக்கொடுத்த விலாசத்தை எடுத்துக்கொண்டு அதிக விரைவுடன் ஸ்டேஷனைவிட்டு நீங்கினுன்.

பத்மாவதி இறந்ததற்குக்காரணம்ஒரு புருஷனேயென்று அறிந்து, தங்கமணி மிக்க கோபங்கொண்டான். அவன் மனதில் பத்மாவதியை வஞ்சித்தவனை எப்படியாவது கண்டுபிடித்துப் பழிக்குப் பழிவாங்கவேண்டும் என்ற வைராக்கியம் உண்டாயிற்று.

## 6. அம்பலவாணன் ஆனந்தக் கூத்தாடினுன்.

அப்பாசாமி முதலி தெருவிலிருந்த அம்பலவாணன் வீடு பார்வைக்கு அழகானதன்று. அந்தத் தெரு இடுக்கமாயும் அழுக்குப் படிந்ததாயுமிருக்கும். அதிலுள்ள வீடுகள் புழுதி படிந்தும், ஜன்னல்கள் சிறியவையாயுங் கனமுள்ளவையாயுமிருக்கும். வீடுகளின் கதவுகள் பார்வைக்கு விகாரமாயும் துவாரங்களோடுகூடினவையாயுமிருக்கும். வீடுகளைப்பார்க்கும் போதே அவைகளில் வசிப்பவர்கள் கஷ்டஜீவனஞ் செய்பவர்களென்று விளங்கும். அம்பலவாணன் வீடும் மேற்கூறியவாறேயிருந்தது. அந்த வீட்டின் தெருவில் ஒரு பலகை தொங்க விட்டிருந்தது. அதில் "இவ்விடத்தில் தய்யல்வேலை செய்யப்படும். ஷர்ட்டு, கோட்டு, கால்சட்டை, பாவாடை, ரவிக்கை ஜாக்கெட்டு முதலியவைகள் தச்சுக் குடுக்கபடும். நாணயமாந வேலை—மலிவான கூலி" என்றெழுதியிருந்தது. அவ்வீட்டின் சாளரங்களில் திரைச்சீலைகள் கட்டப்பட்டிருந்தன. ஓரறையில் தொங்கவிடப் பட்டிருந்த கூட்டில் ஒரு கிளி "குள்ளா, குள்ளா" என்று கூவிக்கொண்டிருந்தது. அந்த வீதியிலுள்ள மற்றெல்லா வீடுகளைக் காட்டிலும் அம்பலவாணன் வீடு பார்வைக்குச் சுத்தமாயிருந்தது.

அம்பலவாணன் தனக்குக் கிடைத்த குழந்தையை எடுத்துக்கொண்டு அதிதுரிதமாகத் தன் வீட்டிற்கு வந்தான். அவன் கதவைத் திறந்துகொண்டு ஓரறைக்குள் நுழைந்தான்.

அவ்வறையில் தான் கிளி இருந்தது. அந்தக் கிளி குள்ளனைக் கண்டதும் "குள்ளா எங்கே போயிருந்தாய்?" என்றது. அம்பலவாணன் அந்தக் கிளிக்கு இவ்வளவு தான் கற்பித்திருந்தான்.

அம்பலவாணன் நித்திரைசெய்து கொண்டிருந்த குழந்தையை ஒரு படுக்கையில் விட்டு விட்டு அதைப் பார்த்துக் கொண்டே "நான் நல்ல பாக்கியசாலி. ஆஹா! இந்தக் குழந்தையின் அழகை என்னவென்று சொல்வேன்! கந்தர்வனைப் போலிருக்கிறதே! இதனுக்குப் பொன் மயமான சிறகுகள் தான் தேவை. குழந்தை விழித்துக்கொண்டால் என்னசெய்யுமோ? என் மனந்திருப்தி யடையவில்லை. நான் இதுவரையில் குழந்தைகளுடன் பழகாதவனாகலால் இந்தக் குழந்தையைச் சரியாய் ஆதரிக்க என்னாலாகாது. அதனுக்குப்பால், ரொட்டி, பழம் முதலியவை வேண்டியிருக்கும்" என்றான்.

அம்பலவாணன் திடீரென்று எதையோ நினைத்துக் கொண்டு குழந்தையின்மேல் ஒரு போர்வையைப் போர்த்து விட்டு வெளியே சென்றான். அவன் சற்றுநேரத்திற்கெல்லாம் பால், ரொட்டி, பிஸ்கட் முதலியவைகளை யெடுத்துக்கொண்டு வீட்டிற்குத்திரும்பிவந்தான்.

அவன் தான் கொண்டு வந்த சாமான்களை ஒரு மேஜையின்மேல் வைத்துவிட்டு, மிகவுந்திருப்தியுடன் "ராஜகுமாரனுக்குத் தகுந்த உணவு இதோ மேஜையின் மேலிருக்கிறது. என் குழந்தை கந்தர்வனாயிற்றே! ஒரு குழந்தைக்குப் பால், பிஸ்கோத்து, ரொட்டி இவைகளைவிட இனிய பொருள் வேறென்ன இருக்கிறது? என் மாணிக்கம் படுத்துக்கொள்ளும் அறையை நாளையதினம் அலங்கரிக்கவேண்டும்" என்றான்.

அம்பலவாணன் குழந்தை எப்பொழுது விழித்துக் கொள்ளுமோவென்று எதிர்பார்த்த வண்ணம் இருந்து மகிழ்ந்துகொண்டிருந்தான். சற்றுநேரமானதும், அவன் மேஜையின்மேல் ஒரு வெள்ளை வஸ்திரத்தை விரித்து அதன்மேல் குழந்தைக்காக வாங்கி வந்த உணவுப் பொருள்களை வைத்தான். நான்கு மெழுகு வர்த்திகளை யேற்றி காண்டிடங்களில் வைத்து விட்டுப் படுக்கையினருகில் உட்கார்ந்திருந்தான். குள்ளன் அந்தக் குழந்தையைத் தன் எஜமானனாகவும் அரசனாகவும் பாவித்தான்.

குழந்தை களைபொதிகூடிய முகத்துடன் விழித்துக் கொண்டது. அதன் கண்கள் ஒளி வீசின. அது சற்றுநேரம் வரையில் தன்னருகில் உட்கார்ந்திருந்தவிகாரரூபமுடையகுள்ளனைப் பார்த்துக் கொண்டிருந்தது; பிறகு புன்னகைசெய்து கொண்டே அவன் கைகளைப்பிடித்துக் கொண்டது. அம்பலவாணன் மனமகிழ்ந்து அந்தக் குழந்தையை யெடுத்து மார்போடணைத்து முத்தமிட்டான். அவனுக்கு இப்பொ

கண்டான ஆனந்தத்திற்கு அளவில்லை. தான் மோக்ஷலோகத்திலிருப்பதாகவே நினைத்துக் கொண்டான்! அவன் குழந்தையை நோக்கி, "குழந்தாய்! நீ மிகவும் புத்திசாலி; எழுந்திருக்கும்போது அழுவாயென்றெண்ணியிருந்தேன். அப்படிச்செய்யாமல் சிரித்துக் கொண்டிருக்கிறாய். என் ஆண்டவனே! நீ என்னிடமே எப்போதும் இருக்கவேண்டும்" என்றான்.

அம்பலவாணன் சற்றுநேரம் கூச்சத்துடன் கெக்கலித்துக் கொண்டிருந்தான். பிறகு குழந்தையை மேஜையின் மேல் உட்காரவைத்தான். அதன் முகம் அழகாயும் உருண்டையாயும் ரோஜாப்பூ நிறமுள்ளதாயு மிருந்தது. அதன் வாய் மலருந்தருணத்திலிருக்கும் தாமரைமொக்கைப் போலிருந்தது. அம்பலவாணன் தான் இது வரையில் அம்மாதிரி அழகுவாய்ந்த குழந்தையைப் படங்களிற்கூடக் கண்டதில்லையென்று தானே சொல்லிக்கொண்டான். அவன் ஐந்து நிமிஷநேரம் குழந்தைக் கெதிரில் நின்றுகொண்டு, தன் முகத்தைப் பலவாறு சுளித்து நங்குகாட்டிக் கொண்டிருந்தான். குழந்தை இவைகளை யெல்லாம் பார்த்துச் சிரிக்க ஆரம்பித்தது. அதைக் கண்ட அம்பலவாணன் "ராஜா, எது உன்னைச் சிரிக்கச்செய்கிறது? என் முகமா? நான் குள்ளன். நீயும் என்னைக் குள்ளனென்றே கூப்பிடு. நான் எதிர்பாராமலே நீ எனக்குக் கிடைத்தாய். நீ எதை விரும்புவாயென்பது எனக்குத் தெரியாது. என் கையிற்கிடைத்ததைக் கொண்டுவந்து வைத்திருக்கிறேன். நீ சந்தோஷமாயிருக்கிறாயா?" என்று கொஞ்சினான்.

குழந்தை அம்பலவாணன் கூறியதையெல்லாம் அறிந்துகொண்டதுபோல் சிரித்தது. பிறகு மேஜையின்மேல் நின்றுகொண்டு அவனைத் தாவிப்பிடித்தது.

அம்பலவாணன் "என் துரையே! உனக்கு இவ்வளவு புத்தி எங்கிருந்தடாவந்தது? இந்த வீட்டில் நீயே தெய்வமாயிருக்கவேண்டும். வா, கொஞ்சம் உணவு கொடுக்கிறேன்" என்று சொல்லிக்கொண்டே சிறிது ரொட்டியைப் பாலில் நனைத்துக் குழந்தையின் வாயில் ஊட்டினான்; பிறகு இரண்டு மூன்று பிஸ்கட் துண்டுகளைக்கொடுத்தான். குழந்தை அவைகளைத்தின்றதும் அம்பலவாணன் அதன் வாயில் பாலை ஊற்றினான். அவன் பெருமை மிகுந்தவனாய், "குழந்தாய்! இது உன்வீடென்றே நினைத்துக்கொள். எனக்குச் சரியாய்ச்சமைக்கத் தெரியாது. அப்படிச்செய்தாலும் கடுகு தாளிக்க என்னாலாகாது. அது படபடவென்று வெடித்து என்னை ஏமாற்றிவிடும். உனக்கு ரொட்டி, பிஸ்கோத்து, பால் இவைகளின் மேல் பிரியமுண்டு, இல்லை? ஆ! இது தான் சந்தோஷவாழ்வு! தேத்தண்ணீர் குடிக்கிறாயா?" என்று சொல்லிக்கொண்டே அக்குழந்தையின் வாயில் கொஞ்சந் தேத்தண்ணீர் ஊற்றினான்.

ஆனால் குழந்தை முகத்தைக்கடுத்துக்கொண்டு வாயைப்பாத்திரத்தினின்றும் எடுத்துவிட்டது. பிறகு அது அமைதியுடன் அவ்வறையைப் பார்த்துக்கொண்டிருந்தது. அம்பலவாணன் அதிக ஆவலுடன் குழந்தையின் முகத்தைப்பார்த்துக்கொண்டிருந்தான். அவன் தனக்குள் "இது புதிய இடமாயிருக்கிறதென்று அவன் பார்க்கிறாற்போலிருக்கிறது. இதில் எப்படியிருப்பதென்று யோசிக்கிறானோ?" என்றான்.

ஆனால் குழந்தை மிகுந்த சந்தோஷத்துடனிருப்பதாகக் காணப்பட்டது. அது அவ்வறையிலிருந்த கிளியை உற்று நோக்கி "அது என்ன?" என்று தடுமாற்றத்துடன் கேட்டது.

அம்பலவாணன் குழந்தை பேசியதைக்கேட்டதும் மிக்க சந்தோஷமுற்றவனாய் "அது ஒரு பக்ஷி—ஒரு கிளி" என்றான். உடனே கிளி "குள்ளா குள்ளா, குள்ளப்பா?" என்றது.

குழந்தை ஒன்றுந்தெரியாமல் விழித்துக்கொண்டிருந்தது. அம்பலவாணன் அது கேட்ட கேள்வியின் பதிலை விடாது சொல்லிக்கொண்டிருந்தனன். அவன் குழந்தையைச் சந்தோஷிக்கச் செய்யவேண்டி "அது ஒரு கிளி. அது பச்சைநிறமுடையது. அது நாம் கற்பிக்கும் மொழிகளைத் திருப்பவுஞ்சொல்லும். நாளையதினம் ஒரு பாடுகிற பக்ஷி கொண்டு வருகிறேன். இனிமையாய்ப் பாடிக்கொண்டிருக்கும். நாளையதினம் எனக்கு வேலை யிருக்கிறது. இருந்தாலுமிருக்கட்டும். உன்வேலையைப் பார்த்தபிறகுதான் மற்றவேலையைப்பார்க்க வேண்டும். நாளையதினம் உன்னையுங் கடைக்கு அழைத்துப் போகிறேன்" என்றனன்.

அவன் குழந்தையைத்தன் வளைந்ததோளின் மேல்வைத்துக்கொண்டு அதோடு அவ்வறையின் அநேக இடங்களில் நின்று, ஆங்காங்குள்ள விநோதப்பொருள்களைக் குழந்தைக்குக் காண்பித்து அவைகளின் உபயோகங்களையும் எடுத்துக் கூறினான். அம்பலவாணன் குழந்தையை வைத்துக்கொண்டே குதித்தான். குழந்தை சிரித்தவண்ணமிருந்ததால் அவனுக்கு மிக்க களிப்புண்டாயிற்று. குழந்தைகளைத்துப்போய்விட்டது; சிரிப்பும் அடங்கிவிட்டது. அது படுத்துக்கொள்ளும் நேரமாயிற்றென்று அம்பலவாணன் எண்ணினான்.

அவ்வறையில் ஒரு பழையகட்டில் இருந்தது. அம்பலவாணன் குழந்தையை அதன் மேல் படுக்கவைத்தான். அவன் குழந்தைக்குக் குளிராமலிருக்கும்படி மிருதுவான போர்வையையெடுத்து அதன் மேல் போர்த்தான். அவன் சற்றுத் தூரத்தில் நின்றுகொண்டு குழந்தையைப்பார்த்த வண்ணம் ஏதேதோ சிந்தித்துக்கொண்டே தான் தையல் வேலை செய்யும் பொழுது குழந்தை அழாமல் இருக்குமாவென்றெண்ணினான்.

அவன் ஏதோ ஒரு தீர்மானஞ் செய்துகொண்டு அவ்வ

றையின் கதவை மூடிவிட்டுத் தெருவில் சென்றான். வீதியில் விளையாடிக்கொண்டிருந்த சிறுவர் அவனைக்கண்டதும் பயந் தோட ஆரம்பித்தனர். வயதானவர்களும் அவன் போகும் போது ஒரு புறமாய் ஒதுங்கி நின்றனர்.

அம்பலவாணன் தன் வீட்டைவிட்டுச் சென்றபோது ஒருமனிதன் அவனைக் கண்டு இருளில் மறைந்துகொண்டதை அவன் கவனித்தானில்லை. அந்த மனிதன் அம்பலவாணனைக் கண்டு பயந்தவன் போல் காணப்பட்டான். அம்பலவாணன் மிக்க சந்தோஷத்துடன் சென்றானதலால் அவன் தன்னெதிரி லிருந்த பொருள்களை லக்ஷியஞ்செல்யாமற்போனான்.

சற்றுநேரத்திற்கெல்லாம் அம்பலவாணன் ஒரு பெரிய மூட்டையுடன் திரும்பிவந்தான். அவன் அதை அறையின் ஒருபுறத்தில் வைத்துவிட்டுக் குழந்தையைப்பார்த்து "இன் னும் தூங்கிக்கொண்டு தானிருக்கிறாயோ? பாவம்! தூங்கு, நன்றாய்த்தூங்கு. நீ இப்பொழுது சிரித்துக்கொண்டும் விளை யாடிக்கொண்டும் எழுந்திருந்திருப்பாயென்று மூடத்தனமாய் எண்ணினேன். தூங்கிக்கொண்டிரு, சற்றுநேரம் வேலை செய் கிறேன்" என்றான்.

அவன் கெக்கலி கொட்டிக்கொண்டே சிறிது தைத்தி ருந்த ஒரு சொக்காயை யெடுத்துத் தைக்க ஆரம்பித்தான். அவன் தற்சமயம் தன்வசமழிந்தவனானான். அவன் அடிக் கடி ஆவலுடனும் பரிதாபத்துடனும் படுக்கையைப் பார்த் துக்கொண்டு தனக்குள் ஏதேதோ பேசிக்கொண்டிருந்தான்.

அவன் "குழந்தை விழித்துக் கொண்டால் நானென்ன செய்வேன்? நான் இந்த வேலையைவிட்டு விட்டுத்திடீரென்று அவனை எடுக்கமுடியாதே! ஆஹா, அவன் எவ்வளவு அழகா யிருக்கிறான்! நான் அவன் போன்ற குழந்தையைக் கண்டதே யில்லை. அவன் குணங்களும் வேறொரு குழந்தையினிடத் தில் இருக்கமாட்டா. ஐயோ! அவன் பெயர் இன்னதென்று எனக்குத் தெரியாதே! அவனைக் கேட்டால் சொல்லுவானோ? அவனோடிருந்த சாமான்களில் அவன் பெயர் எழுதப்பட்டி ருந்தாலுமிருக்கும். இந்த வேலை முடிந்ததும் தேடிப்பார்க் கிறேன்" என்றான்.

பத்மாவதி இறந்த இடத்தில் ஒரு சிறிய மூட்டை யிருந்தது. அம்பலவாணன் அதை ஒருவருக்குந் தெரியாமல் ஜாக்கிரதையாய் எடுத்து வந்து தன் வீட்டில் வைத்திருந் தான். அவன் தான் செய்துகொண்டிருந்த வேலையைமுடித்து விட்டு அந்த மூட்டையை அவிழ்த்துப் பார்த்தான்.

அவன் அதிலுள்ள வஸ்துக்களைப் பார்த்துவிட்டு "இல்லை அவன் பெயர் இவைகளிலில்லை, அது இன்னதென்று கண்டு பிடிக்க முடியவில்லை. போலீஸாருக்கும் அவன் பெயர் தெரி யாது. ஓ! இதென்ன இது? ஒரு காகித மூட்டை! பழைய

கடிதங்களிருக்கின்றன. இந்த மோதிரம் அவன் தாயாருடை யது. எப்படியிருந்தாலும் இந்த வஸ்துக்களெல்லாம் அவ னுடையதே. நான் இந்தக் கடிதங்களைப் படிக்கவாவது நாசப் படுத்தவாவது கூடாது. இவைகளை ஓரிடத்தில் பத்திரப் படுத்திவைக்கிறேன்." என்று சொல்லிக்கொண்டே அந்த மூட் டையை ஓர் பெட்டியில் வைத்துப் பூட்டினான். அவன் கடி தங்களைப்படிக்கக் கூடாதென்று தீர்மானித்ததற்குத் தகுந்த காரணமுண்டு. அவைகளைப் படித்துப்பார்ப்பதினால் அக்கு ழந்தையின் பெற்றோர் இன்னாரென்பது தெரிந்துவிடுமென்று எண்ணினான். அப்படித் தெரியுமானால் குழந்தையை அதன் சொந்தக்காரரிடம் ஒப்புவிக்க வேண்டுமேயென்று பயந்தான்.

அவன் குழந்தை தன்னைவிட்டுப் பிரிந்துபோகு மென் றெண்ணிய மாத்திரத்தில் அவனுக்கு மிகுந்த வருத்தமுண் டாயிற்று. அவன் பெருமூச்செறிந்து கொண்டே "நான் கடி தங்களைப் படிக்கவில்லை. குழந்தை யாருடையதென்று எனக் குத் தெரியாது. நான் தகுந்த அதிகாரிகளிடமிருந்து அவனை வாங்கி வந்தேன். அவனை வளர்க்க எனக்குச் சொந்தமுண்டு" என்றனன்.

அம்பலவாணனைக் கண்டு இருளில் மறைந்த மனிதன் நடந்த வற்றையெல்லாம் ஜன்னலின் வழியாய்ப் பார்த்துக் கொண்டிருந்தான். அவன் இப்பொழுது அவ்விடம் விட்டுப் போய் ஓர் விளக்கண்டை வந்து நின்றான். விளக்கு அங்கே நின்றது தங்கமணி யென்று காண்பித்தது.

தனக்குக் கிடைத்த அருமைக் குழந்தையை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்து வருகை யில், குழந்தையின் மழலைச் சொற்களைக்கேட்டும் விளையாட்டு களைக் கண்டும் களித்த அம்பலவாணன் ஆனந்தக்கூத் தாடினான்.

## 7. பத்மாவதி இறந்தது நல்ல காலத்திற்கு அடையாளம்.

பத்மாவதியைக் கண்ட மறுநாள் சாயங்காலம், தீனத யாளு தன் வேலைக்காரனை நோக்கி "அருணகிரி, எல்லாம் தயாராய் விட்டதா?" என்று கேட்டான்.

அருணகிரி மிகவும் வணக்கத்துடன் "தயார்செய்து விட்டேன்" என்று பதில் சொன்னான்.

தீனதயாளு சந்தோஷத்துடன் "நல்லது. இன்னும் அரை மணிநேரத்தில் புறப்படவேண்டும். தங்கமணி வந்ததும் அவனை என்னிடம் அழைத்துவா" என்றான்.

அருணகிரி அவ்விடம் விட்டகன்றதும், தீனதயாளு

ஏதோ யோசித்துக்கொண்டே ஓர் நாற்காலியில் உட்கார்ந்திருந்தான். அவன் நேர்த்தியான உடை தரித்திருந்தான். அருகாமையிலிருந்த ஒரு பலகையின்மேல் விதவிதமான சட்டைகளும் வஸ்திரங்களும் வைக்கப்பட்டிருந்தன. தீனதயாளு எங்கேயோபிரயாணஞ்செய்ய எண்ணியிருந்தபடியால் தனக்கு வேண்டிய வஸ்துக்களையெல்லாம் எடுத்து வைத்திருந்தான். அவன் புறப்படுவதற்கு முன்னே ஒரு காரியத்தை முடித்துப் போக வேண்டுமென்று நினைத்தான்.

தீனதயாளுவின் கையில் ஒருவன் சிக்கியிருந்தான்; அவன் தன் பணத்தை அபகரித்துக்கொண்டவன். சாதாரணமாய் ஒரு வேலைக்காரன் திருடினுனென்று ஏற்பட்டால் அவனை அவனுடைய எஜமானன் தண்டிப்பதும் வேலையினின்று நீக்குவதும் வழக்கம். அம்மாதிரி செய்யவேண்டுமென்றே மேகநாதன் தன் எஜமானனிடங் கூறினுன். தீனதயாளுவும் அம்மாதிரி செய்யச் சம்மதித்திருப்பான். சில காரணங்களை முன்னிட்டு அவன் இப்பொழுது அங்ஙனஞ் செய்ய இஷ்டப்படவில்லை. சந்தர்ப்பங்கள் வேறு விதமாயிருந்தன. தீனதயாளு ஒரு துணிகரமான காரியத்தைச் செய்யவேண்டுமென்று எண்ணியிருந்தான். அதைச்செய்து முடிக்கச்சகாயம் வேண்டியிருந்தது. ஆகவே அவன் அதற்குத் தகுந்தவன் யாரென்று யோசித்துக்கொண்டிருந்தான்; தன் பணத்தைக் கைப்பற்றிய தங்கமணியே அதற்குத் தகுந்தவனென்று தோன்றிற்று.

அவன் தங்கமணியின் வரவை ஆவலுடன் எதிர்பார்த்திருந்தான். கதவைத்தட்டுஞ் சப்தம் கேட்டது. கதவைத்திறந்ததும் தங்கமணி உள்ளே நுழைந்தான்.

தங்கமணி உள்ளேவந்ததும் தீனதயாளு அவன் முகத்தை உற்று நோக்கினுன். அவன் தங்கமணியின் குணங்களை அறியுமாறே அவ்விதம் பார்த்துக்கொண்டிருந்தான். தீனதயாளு அவனை நம்பலாமென்றெண்ணியதோடு தங்கமணிமோசஞ்செய்ய மாட்டானென்றும் அவன் தெரிந்துகொண்டான்.

தீன :—தங்கமணி! நீ சிற்றறையிலிருந்து பணத்தை அபகரித்துக் கொண்டுபோனதாகக் கேள்வியுற்றேனே.

தங்க :—ஆம், ஐயா. எனக்கு அதைப்பற்றி மிகவும் விசனமாயிருக்கிறது.

தீன :—என்ன சங்கதி? தெரிவி பார்ப்போம்.

தங்க :—ஐயா, வீட்டில் மிகுந்த சங்கடம் நேர்ந்தது. நான் பணத்தைத் திருடவேண்டுமென்று எண்ணவில்லை. மானேஜரிடம் கடனாக வாங்கிக்கொண்டு என் சம்பளத்தில் கொடுத்து விடலாமென்றிருந்தேன். மானேஜரிடம் இந்தச்சங்கதியைத் தெரிவித்துச் சம்பளத்தில் பிடித்துக்கொள்ளும்படி கேட்டுக்கொண்டேன்.

தின :—மானேஜர் அப்படித்தான் சொன்னார். அதற் காகத்தான் நான் உன்னை வெளிப்பார்க்க விரும்பினேன். நான் நீ செய்ததைக் குற்றமாக எண்ணவில்லை.

தின :—வீட்டில் ஏதோ சங்கடம் நேரிட்டதென்றாயே, அதென்ன ?

தங்க :—என் சிறியதகப்பன் மகள் வியாதியால் வருந் திக்கொண்டிருந்தாள். நோயாலும் உணவின்மையாலும் உடம்பு சக்தியற்றிருந்த அவளைக் கொஞ்ச நாளைக்குமுன் சென்னையிற்கண்டேன். நான் அவளுக்காக எவ்வளவோ கஷ்டப்பட்டேன். டாக்டர்களை வரவழைத்து வைத்தியஞ் செய்தேன். அதனால் மிக்கபணஞ் செலவாயிற்று. அதற் காகத்தான் நான் தங்கள் பணத்தை எடுத்தேன். நான் சொல் வது உண்மையென்பது டாக்டர்களை விசாரித்தால் தெரிய வரும். நான் அம்மாதிரி கஷ்டத்தை எப்பொழுதும் அனுப விக்கவில்லை. நீங்கள் என்னைத் தண்டிக்கமாட்டீர்களென்று நம்புகிறேன். என்று சொல்லிக் கண்ணீர் பெருக்கினான்.

தினதயாளு அவன் கையைப் பிடித்துக்கொண்டு "நீ சொல்வதை முற்றும் நம்புகிறேன்" என்றான். அவன் தங்க மணியின் சிறிய தகப்பன் மகள் யாரென்பதைத் தெரிந்து கொள்ளவிரும்பினான். ஆனாலும் அவள் பெயர் என்னவென்று கேட்டால் தங்கமணிக்குச் சந்தேகமுண்டாகுமென்றெண்ணி, "அவள் இப்பொழுது எப்படியிருக்கிறாள் ? சௌக்கிய மாயிருக்கிறாளா?" என்று கேட்டான்.

தங்க:—ஆஹா, சௌக்கியமாய்விட்டது. (என்று சொல் லிக்கொண்டே கண்ணீர்விட்டான்.)

தின :—(சந்தேகத்துடன்) என்ன சமாசாரம் ? எதற் காகக் கண்ணீர் விடுகிறாய்?"

தங்க :—அவள் இறந்து விட்டாள்.

தினதயாளு இதைக்கேட்டதும் அவன் மனம் விகார முற்றது. தங்கமணியின் சிறியதகப்பன் மகள் பத்மாவதியா யிருக்கலாமோவென்று எண்ணியபோது அவனுக்குப்பயமுண் டாயிற்று. ஆனால், அதற்கு முன் நாள் தான் அவளைப்பார்த் ததால் இறந்தவள் பத்மாவதியாயிருக்க முடியாதென்றெண் ணினான். இந்த விசனகரமான சங்கதி தினதயாளுவை அதி கமாய்ப் பாதித்தது.

தின :—ஐயோ பாவம்! மிகவும் விசனகரமானது. அவள் எப்படி இறந்துவிட்டாள் ?

தங்க :—அவள் இறந்ததன் காரணம் எனக்குத் தெரி யாது. நேற்றைய சாயந்திரம் அவள் இந்தப் பங்களாவுக் கருகில் இறந்து கிடந்தாள்.

தின :—இந்தப் பங்களாவுக்கருகிலா ?

தங்க :—ஆமாம்.

தீனதயாளு தன் மனதிலுண்டான கலவரத்தை அடக்கிக்கொண்டான். அவன் மார்பு படபடவென்று அடித்துக்கொண்டது. இறந்தது பத்மாவதியென்றே தீர்மானிக்கலானான். அவளுக்கும் தீனதயாளுவுக்கும் சம்பந்தமுண்டென்பது தங்கமணிக்குத் தெரியுமோ?

தங்கமணிக்கு அந்த விஷயம் தெரியாது. தீனதயாளு சாமர்த்தியத்துடன் தங்கமணியைச் சில கேள்விகள் கேட்டு இறந்த ஸ்திரீயின் பெயர் பத்மாவதி யென்பதையும் அவளோடொருவன் சம்பந்தப்பட்டிருந்தானென்பதையும் தெரிந்துகொண்டான். ஆனால் தங்கமணிக்குத் தன்மேற் சந்தேகமில்லையென்பது தீனதயாளுக்கு நன்றாய் விளங்கிற்று.

தீனதயாளு, இறந்தவளைப் பற்றித் தான் அதிக வருத்தப்படுவதாகத் தங்கமணியிடம் தெரிவித்தான். தங்கமணிக்குக் கொஞ்சங் கடன் இருப்பதாகத் தெரிந்துகொண்டு தீனதயாளு அவனிடம் ஒரு 100 ரூபாய் நோட்டைக்கொடுத்து, அதை இறந்தவளின் கர்மத்திற்கு உபயோகப்படுத்திக் கொள்ளச்சொன்னான். இதைக் கண்டதும் தங்கமணிக்கு அளவில்லாத ஆனந்தமுண்டாயிற்று. தன் எஜமானனுக்காக உயிரை வேண்டுமானாலுங் கொடுக்கவேண்டுமென்று அவன் தீர்மானித்தான்.

தீன:—தங்கமணி! உன்னிடம் ஒரு விஷயம் சொல்லவேண்டும். உன்பார்வையும் முகமும் நன்றாயிருக்கின்றன; நீ மிகவும் யோக்கியனென்று எனக்குத் தோன்றுகிறது. நீ இனிமேல் துறைமுகத்தில் வேலைசெய்யவேண்டாம். நான் ஒரு மாதகாலம் பல்லாவரத்திலிருக்கவேண்டுமென்று எண்ணுகிறேன். ஆகையால் நீ அங்கே வந்தால் எனக்குச் சௌகரியமாயிருக்கும். உன்னிஷ்டமென்ன?

தனக்கு உதவிபுரிந்த எஜமானன் வேண்டுகோளைத் தங்கமணி மறுப்பானோ? அவன் பல்லாவரத்துக்கு வருவதாய் ஒத்துக்கொண்டான்.

தங்கமணி அவ்விடம் விட்டகன்றதும், தீனதயாளு தனியாய் உட்கார்ந்துகொண்டு ஏதேதோ யோசனைசெய்துகொண்டிருந்தான். பத்மாவதி இறந்துவிட்டாள். அவன் கமலாவனியை விவாகஞ்செய்து கொள்வதைத் தடுக்க ஒருவருமில்லை. அதிர்ஷ்டம் அவனிடம் வந்து அடைக்கலம் புகுந்தது! அவன் முன்னோர்கள் நல்ல அதிர்ஷ்டசாலிகளாயிருந்ததால், தானும் அப்படியே இருப்பனென்று தீனதயாளு எண்ணியிருந்தான். அவன் வழியை அடைக்க ஒன்றுமில்லை—கூடியசீக்கிரத்தில் அவன் கமலாவனியையும் அவள் செல்வத்தையும் அடையலாம்!

கால்மணி நேரஞ் சென்றதும் தீனதயாளு மோட்டார் காரில் ஏறிக்கொண்டு பல்லாவரத்திற்குப் பிரயாணமானான்.

அவன் தனக்குள் பத்மாவதி இறந்தது நல்ல காலத்திற் கடையாளம் என்றெண்ணி மிக்க சந்தோஷப்பட்டான்.

## 8. கமலாஸனியின் ஸந்தேகம்.

ஸரஸ்வதி தன் மகளோடும் சில வேலைக்காரர்களோடும் பல்லாவரம்போய்ச் சேர்ந்தனள். பல்லாவரத்தில் அவர்களுக்கிருந்த பங்களா மிகவும் பழைமையானது. கருணாநந்தர் அதைச் செம்மைப்படுத்தி அதைச்சுற்றிலும் நல்லமரங்களையும் செடிகளையும்வைத்துப் பயிராக்கும்படி ஏற்பாடுசெய்திருந்தனர். அந்தப் பங்களாவைச் சுற்றிலும் இருந்ததோட்டம் விஸ்தாரமாய் ஓர் சிங்காரவனம் போலிருந்தது. பங்களாவும் தோட்டமும் பார்வைக்கு ரமணீயமாயிருந்ததென்றாலும் ஸரஸ்வதிக்கு அங்கிருக்கப் பிடிக்கவில்லை. ஏனெனில், அண்டையயலில் பேச்சுத்துணைக்குக்கூட ஒருவருங் கிடையாது. கருணாநந்தர் பங்களாவுக்குச் சற்றுத்தூரத்தில் ஓர் இடிந்த வீடும் பாழடைந்த தோட்டமுமிருந்தன. அவ்வீட்டைப்பார்க்கும்போது பயங்கரமாயிருக்கும். ஸரஸ்வதிமுதலியவர்கள் அதற்குக் “குடிசை” என்று பெயரிட்டிருந்தனர். அதைவிட்டால் இரண்டு மைல்வரையில் வேறொரு வீடுங் கிடையாது. இரண்டு மைல் தூரத்துக்கப்பால் ஓர் சிறிய பங்களாயிருந்தது. ஆனால் அதில் ஒருவரும் குடியிருக்கவில்லை.

ஒருநாள் ஸரஸ்வதி தன் மகளைநோக்கி, “கமலா, அண்டையயலில் ஒருவருமில்லாததால் இங்கே பொழுதுபோகவில்லை; இது ஓர் பாலைவனம் போலிருக்கிறது” என்றாள்.

கமலா:—அம்மா, எனக்கு இவ்விடத்திலிருக்கமிக்க ஆசையுண்டு. நம்முடைய தோட்டம் அழகாயிருக்கிறது. சந்தடி அதிகமாயில்லாமலிருப்பதே எனக்குச் சுகமுண்டாக்குகிறது.

ஸரஸ்:—கமலா, நீ மிகவும் விசித்ரமானவள். எனக்கு எது சந்தோஷமாகக் காணப்படுகிறதோ அதை நீ வெறுக்கிறாய். என்ன இருந்தாலும், திருவல்லிக்கேணியிலிருப்பதுபோல் இங்கே இருக்கமுடியுமா?

கமலா:—இங்கே இருப்பதுதான் எனக்கிஷ்டம். அந்தக் குடிசையைப் பார்க்கும்போது எனக்கு மிகவும் சந்தோஷமுண்டாகிறது. நான் சிறுமியாயிருந்தபோது அங்கேபோய் விளையாடுவது வழக்கம். அதன் சம்பந்தமாய் ஓர் விநோதச் சரித்திரமிருக்குமென்று நினைக்கிறேன்.

அன்று மாலை நாலுமணிக்குக் கமலாஸனி வெளியே உலாவச்சென்றாள். ஆகாயம் களங்கமற்றிருந்தது; சாயங்காலவெய்யில் அதிக உஷ்ணமில்லாமலிருந்தது; கமலாஸனி

பங்களாவின் தோட்டத்தைக் கடந்ததும் எந்தப்புறம் போகலா மென்று ஆலோசித்தாள். கடைசியாகக் "குடிசையைநோக் கிச்செல்வோம்" என்று தனக்குள் தீர்மானித்துக்கொண்டு அவ்வழியே சென்றாள்.

வஸந்தகாலத்தின் இனிமையான காற்று கமலாஸனிக்கு இன்பமுண்டாக்கியது; அவள் முகம் ரோஜாநிறம் வாய்ந்தி ருந்தது. அவள் வேலியைக்கடந்து குடிசைக்கருகில் சென்று, கீழே விழுந்து கிடந்த ஓர் மரத்தின் மேலுட்கார்ந்து குடிசை யைப்பார்த்துக் கொண்டிருந்தாள்.

அந்தப் பழையவீடு அவளுக்கு எவ்வளவு அருமையாக இருந்தது! சிறுமியாயிருந்தபோது அவள் அங்கே பலதடவை வந்திருக்கிறாள்; அவள் அங்கே உட்கார்ந்துகொண்டு ஆகாச மாளிகை கட்டுவது வழக்கம். கந்தர்வர்களையும் மற்றுமுள்ள தேவர்களையும் அங்கே அவள் காண்பதாக எண்ணிக்கொண் டிருந்தாள். தன் கனவில் கண்ட மோகனராஜனை அவள் அந்த வீட்டில் வைத்திருந்தாள்!

அவளுக்குப் பின்புறத்தில் காலடிசப்தம் கேட்டது. அவள் திரும்பிப்பார்த்தாள். ஒரு நாள் திருவல்லிக்கேணி யில் தன் பங்களாவினறையிலிருந்து கையை நீட்டிக்காட்டிய பொழுது சாலையிற்சென்று கொண்டிருந்த ஆடவனை இப்பொ ழுது தன்னெதிரில் கண்டாள்!

அவனைக் கண்டதும் கமலாஸனியின் முகம் சிவந்தது. தற்சமயம் அவளெதிரில் நின்றவன சாலையிற்சென்றவனே— அவன் இப்பொழுதும் அதேமாதிரி உடைதரித்திருந்தான். அவன் திடீரென்று அவ்விடத்திற்கு வந்ததைப்பற்றிக் கமலா ஸனி ஆச்சர்யப்படவில்லை—அவள் கனவு கண்ட இடம் அது வல்லவா? மோகனராஜனையும் கந்தர்வர்களையுங் கண்ட இடம் அதுவல்லவா? ஆகவே அவன் அங்கே வரலாமென்று அவள் எதிர்பார்த்திருக்கலாம்!

அவன்:—என்னை மன்னிக்கவேண்டும். உன்னைப் பய முறுத்திவிட்டேனென்று நினைக்கிறேன்.

கமலாஸனியின் முகத்திலிருந்த களை அதிகரித்தது. அவள் இதுவரையில் தான் அம்மாதிரி மனிதனைக்கண்டதில்லை யென்று எண்ணினாள். அவன் முகம்களங்கமற்றதாயும், வார்த் தை இனிமைவாய்ந்ததாயுமிருந்தது.

கமலா:—இல்லை, அதிகமாய்ப் பயப்படவில்லை. ஆனால் இங்கேயாராவது வருவார்களென்று நான் எதிர்பார்க்கவில்லை.

அவன்:—நானும் அப்படித்தான் எண்ணியிருந்தேன. நான் உன்னைப் பார்த்ததும் நீ பயப்படுவாயென்று கருதி இங்கே வரவேண்டாமென்றிருந்தேன்.

இதைக்கேட்டதும் கமலாஸனியின் மனதில் ஒருவித மான உணர்ச்சி உண்டாயிற்று. அவள் ஒன்றும் பதில்பேச

வில்லை. வந்தவனும் கமலாஸனியைப் போலவே பிரமித்து நின்றான். அவன் ஏதோயோசனை செய்துகொண்டே அந்தப் பழையவீட்டைப் பார்த்துக்கொண்டிருந்தான். பிறகு அவன் அவ்விடம் விட்டகன்றான். அவன் தன்னைவிட்டுப்போய் விடுகிறானேயென்று கமலாஸனி வருத்தப்பட்டாள். ஆனால் அவன் மறுபடியும் அவளிடம் வந்து "அம்மா இந்தவீடு யாருடையதென்று உனக்குத்தெரியுமா?" என்று வினவினான்.

அவன் பழையவீட்டைச் சுட்டிக்காட்டினானென்பதையும் அதற்கு அப்பாலிருந்த பங்களாவைச் சுட்டிக்காட்டினானென்பதையும் அறியாமல், கமலாஸனி, "அந்தப் பங்களா கருணானந்தருடையது; இந்த வீட்டை நாங்கள் "குடிசை" யென்று சொல்வது வழக்கம். இதன் சொந்தக்காரர் இன்னாரென்று எனக்குத் தெரியாது? என்று பதிலளித்தனள்.

அவன் கமலாஸனிக்குச் சில உபசாரமொழிகள் சொல்லிவிட்டுப்பழைய வீட்டை உற்றுநோக்கிய வண்ணமிருந்தான். அவன் முகத்தில் விசனக்குறி தோன்றியதைக் கமலாஸனி கவனிக்கவில்லை.

கடைசியாக அவன் "இது ஓர் அழகிய இடம். இதன் சம்பந்தமான அதிசயம் ஏதேனுமிருக்குமென நினைக்கிறேன். இதன் சொந்தக்காரன் ஏன் இதைப் பழுதுபார்க்கவில்லையென்று நீ அறிவாயோ?" என்றான்.

கமலாஸனி தலையை அசைத்துக்கொண்டே "அதன் சொந்தக்காரர் இன்னாரென்று ஒருவருக்குந்தெரியாது. அதன் சம்பந்தமான அதிசயம் ஏதாவது இருக்குமென்று நான் நினைக்கவில்லை. குடிசையின் பின்புறம் தரையோடு தரையாய் இருக்கிறது. பாவம்!" என்றனள்.

அவன்:—(புன்சிரிப்புடன்) நீ இதைப்பற்றி ஆச்சர்யப்படுகிறாயோ?

கமலா:—(புன்னகையுடன்) ஆம்; ஒருவேளை நீங்கள் அதைப்பார்க்க வேண்டுமென்று எண்ணியிருக்கலாம். அங்கே ஒருவேலைக்காரனிருக்கிறான், அவனைக் கேட்டால் சாவி கிடைக்கும்.

அவன்:—சாவி வேண்டுமென்பது அனாவசியம். நான் சாவியில்லாமலே உள்ளே போவேன். அதனுள்ளே பார்க்கத் தகுந்த விநோதம் ஏதேனுமுண்டோ?

கமலா:—சில விடங்களில் சித்திரவேலை செய்திருக்கிறது. அதைப் பார்க்கலாம்.

அவன்:—சரி, அப்படியானால் நான் அதைப்பார்க்க வேண்டும். இம்மாதிரி விஷயங்களில் எனக்கு அதிகப்பிரியம். நான் அடாதகாரியஞ் செய்கிறேனென்று எண்ணவேண்டாம். அதன் சொந்தக்காரரிடமிருந்து உத்தரவுவாங்கி வந்திருக்கிறேன்.

கமலா :—(ஆச்சரியத்துடன்) சொந்தக்காரரிடமிருந்தா ?

அவன் :—(சிரித்துக்கொண்டே) ஆமாம், நான் தான் சொந்தக்காரன்.

கமலா :—நீங்களா ?

வந்தவன் அந்தப் பழையவீட்டின் சொந்தக்காரனென்றறிந்ததும் கமலாஸனிக்கு மிகுந்த சந்தோஷமுண்டாயிற்று. அவள் யாதும் பேசாமல் அவனையே பார்த்துக்கொண்டிருந்தாள்.

அவன் :—அம்மா, நான் உன்னை ஏமாற்றியதற்காக என்னை மன்னிக்கவேண்டும். இந்த வீடு இன்னாருடையதென்று தெரிந்துகொள்ளாதவன்போல் பாசாங்குசெய்தேன். அந்தச் சமயத்தில் எனக்கு வேறொன்றும் சொல்ல வாய்வராமையால் உன்னிடம் ஏதாவது பேசவேண்டுமென்ற ஆசையுடன் அப்படிச்சொன்னேன்—என்று சொல்லி மயங்கினான். அவன் முகத்தில் ஒரு புதிய களை தோன்றிற்று.

கமலா:—நான் உங்களைமன்னிக்கவேண்டிய நிமித்தமில்லை. நீங்கள் என் அண்டை வீட்டுக்காரராயிருப்பதால் உங்களிடம் நான் சிநேகம் பாராட்டுவது என் கடமை. நீங்கள் யாரென்று தெரிவிக்கவில்லையே.

அவன் :—என் பெயர் செல்வராஜன்.

செல்வராஜன் ! கமலாஸனி இந்தப் பெயரைக்கேட்டதும் மந்திரத்தால் கட்டுண்டவள்போல் ஆனாள். அவள் யாதொன்றும்பேசாமல்திடீரென்று அவ்விடம் விட்டகன்றாள். அவள் மரங்களுக்கிடையில் நுழைந்து வேலியைத்தாண்டிக்கொண்டு தன் பங்களாவை நோக்கிச்சென்றாள். அவள் முகம் மாறியது; மார்பு பட படவென்றடித்துக்கொண்டது. இதைக் கண்ட செல்வராஜன் பிரமித்து நின்றான். தன் பெயரைக் கேட்டதும் அவள் அவ்விடம் விட்டுச்சென்றதை நினைத்து அவன் ஆச்சரியமடைந்தான்.

கமலாஸனி பங்களாவை யடைந்ததும் ஓரறையினுள் சென்று தனியாய் உட்கார்ந்திருந்தாள். அவள் ஏதோ யோசனைசெய்யவேண்டித் தனியாயிருக்கவிரும்பினாள். அவள் மனதில் இப்பொழுது தான் முதல் முதல் ஓர் விசித்ரமான எண்ணம் தோன்றிற்று. தன்முகம் சுந்தரத்தின் பங்களாவிலிருந்த சமுத்திர கன்னிகையின் சிலைக்குப்பொருந்தியிருந்ததும், அச்சிலையில் வரைந்துள்ள "செல்வராஜன்" என்னும் பெயர் சற்று முன்னர்தான் கண்ட மனிதனுடையதாயிருந்ததும், திருவல்லிக்கேணியில் தான் அறையிலிருந்து சுட்டிக்காட்டியபொழுது சாலையில்சென்று கொண்டிருந்தவனுடைய முகம் இப்போது தான் கண்ட புருஷனுக்கு அமைந்திருந்ததும் அவளுக்கு வியப்பையும் வெளியிடக்கூடாத ஒருவித உணர்ச்சியையும் உண்டுபண்ணின.

அவள் மனதில் அடக்காத ஆனந்தமுண்டாயிற்று. அவள் கரங்கள் நடுங்கின. அவள் அவ்வறையிலிருந்த நிலைக் கண்ணாடியினெதிரில் நின்றுகொண்டு தன்னுருவத்தை அதி நுட்பமாய்ப்பார்த்துக் கொண்டிருந்தாள். ஒவ்வொரு பெண்ணுக்கும் இம்மாதிரி உணர்ச்சி அவள் வாழ்நாளில் ஒருதரந்தான் உண்டாகும்!

கமலாஸனி அநேக விஷயங்களைப்பற்றி யோசிக்க ஆரம்பித்தாள். ஆனால் அவள் மனம் முற்றும் செல்வராஜனிடம் சென்றுவிட்டது. சற்றுமுன்னே பழையவீட்டின் தோட்டத்தில் புன்சிரிப்புடனும் விசாலமான கண்களுடனும் நின்றிருந்த மனிதன் கர்த்தாத்தின் வீட்டிலுள்ள சிலையைச்செய்தவனாயிருப்பானோ? கமலாஸனிக்கு ஒன்றுந்தோன்றவில்லை. ஆனால் இவன்தான் அந்தச்சிலையைச் செய்திருக்கவேண்டுமென்று எண்ணினாள்.

சற்றுநேரத்திற்குப் பிறகு, கமலாஸனி அவ்வறையை விட்டுத் தன் தாயாரிருக்கும் அறைக்குச்சென்றாள். ஸரஸ்வதி கமலாஸனியின் முகம் வேறுபட்டிருந்ததைக் கவனித்தவளாய், "கமலா உன் உடம்பு அசௌக்கியமாயிருக்கிறதா என்ன? வெளியே அலைந்து திரிந்து உடம்பை ஏன்கெடுத்துக் கொள்ளுகிறாய்?" என்றனள்.

கமலா :—இல்லை அம்மா, சௌக்கியமாகத்தான் இருக்கிறேன். வெளியே போவதனால் உடம்புக்குக் கெடுதிவராது.

ஸரஸ் :—எனக்கு இங்கே பொழுதுபோகவில்லை. அந்தக் குடிசலையைப் பழுதுபார்த்து அதில் யாராவது அந்தஸ்துள்ளவர்கள் வந்து குடியிருந்தால் நன்றாயிருக்கும்.

அந்தப் பழையவீட்டின் சொந்தக்காரனைத் தான்கண்டதாகக் கமலாஸனி ஒருவரிடமும் வெளியிடவில்லை. அந்த வீட்டைப்பழுதுபார்க்க அநேக வேலையாட்கள் வந்திருக்கிறார்களென்றும், அதன் சொந்தக்காரன் செல்வமும் யௌவனமும் வாய்ந்தவனென்றும் ஸரஸ்வதியிடம் யாராவது சொல்லியிருந்தால் அவள் அவனைத் தன்மகளுக்கு நாயகனாக்க எண்ணங்கொள்வாள்! தனவந்தர்களைப்பற்றிக் கேள்வியுற்றபோதெல்லாம், அவர்களிலொருவன் தன்மகளை விவாகஞ்செய்துகொள்ளவேண்டுமென்று எண்ணுவது ஸரஸ்வதியின் சுபாவம்.

அன்றிரவு ஏழுமணிக்குக் கமலாஸனி ஓர் அறையில் உட்கார்ந்து ஏதோ யோசித்துக் கொண்டிருந்தனள். செல்வராஜனுடைய முகம் அவள் கண்ணெதிரிலிருந்தது. அவன் பழையவீட்டிலிருக்கிறானோ சென்னைக்குப்போய்விட்டானோ வென்று அவள் க்லேசமுற்றாள். அங்ஙனம் அவன் சென்னைக்குப்போய் விட்டிருந்தால் அவள் அவனை மறுபடியும் எவ்வாறு காண்பது?

அவள் யோசிப்பதை நிறுத்திவிட்டு ஓர்கதைப் புஸ்த

கத்தை எடுத்துப்படிக்கத் தொடங்கினுள். அது மிஸ்ஜேன் ஆஸ்டன் எழுதிய (Pride and Prejudice) "கர்வமும் தப்பெண்ணமும்" என்னும் இனிய இங்க்லிஷ் நாவல்.

கமலாஸனி அதைப் பலமுறை படித்திருந்தும் தன்மன திலுள்ள கிலேசத்தைமாற்றிக் கொள்ளுமாறு இப்பொழுதும் அதைப் படிக்கலானுள்.

சற்றுநேரம் படித்தாள்; கவனம் கதையின்மேல் நாட வில்லை. தான் அன்று மாலைகண்ட செல்வராஜன் சமுத்திர கன்னிகையைச் செய்த சிற்பியாயிருக்கலாமோவென்று ஆலோசித்தாள். எவ்வளவு நேரம் யோசித்துப்பார்த்தும் கமலாஸனியின் ஸந்தேகம் நீங்கவில்லை.

அத்தருணத்தில் நெருக்கதவைத் தட்டும் சப்தம்கேட் டது.

# 9. பொருமைபொங்கி எழும்பியது.

கதவை இடித்த சப்தம் ஸாஸ்வதியின் காதில்விழுந்த வுடன் அவள் "இந்நேரத்தில் யார் கதவைத் தட்டுகிறுர்கள்? யாராவது விருந்ினராயிருக்கலாமோ?" என்று தனக்குள் சொல்லிக்கொண்டாள்.

அவள்கொண்ட சந்தேகம் சீக்கிரமே தீர்ந்துவிட்டது. நெருக்கதவைத்திறக்கும் சந்தடிகேட்டது. அங்கிருந்தவேலைக் காரனேடு இனிய குரல்வாய்ந்த ஒருவன் இரண்டொரு நிமிஷம்பேசிக் கொண்டிருந்தான். அந்தக் குரலோசையைக் கேட்டதும் கமலாஸனியின் மார்பு படபடவென்று அடித்துக் கொண்டது! இப்பொழுது வந்தவன் அன்று சாயந்திரம் அவளை இடிந்த வீட்டின் தோட்டத்திற் கண்டவனே!

வேலைக்காரன் ஸரஸ்வதியினிடம் வந்து "அம்மா செல் வராஜன் என்பவர் வந்திருக்கிறுர். அவர்ஏதோ ஒரு அவசர மான வேலையின் பொருட்டு வந்திருப்பதாகச் சொல்லுகிறுர்" என்றுன்.

ஸாஸ்வதி "செல்வராஜனு? அவர் யாராயிருக்கலாம்? சரி, அவரைப் பார்க்கவேண்டும். இரு, வருகிறேன்" என்று சொல்லிவிட்டு ஏதோயோசித்துக் கொண்டிருந்தனள். அங்ங னம் யோசனை செய்யும்போது அவள் கமலாஸனியின் முகத் தை உற்றுநோக்கினுள். ஆனுல், கமலாஸனி தன் தாயாரைப் பார்க்கவில்லை. அத்தருணத்தில் செல்வராஜன் அவ்விடம் வந்து நின்று கொண்டிருந்தான். அவன் அன்று சாயந்திரம் தரித்திருந்த உடையையே இப்பொழுதும் தரித்திருந்தான். ஸாஸ்வதி தன் முகத்தைச் சுளித்துக்கொண்டே அவனை உற்று நோக்கினுள்.

செல்வராஜன் ஸரஸ்வதியை நோக்கி மரியாதையுடன்,

"அம்மா, நான் இப்பொழுது வந்து தங்களைத் தொந்தரவு செய்வதற்காக என்னை மன்னிக்கவேண்டும். நான் தற்போது தரித்திருக்கும் விகாரமான உடையுடன் தங்களை எப்படி பேட்டிகாண்பதென்று கூச்சத்துடனிருந்தேன். உங்கள்வேலைக் காரன் கதவைத்திறந்து இங்கே அழைத்து வந்தமையால் வந்துவிட்டேன். நான் ஒரு கடிதங்கொண்டு வந்திருக்கிறேன். ஆனால் அதை எழுதியவரிடமிருந்து நேராகவாங்கிக் கொண்டுவரவில்லை. அவர் வேலைக்காரனின் பிரதியாளாகவந்தி ருக்கிறேன்" என்று சொல்லிப் புன்னகைசெய்து தன்சட்டைப் பையிலிருந்த ஒரு கடிதத்தை யெடுத்து ஸரஸ்வதியிடங் கொ டுத்தான்.

ஸரஸ் :—(தடுமாற்றத்துடன்) தயவுசெய்து—என்னை மன்னிக்கவேண்டும். ஒருவேலைக்காரனின் பிரதியாளா நீங்கள்?

செல்வ :—(சிரித்துக்கொண்டே) ஆம், இந்தக் கடிதத் தை எழுதியவர் ஒருசேவகனை அனுப்பினர். அந்தச்சேவ கன் என் வீட்டினருகில் வந்தபோது அவன் ஏறியிருந்த குதி ரை இடறிவிழுந்தது. அதனால் அந்தச் சேவகனுக்கு மிகவும் காயமுண்டாகி நடக்கச் சக்தியற்றிருக்கிறன். அவன்விழுந்த சப்தத்தைக்கேட்டதும் நான் அவனிடம் வந்துபார்த்தேன். அவன் கால் சுளுக்கிக்கொண்ட தென்பலதயறிந்து அவனை என் வீட்டிற்கெடுத்துச்சென்று ஓரறையில் படுக்கவைத்தேன். அவன் இந்தக் கடிதத்தைச் சீக்கிரங் கொடுக்கவேண்டு மென்று என்னிடந்தெரிவித்தான். ஆகையால் நான் இதை எடுத்துக்கொண்டு வந்தேன்.

ஸரஸ் :—(புன்னகையுடன்) ஐயா, நீங்கள் எனக்குமிக்க உதவி புரிந்தீர்கள். இவ்வளவு நற்குணம் வாய்ந்த மித்திரர் அண்டையிலிருப்பாரென்று நான் கனவிலும் எண்ணவில்லை" என்று சொல்லிக்கொண்டே இவன் யாராயிருக்கலாமென்று பொருள் படும்படி கமலாஸனியைக் கடைக்கண்ணால் பார்த் தாள். ஆனல் கமலாஸனி கீழ்நோக்கிய பார்வையுடன் நின் றிருந்தாள். செல்வராஜன தற்செயலாய் அங்கே வந்ததை நினைத்து அவள் அகமகிழ்ந்தாள். செல்வராஜன் உள்ளே நுழைந்ததும், கமலாஸனி அன்று மாலை நிஷ்காரணமாய்த் தன்னைவிட்டகன்றதையெண்ணி விசனிப்பவன்போல் அவ ளைப்பார்த்தான்.

ஸரஸ்:—(செல்வராஜனைநோக்கி) தாங்கள் என்நிமித்தம் இவ்வளவு சிரமமெடுத்துக் கொண்டதற்கு நானென்ன கைம் மாறு செய்யப்போகிறேன்? உட்காருங்கள்.

செல்வ :—அம்மா, நான் இருப்பதற்கில்லை. நோயாளி அங்கே தனியாய் வருந்திக்கொண்டிருப்பான். நான் சீக்கிரம் செல்லவேண்டும்.

ஸரஸ் :—அவன் ஏன் தனியாயிருக்கிறன்? உங்களுக்கு

வேலைக்காரர்களில்லை?

செல்வ :—இல்லை.

ஸரஸ் :—(பிரமித்து) இல்லை—வேலையாட்கள் இல்லை? நிச்சயமாய் நீங்கள் பரிகாஸம் செய்கிறீர்கள். உங்கள் வீடு எங்கே இருக்கிறது?

செல்வ :—இதனருகில் ஒரு இடிந்த வீடு இருக்கிறதே, அதுதான் என்வீடு.

ஸரஸ் :—அந்த வீடா? நீங்கள் அங்கே வேலைக்காரர்களில்லாமலா வசித்து வருகிறீர்கள்?

செல்வ :—ஆம், அந்த வீட்டில் ஒரு அறைதான் வசிப்பதற்குத் தகுந்ததாயிருக்கிறது. அதைப் பழுதுபார்த்து அதில் தான் வசித்து வருகிறேன். அந்த வீட்டிற்கு வரவேண்டுமென்ற எண்ணம் ஒரு வாரத்திற்கு முன்னேதான் தோன்றிற்று. ஆகையால் தகுந்த ஏற்பாடுகள் செய்யச்சாவகாசமில்லாமற்போயிற்று.

ஸரஸ்வதியின் மனத்தில் பற்பல எண்ணங்கள் தோன்றின. செல்வராஜன் தன்வீட்டைப்போலவே சிறுமையடைந்தவனாகக்காணப்பட்டான். ஆனால் அதனுண்மையாருக்குத் தெரியும்? அவன் ஒரு தனவானைப்போல் காணப்பட்டான். அவன் "தகுந்த ஏற்பாடுசெய்யச் சாவகாசமில்லை" என்று ஸரஸ்வதிக்காகவே சொன்னான். அப்படிச்சொன்னதால் ஸரஸ்வதி அவன் தனவந்தனாயிருக்கலாமென்றெண்ணி உபசாரம் பண்ணினாள். மேலும் அவன் தனவானைப்போல் காணப்பட்டதால் ஸரஸ்வதியின் மனதில் வேறொரு எண்ணமும் ஜனிக்கலாயிற்று.

அவள் செல்வராஜனை அன்றிரவு தன் வீட்டில் தங்கும்படி வேண்டினாள். அவள் தன் மகளைத்தனியாயழைத்து "நாம் குடிசையென்று சொல்லும் பழைய வீட்டின்சொந்தக்காரர்தான் இங்கே வந்திருப்பவர். அவரைப் பார்க்கும்போதே அந்தஸ்துள்ளவரென்றும் நற்குணம் வாய்ந்தவரென்றும் தோன்றுகிறது" என்றாள்.

அதைக்கேட்டதும், கமலாஸனி தான் செல்வராஜனை முன்னமே கண்டிருப்பதாகச் சொல்லவாயெடுத்தாள். ஆனால் ஏதோ ஒரு காரணத்தை முன்னிட்டு அவள் அங்ஙனங் கூறவில்லை. ஸரஸ்வதி ஏதோ நினைத்துக்கொண்டு திடீரென்று அவ்விடம் விட்டுப்போனாள். செல்வராஜனும் கமலாஸனியுந் தான் அங்கே இருந்தனர்.

செல்வ :—(புன்சிரிப்புடன்) சரி, நேரமாய்விட்டது. வீட்டிற்குப் போகவேண்டும். நான் கடிதத்தைக் கொடுத்தேனே கொடுக்கவில்லையோவென்று அவன் சந்தேகித்துக் கொண்டிருப்பான்.

அவன் இப்படிச் சொல்லிவிட்டுக் கமலாஸனியின் மறு

மொழியை எதிர்பார்ப்பவன்போல் விளக்கை உற்றுநோக்கிக் கொண்டிருந்தான். கமலாஸனி அவன் முகத்தையே கவனத்துடன் பார்த்துக்கொண்டிருந்தாளாதலால் அவன்சொல்லியது அவளுக்குக் கேட்கவில்லை.

செல்வ:—(கமலாஸனி பதிலுரையாதது கண்டு) குடிசையைப்பற்றி நீ சொல்லியதெல்லாம் சரியே. அதுபழைய காலத்தில் கட்டிய கட்டடம். அதைப் பார்க்கும்போது எனக்கு மிக்க சந்தோஷமுண்டாகிறது.

கமலா:—(பரிதாபத்துடன்) நீங்கள் அதில் தனியாகத் தானே இருக்கவேண்டும்? பேச்சுத்துணைக்குக்கூட ஒருவருமில்லையே? நீங்கள் பயப்படமாட்டீர்கள்?

செல்வ:—(புன்னகைசெய்து) நானுபயப்படுவேன்? நான் இதரர்களைப் பயமுறுத்தாமலிருந்தாற் போதாதா! நான் தனியாயிருந்து பழக்கப்பட்டிருக்கிறேன்.

அத்தருணத்தில் ஸரஸ்வதி அங்கேவந்தனள். அவள் புன்னகையுடன் செல்வராஜனைப் பார்த்து "நீங்கள் நடந்து வந்தீர்களா, குதிரை மீதேறி வந்தீர்களா?" என்று கேட்டாள்.

செல்வ:—நடந்து தான் வந்தேன். என் வீட்டிற்கும் இதற்கும் அரைமைல் தூரந்தானிருக்கும். நான் குதிரை மேலேறுவதில்லை. இடறிவிழுந்த குதிரையை ஓரறையில் கட்டியிருக்கிறேன்.

குதிரையை அறையில் கட்டியதைப்பற்றி ஸரஸ்வதியும் கமலாஸனியும் சிரித்தார்கள்.

ஸரஸ்:—ஐயா, நீங்கள் எனக்கு உபகாரஞ் செய்வதன் பொருட்டு இங்கு வந்து உடனே திரும்பிப்போவது தகுதியல்ல. இன்றிரவு இங்கே தங்கியிருக்கவேண்டும்.

செல்வ:—நீங்கள் இவ்வளவு பக்ஷமாயிருப்பது எனக்கு மிகவும் சந்தோஷத்தை உண்டுபண்ணுகிறது. நான் மாத்திரம் தனியாயிருப்பதானால் உங்கள் வேண்டுகோளுக் கிணங்குவேன். உங்கள் மித்திருடைய வேலைக்காரன் அங்கேபடுத்துக்கொண்டிருக்கிறானே. நான் அவனைத்தனியே விட்டிருக்க முடியாது.

செல்வராஜன் சொல்லியகாரணம் சரியானதாக இருந்தது. ஸரஸ்வதியினிடம் அநேகதெட்ட குணங்களிருந்தபோதிலும், சில நல்ல குணங்களுமிருந்தன. அவள் "ஐயோ, அந்தப்பாழடைந்த வீட்டில் எப்படி இருக்கமுடியும்? இதற்கென்ன செய்யலாம்" என்று சொன்னாள்.

அதைக்கேட்ட கமலாஸனி "அம்மா, நாம் இரண்டு ஆட்களை அனுப்பி அங்கிருக்கும் நோயாளியை எடுத்து வரச் சொல்லலாகாதா? இவர் அதற்குச் சம்மதிப்பாரென்று தோன்றுகிறது" என்றனள்.

செல்வ:—(ஸரஸ்வதியைநோக்கி) அம்மா, நான் உங்க

ளுக்கு மிகுந்த கஷ்டமுண்டாக்குகிறேன். எனினும் நீங்கள் இத்தனை முறை சொல்லுகிறபடியால் இன்றிரவு நான் இங்கே தங்கியிருக்கிறேன்.

ஸரஸ்வதி தன்மகள் சொல்லியபடியே ஆட்களையனுப்பத் தயாராயிருந்தாள். செல்வராஜன்தானும் ஆட்களுடன்சென்று நோயாளியை எடுத்து வருவதாகச்சொல்லி அங்ஙனமே சென்றான். அன்று காலையில், செல்வராஜன் சென்னைக்குத் திரும்பிப் போய்விட வேண்டுமென்று எண்ணியிருந்தான். இப்பொழுது அவன் யோசனை மாறிவிட்டது; பல்லாவரத்தி லேயே சிலகாலமிருக்க வேண்டுமென்று தீர்மானித்துவிட்டான். திருவல்லிக்கேணியில் ரஸ்தாவில்சென்று கொண்டிருந்தபொழுது ஜன்னலின் வழியாய்ப்பார்த்த பெண் இங்கிருந்தமையால் அவன் மனம் சந்தோஷமடைந்தது.

ஆட்களும்செல்வராஜனும் பங்களாவைவிட்டுச் சென்றதும், ஸரஸ்வதி நோயாளியைப் படுக்கவைப்பதற்காக ஓரறையில் படுக்கையைக்கொண்டு வந்துபோடும்படி ஏற்பாடுசெய்தனள். செல்வராஜன் படுத்துக்கொள்வதற்காக மற்றோரறையில் படுக்கை போடப்பட்டது. இவைகளை ஏற்பாடுசெய்து கொண்டிருந்ததால் ஸரஸ்வதி செல்வராஜன் கொண்டுவந்த கடிதத்தின் சமாசாரத்தைக் கமலாஸனியிடஞ்சொல்ல அவகாசமில்லாமற்போயிற்று. சற்றுநேரத்திற்கெல்லாம் செல்வராஜனும் ஆட்களும் நோயாளியை எடுத்துக்கொண்டு திரும்பி வந்தனர்.

நோயாளிக்கென்று படுக்கைபோடப்பட்டிருந்த அறையில் அவனைப் படுக்கவைத்தார்கள். ஸரஸ்வதியும் அவள் குமாரத்தியும் அவனைக்கண்டு வருத்தப்பட்டார்கள். அவனுக்குச் சுமார் முப்பது வயதிருக்கும். அவன் முகத்தில் சதை மடிப்புகளுடன் இருந்தது. செல்வராஜன் அவன் காலில் ஏதோ ஒரு மருந்தை வைத்துக்கட்டி அவனுடன் இதமாகப் பேசிக்கொண்டிருந்தான்.

பிறகு ஸரஸ்வதி செல்வராஜனைப் போஜனஞ்செய்ய அழைத்தாள். அவன் வெகு சந்தோஷத்துடன் அவளுடன் சென்றான். அவன் போஜனஞ்செய்து கொண்டிருந்தபோது ஸரஸ்வதி அவன் விருத்தாந்தங்களைக்கேட்கலாயினள். அவன் ஒவ்வொரு கேள்விக்கும் சாதுர்யமாகப்பதிலளித்து வந்தான்.

போஜனமானதும் செல்வராஜன் மெத்தைக்குச்சென்று ஓர் நாற்காலியிலுட்கார்ந்தான். சற்று நேரத்திற்கெல்லாம் கமலாஸனியும் இரகசியமாக அங்கே வந்தாள்.

கமலா :—ஐயா, நீங்கள் சித்திரவேலைக்காரரா?

செல்வ:—(புன்சிரிப்புடன்) அப்படித்தான் நம்புகிறேன்.

கமலா :—ஆமாம், நீங்கள் படமெழுதுவீர்களோ?

செல்வ:—இல்லை. அதற்கும் நமக்கும் வெகுதூரம். நான்

சிலைவேலை செய்வேன்.

கமலா :—(மெதுவாய்) அப்படித் தான் எண்ணினேன்.

செல்வ :—ஏன் ?

கமலா :—ஏனென்றால்.—

அதற்குமேல் ஒன்றுஞ்சொல்ல முடியாமல் மயங்கினாள். செல்வராஜன் என்பவன் ஒரு சமுத்திரகன்னிகையின் சிலை செய்து அதற்குத் தன்முகத்தை அமைத்திருக்கிறானென்று சொல்ல அவளுக்கு இஷ்டமில்லை. ஒருவேளை அதைச்செய்தவன் வேறொரு செல்வராஜனாயிருக்கலாமென்றெண்ணினாள்.

அவள் :—நான் காரணஞ்சொல்ல முடியாது.

செல்வ :—வாஸ்தவந்தான். நான், சிலைவேலை செய்வேனென்று உனக்கெப்படித் தெரிந்தது? (அவன் செய்தசமுத்திரகன்னிகையை அவள் பார்த்திருக்கக்கூடுமோ?) ஆம், நான் சிலைவேலை செய்பவன். ஆனால் அந்த வேலையில் அதிக கெட்டிக்காரனல்ல.

கமலா :—அந்த வேலையை நீங்கள் விரும்புகிறீர்களா ?

செல்வ :—நான் அதை மனப்பூர்வமாய் விரும்புகிறேன். அதனால் தான் ஜீவனஞ்செய்து வருகிறேன்.

கமலாஸனி ஆச்சரியத்துடன் அவனைப்பார்த்தபொழுது அவள் செல்வராஜனிடம் விசுவாசமுடையவள்போலக்காணப்பட்டாள்.

கமலா:—அது கஷ்டமான வேலையல்ல? அதைச்செய்யும்போது யாதேனுமொரு பாகம் கெட்டுப்போய்விடாது? முகம் கெட்டுப்போனால் என்ன செய்வது ?

செல்வ :—மற்ற அவயவங்களையெல்லாஞ் செய்துமுடித்த பிறகுதான் முகத்தை ஆரம்பிப்பேன். முகம் இப்படியிருக்க வேண்டுமென்று ஆலோசித்து ஒரு முகத்தை மனதில் வைத்துக்கொண்டு தான் வேலைசெய்வேன். முகத்தை ஆரம்பித்தால் நிறுத்தாமல் வேலைசெய்வேன். முடிந்தபிறகு தான் கையை எடுப்பேன்.

கமலா :—நான் நல்ல சிலைகளை அதிகமாகப் பார்த்தது கிடையாது.

செல்வ :—என் ஷாப்புக்கு வந்தால் காணலாம்.

கமலா :—அது எங்கே இருக்கிறது ?

செல்வ :—மவுண்டுரோட்டிலிருக்கிறது.

கமலா :—அவைகளில் சிலவற்றை இங்கு ஏன் கொண்டு வரக்கூடாது ?

செல்வ :—கொண்டு வரலாமென்று தானிருக்கிறேன். என்வீட்டில் ஒரு அறை நன்றாயிருக்கிறது. அதில்வைத்துக் கொள்ளலாம். ஆனால் என்ன பிரயோஜனம்? உன்னைப்போல் ஒருவர் பார்ப்பதானால்:—

கீழே ஏதோ சந்தடி கேட்டது. புதிதாய் யாரோவந்தார்

கள். ஒரு மோட்டார்கார் வந்து நின்றசப்தமுங்கேட்டது. அவள் விசனத்துடன் செல்ராஜனை நோக்கி "யாரோவந்திருக்கிறார்கள்" என்று கூறிவிட்டுக் கீழே இறங்கிச்சென்றாள். தீனதயாளு ஸரஸ்வதியோடு பேசிக்கொண்டிருந்தான்.

ஸரஸ் :—(தன் மகளைக்கண்டதும்) "கமலா, இதோதீனதயாளர் வந்திருக்கிறார். செல்வராஜன் கொண்டுவந்த கடிதத்தின் சமாசாரத்தை உனக்குச்சொல்ல மறந்துவிட்டேன்.

தீனதயாளுவைக் கண்டதும் கமலாஸனியின் முகத்திலிருந்த களை எங்கேயோசென்று மறைந்தது. அவன் எதற்காக வந்தான்? அவன் எப்பொழுது தொலைவானென்று கமலாஸனி எண்ணியிருந்தாள். செல்வராஜன் மெத்தையினின்றும் இறங்கிவந்தான்.

ஸரஸ் :—தீனதயாளரே, செல்வராஜருக்கு நாம் மிகவுங் கடமைப்பட்டிருக்கிறோம். நீங்கள் அனுப்பியசேவகன் கீழே விழுந்து காலை ஒடித்துக்கொண்டான். இவர் சகாயஞ்செய்திராவிடில்—எனக்குச்சங்கதி தெரிந்திராது. இதற்குக் கொஞ்ச தூரத்தில் ஒரு வீடு இருக்கிறது; அதன் சொந்தக்காரர் இவர்.

தீனதயாளு செல்வராஜன்செய்த உதவிக்காக அவனுக்கு உபசாரமொழிகள் கூறினன். அவர்கள் ஒருவரையொருவர் கவனித்துப்பார்த்தனர். பிறர்மனதிலிருப்பதைத்தந்திரமாயறியும் தீனதயாளுவும், மனிதர்களின் முகத்தைப் பார்க்கும்போதே அவர்கள் குணங்கள் முழுவதையும் சீக்கிரத்திலறியுஞ் சிலவேலை செய்பவனும் ஒருவரையொருவர் உற்றுநோக்கும்பொழுது இருவருஞ் சில விஷயங்களைத் தெரிந்துகொண்டனர். ஆனால் செல்வராஜன் அதிகமாய்த் தெரிந்துகொண்டான்.

ஸரஸ்வதியின் வீட்டில் தன்னையன்றி வேறோர் புருஷனும் மித்ரனாக வரமாட்டானென்றெண்ணியிருந்த தீனதயாளு செல்வராஜனை அங்கே கண்டதுந் திடுக்கிட்டான். தான் முடிக்கவேண்டிய காரியத்திற்கு இடையூறுசம்பவிக்குமென்று அவன் மனதில் தோன்றிற்று. அவன் தன் காரியத்தை உத்தேசித்தே பல்லாவரம் வந்திருந்தான். ஸரஸ்வதியின் பங்களாவினருகில் வேறொருவரும் இருக்கமாட்டாரென்றெண்ணியிருந்தான். விசாரிக்கப் புகுந்ததில், செல்வராஜன் அருகாமையிலுள்ள வீட்டின் சொந்தக்காரனென்று ஏற்பட்டது. தீனதயாளு குடிக்கூலிக்கு எடுத்துக்கொண்ட பங்களா ஸரஸ்வதியின் பங்களாவிலிருந்து இரண்டு மைல் தூரத்திலிருந்தது. தன்னைவிட அருகாமையிலுள்ள மனிதனுக்கே நல்ல சமயங்கள் வாய்க்குமென்று அவன் தெரிந்துகொண்டான். செல்வராஜன் அழகாயும் இளம்பிராயமுள்ளவனாயுமிருந்தானாதலால் அவனைக் கமலாஸனி காதலிக்கக்கூடுமென்றும் தீனதயாளு நினைத்தான். மேலும் தன்னைக் கமலாஸனி வெறுக்கிறாளென்பதையும் அவன் அறிந்து கொண்டான்.

தீனதயாளு மிகவும் தந்திரசாலியாதலால் தன் மனதிலுள்ள சந்தேகங்களை வெளிக்குக் காட்டவில்லை. அவன் முதல் முதலில் செல்வராஜன் யாரென்பதையும் அவனைப்பற்றி ஸரஸ்வதி முதலானவர்கள் என்ன எண்ணியிருக்கிறார்களென்பதையும் அறிந்துகொள்ள வேண்டுமென்று நினைத்தான். அவன் அதைத்தெரிந்துகொள்ளும் வரையில் அந்த வீட்டிற்குத் தன்னைப்போல் வந்திருந்த விருந்தினரிடம் விரோதங்கொள்ள, யாதோர் நிமித்தமுமில்லை.

ஸரஸ்:—(தீனதயாளுவை நோக்கி) நீங்கள் இங்கே வந்தது எனக்கு மிக்க களிப்பை யுண்டாக்குகிறது. இதனாலேயே நீங்கள் எங்களிடம் வைத்திருக்கும் விசுவாசம் நன்கு விளங்குகிறது.

தீன:—பங்களாவிற் சில ஏற்பாடுகள்செய்ய அவகாசமில்லாமற்போயிற்று. ஆகவே இன்றிரவு இங்குவந்தேன்.

ஸரஸ்வதியுந் தீனதயாளுவும் வெகுநேரம் பேசிக்கொண்டிருந்தனர். கமலாஸனி அங்கே தங்கியிராமல் ஓர் அறைக்குள்போய் உட்கார்ந்திருந்தாள். செல்வராஜனும் ஒன்றும் பேசாமலிருந்தான்.

தீனதயாளு தன்வேலைக்காரனைப்பற்றி ஏதோ நினைத்துக்கொண்டு "அவனுக்கு அதிகமாய்க் காயம்படவில்லையே? அவனுக்கு ஏதேனும் நேரிடுமென்று முன்னமே பயந்திருந்தேன். ஏனெனில் அவன் என்னிடம் வந்து சிலநாட்களாகிறது. அவன் மிகவும் முரட்டுவேலை செய்பவன்" என்றான்.

ஸரஸ்:—அப்படியா? அவன் நல்ல யோக்கியனென்று தோன்றுகிறது. உங்கள் போன்றவர்கள் மிகவும் ஜாக்கிரதையாயிருக்கவேண்டும்.

தீன:—அவன் போன்ற யோக்கியன் எவனுமிரான். ஆனால் ஒருபிழைசெய்துவிட்டான். இப்பொழுது அவனுக்கு வேறுவிதமான வேலை கொடுத்திருக்கிறேன்.

ஸரஸ்:—தங்களுடைய உதாரகுணத்தைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். ஐயோ பாவம்! அந்த வேலைக்காரன் மிகவும் நல்லவன்.

தீன:—உங்களுக்கு யாதொரு தொந்தரவும் உண்டாகாமலிருக்கும் பக்ஷத்தில் நான் அவனைப் பார்க்கலாமென்றிருக்கிறேன்.

இதைக்கேட்டதும் ஸரஸ்வதி அவ்விடம் விட்டெழுந்து தீனதயாளுவை அவன் வேலைக்காரன் படுத்திருந்த அறைக்கு அழைத்துச் சென்றாள். அதையறிந்த கமலாஸனி செல்வராஜனிடம் வந்தாள்.

செல்வ:—கமலா, தீனதயாளு உங்களுக்கு வெகுநாளாய்த்தெரிந்தவனோ?

கமலா:—(முகத்தைச் சுளித்து) இல்லை.

கமலாஸனியின் முகத்தைப்பார்த்ததும் அவள் தீனதயாளுவை வெறுக்கிறாளென்று செல்வராஜன் அறிந்துகொண்டான்.

செல்வ:—நீ அவனை விரும்பவில்லையோ?

கமலா:—இல்லை. முகத்தைப்பார்த்ததும் ஒருவனுடைய குணங்களை நீங்கள் அறிந்துகொள்வீர்களென்று தோன்றுகிறது. இப்பொழுது தீனதயாளுவின் முகத்தைப் பார்த்தீர்களே. அவன் குணம் எப்படிப்பட்டதென்று தெரிவியுங்கள் பார்ப்போம். அவன் நல்லவனா, கெட்டவனா? பொய்சொல்லாதீர்கள்.

செல்வ:—அவன் நம்பத்தகுந்தவனல்ல.

கமலா:—அவன் கெட்ட குணமுடையவனா?

செல்வ:—மிகவுங்கெட்ட குணமுடையவன். அவனைக் கண்டு இதரர்கள் அஞ்சுவார்கள்.

தீனதயாளு தன்வேலைக்காரனிடஞ்சென்று அவனைப் பார்த்து அவனுக்குநேரிட்ட துன்பத்திற்காக மிகவும்விசனிப்பவன்போல் பாவனைசெய்தான். பிறகு அவன் ஸரஸ்வதியோடு ஓர் அறைக்குச்சென்றான். ஸரஸ்வதியிடம் சில ஆந்தரங்கங்கள் சொல்லவேண்டுமென்றே அவன் தன் வேலைக்காரனைப் பார்க்கவேண்டுமென்று முன்னே உட்கார்ந்திருந்த இடத்தைவிட்டு வந்தான்.

தீன:—அம்மா, இங்கே வந்திருக்குஞ் செல்வராஜன் சிலை வேலை செய்பவனா?

ஸரஸ்:—எனக்குத் தெரியாது. நான் அம்மாதிரி நினைக்கவில்லை.

தீன:—அவன் பல்லாவரத்தில் எவ்வளவு காலமாக இருக்கிறான்?

ஸரஸ்:—அதுவும் எனக்குத் தெரியாது.

தீன:—அவனைப்பற்றி உங்களுக்கு வேறு ஏதேனுந் தெரியுமா?

ஸரஸ்:—தெரியாது. அவன் நல்ல குடியிற்பிறந்திருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. அந்தப்பழையவீடும் அதைச் சார்ந்த நிலங்களும் அவனுடையவை.

தீன:—அதெல்லாஞ்சரிதான். நீங்கள் சொல்வதை நம்புகிறேன். செல்வராஜன் என்ற ஒரு சிலைவேலைக்காரன் பட்டணத்திலிருக்கிறான். அவன் மிகவும் அயோக்கியன். அதனால்தான் இவனைப்பற்றி விசாரிக்கிறேன். ஒருவேளை இவன் வேறு மனிதனாயிருக்கலாம். ஆனால் நான் சொல்லிய செல்வராஜன் நல்ல புத்திசாலி. அவன் ஓர் அழகிய பெண்சிலைசெய்து மைசூர் விநோதப்பொருள் காட்சிச்சாலைக்கு அனுப்பியிருக்கிறான். அதனால் அவனுக்கு நல்லபெயர் கிடைத்திருக்கிறது. ஆனால் இவன் வேறொருவனாயிருக்கலாம்.

ஸாஸ்:— (பயத்துடன்) தீனதயாளரே, என்னைப்பிர மிக்கச்செய்து விட்டீர்கள். நான் என்ன செய்வது? நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்? இவன் நல்ல அந்தஸ்துள்ளவன் போலிருக்கிறான்.

தீன:—அம்மா, நான் சொல்வதைக் கேளுங்கள். அவன் யோக்கியனாயிருந்தாலுஞ் சரி, அயோக்கியனாயிருந்தாலுஞ் சரி, நாம்மிகுந்த ஜாக்கிரதையோடு இருக்கவேண்டும். அவன் இனிமையாய்ப் பேசுகிறான். இதராகளை வசிகரிக்கும் முகம் வாய்ந்திருக்கிறான். நான் சொல்வதெல்லாம் உங்களுக்கும் உங்கள் புதல்விக்கும் நன்மையைச் செய்வதாகும். பொய்வே ஷம்பூண்டு தேனொழுகப்பேசி ஆதரர்களைவஞ்சிக்கும் அயோக் கியர்கள் ஏராளமாயிருக்கிறார்கள். என்போன்ற அனுபவ சாலிகளுக்கே அவர்களுடைய நடவடிக்கை இன்னதென்று விளங்கும். உங்கள் மகளுக்கு அவன்மேல் பிரீதியுண்டாயிருக் கிறதென்று எனக்குத் தோன்றுகிறது. ஆகையால் நாம் முன் ஜாக்கிரதை எடுத்துக்கொள்வது அவசியமாகும். அவன் வீடு மிகவும் பாழடைந்து கிடக்கிறாற்போலிருக்கிறதே.

ஸாஸ்:—அதை இன்னும் பழுதுபார்க்கவில்லை. கூடிய சீக்கிரத்தில் பழுது பார்க்கவேண்டுமென்று செல்வராஜன் சொன்னான்.

தீன:—இப்பொழுது அவன் அதிலேயா வசிக்கிறான்?

ஸாஸ்:—ஆமாம் தீனதயாளரே, நீங்கள் சமயத்தில் வந்திராவிட்டால் ஏதாவது விபரீதம் நேரிடும்.

தீனதயாளு செல்வராஜனைப்பற்றிச் சொல்லியவைதமெல் லாம் ஸரஸ்வதி நம்பினாள். செல்வராஜன் அயோக்கியனாயிருக் கலாமென்றெண்ணியபடியால் அவனைத் தங்கள் வீட்டிற்கு இனிவரவொட்டக் கூடாதென்று தீர்மானித்து விட்டாள்.

தீன:—அம்மா, பதறவேண்டாம். எதையும் நிதானமாய்ச் செய்யவேண்டும். அவன் ஒரு சமயம் யோக்கியனாயிருக்க லாம்; நான் எண்ணியது தவறாயிருக்கலாம். நாம் ஜாக்கிரதை யாயிருக்கவேண்டுவது அவசியந்தான். அவன் மிகவும் ஏழை யாயிருக்கவேண்டுமென்று எனக்குத் தோன்றுகிறது.

தீனதயாளு தன் ஸாமர்த்தியத்தைக் கடைசிவாக்கியத் தில் காண்பித்துவிட்டான். பணப்பேய் பிடித்தாட்டியும் ஸரஸ்வதி எளியவனை மதியஞ்செய்வாளா? அவள் செல்வரா ஜனை உடனே வெறுக்க ஆரம்பித்தாள்.

அவள் தீனதயாளுவை யழைத்துக்கொண்டு செல்வராஜ னிருந்த இடத்திற்கு வந்தாள். அவர்கள் வரும் காலடிச் சப்தத் தைக் கேட்ட கமலாஸனி செல்வராஜனைவிட்டு ஓரமாகப் போனாள். ஸரஸ்வதி செல்வராஜனை வெறுப்புடன் பார்த் தாள். அவன் அதையறிந்துகொண்டு, அந்த வீட்டிற்குத் தான் மறுபடியும் வரக்கூடாதென்று தீர்மானித்துவிட்டான்.

தீனதயாளு செல்வராஜனை நோக்கி—சிலைவேலைசெய்யும் செல்வராஜன் உங்கள் பாத்தியஸ்தரோ? ஒரு வருஷத்திற்கு முன் அவன் ஒரு சிலைசெய்து ஒருவருக்கு அனுப்பினான்.

செல்வ:—ஆமாம், நான் தான் அவன்.

தீன:—வாஸ்தவமாகவா? அந்தச் சிலை வெகு நன்றாக இருந்தது.

ஸரஸ்வதி வருத்தத்துடன் பெருமூச்செறிந்தாள். தீனதயாளுவின் மனதில் பற்பல எண்ணங்கள் தோன்றின. செல்வராஜன் கமலாஸனியை வசீகரித்துக் கொள்வானோவென்று நினைத்தபோது அவன்மனதில் பொறாமைபொங்கி எழும்பியது

## 10. கமலாஸனியை எங்ஙனம் வசீகரிப்பது?

மறுநாள் விடியற்காலத்தில் கமலாஸனி படுக்கையை விட்டெழுந்தாள். அவள் எப்பொழுதும் அதிகாலையில் எழுந்திருப்பது வழக்கமெனினும் அன்றையதினம் அதிசீக்கிரத்தில் எழுந்திருக்கலாயினள். அவள் அதற்கு முதல் நாளிரவு சரியாய் நித்திரைசெய்யவில்லை. அவள் படுத்திருந்த அறைக்கு அடுத்த அறையில் செல்வராஜன் படுத்திருந்ததினால் அவள் இனிய கனவுகண்டாள். தீனதயாளுவைப்பற்றி நினைக்கும்போதெல்லாம் அவளுக்கு வெறுப்புண்டாயிற்று.

மெத்தையை விட்டிறங்கிக் கீழேவந்தாள். சமையற்காரன் மாத்திரம் விழித்துக்கொண்டிருந்ததைக் கண்டு தன்னைத் தவிர வேறு யாராவது மெத்தையினின்றுங் கீழே இறங்கிவந்தார்களாவென்று அவனை விசாரித்தாள். அவன் செல்வராஜன் முன்னமே வெளியிற்சென்றுவிட்டானென்றுமறுமொழி கூறினான்.

அதைக்கேட்டதும் கமலாஸனி தானும் வெளியேபோகவேண்டுமென்று நினைத்துப் பங்களாவைச்சார்ந்த தோட்டத்திற்குச்சென்றாள். அவள் ஒருவழியிற் சென்றபோது புதிய காலடிச்சுவடுகள் ஒருபுறமாகப் பதிந்திருப்பதைக் கண்டாள். அவை செல்வராஜனுடையனவாயிருக்கலா மென்றெண்ணி அதன் மார்க்கமாயச் சென்றதும் செல்வராஜனைக் கண்டாள்.

கமலா:—உங்கள் காலடிச்சுவடுகளைக் கண்டு இங்கே வந்துவிட்டேன் பார்த்தீர்களா? உங்களைக் காணவேண்டுமென்றே இங்கு வந்தேன்.

செல்வ:—(ஆச்சரியத்துடன்) என்னைக் காணவா? நீ இம்மாதிரி சொல்வது எனக்கு மிக்க சந்தோஷத்தை யுண்டு பண்ணுகிறது.

கமலா:—ஏன்?

செல்வ :—நான் உங்கள் வீட்டைவிட்டுப் போகவேண்டும். நான் போவதைப்பற்றி நீ வருத்தப்படவேண்டாம். நான் சொல்வதை யறிந்துகொண்டாயா?

கமலா :—நீங்கள் போகிறீர்களா?

செல்வ :—ஆம், நான் போகவேண்டும்.

கமலா :—ஏன்?

செல்வ :—ஏனெனில், நான் இனி உங்கள் வீட்டிலிருந்தால் மரியாதை கெட்டுப்போகும்.

கமலா :—ஏன் அப்படிச் சொல்லுகிறீர்கள்?

செல்வ :—நான் அதையறிந்து கொண்டேன்—என்மேற் கோபங்கொள்ளாதே-உன் தாயாரின முகத்திலிருந்து அறிந்து கொண்டேன்.

இதைக்கேட்டதுங் கமலாஸனியின் முகம்மாறியது.

செல்வ:—அவர்கள் தீனதயாளுவோடு சற்றுநேரம்தனியாய்ப் பேசிக்கொண்டிருந்தார்களல்லவா? அப்பொழுது அவன் என்னைப்பற்றி ஏதேனும் அவர்களிடஞ்சொல்லியிருப்பானென்று தோன்றுகிறது—நான் ஏழையென்றும் நாடோடியென்றுஞ் சொல்லியிருப்பான். அதை உன் தாயார் நம்பிவிட்டார்கள்.

கமலா:—அவன் அவ்வளவு அற்பனாக இருக்கமுடியாது.

செல்வ :—நான் எண்ணியிருப்பது தவறாயிருக்கலாம். எப்படியிருந்தாலும், உன்தாயார் என்னை வெறுக்கிறார்களென்பது நிச்சயம்.

கமலாஸனி கண்ணீர்விட்டாள். செல்வராஜன் போய்விடுகிறானேயென்று அவள் அவ்வளவாக வருந்தவில்லை; தன் தாயாரின் அற்பபுத்தியை நினைத்து துக்கித்தாள்.

செல்வ :—ஓர் அவசரமான வேலையின் நிமித்தம் உன்னிடஞ் சொல்லாமல் வந்துவிட்டேனென்று ஒரு கடிதம் எழுதி வைத்துவிட்டு வரலாமென்றெண்ணினேன்; நீ இப்பொழுது என்னை நேரிற்கண்டதினால் பொய்சொல்வதற்கிடமில்லாமற் போயிற்று.

கமலா :—நீங்கள் எங்கள் வீட்டைவிட்டுப் போவதற்கு இதுதானா காரணம்?

செல்வ:—இதுதான் முக்கியமானது. இன்னொருகாரணமுமிருக்கிறது.

கலமா :—அதென்ன?

செல்வ :—அதை எப்படிச் சொல்வதென்று எனக்குத் தெரியவில்லை. நான் உன் வீட்டில் தங்கியிருந்தால் என்னோடு பேசக்கூடாதென்று உன் தாயார் திட்டஞ்செய்து விடுவார்கள். ஏனெனில், நான் நாடோடி என்றெண்ணியிருக்கிறார்களே! என் வீட்டிலுள்ள ஓரறையில் சில சிலைகளைக்கொண்டு வந்து வைக்கப்போகிறேன்; நீ அவைகளைப் பார்ப்பாயென்றெண்ணி

பிருந்தேன், ஆனால்—

கமலா:—நான் கட்டாயம் வந்து பார்க்கிறேன்.

செல்வ:— (ஆவலுடன்) அப்படியானால் சிலசமயங்களில் நாமிருவருஞ் சந்திக்கலாமென்று நினைக்கிறேன்.

கமலா:—ஆஹா, அடிக்கடி சந்திக்கலாம்.

இத்தருணத்தில் "கமலா, கமலா" என்று ஸரஸ்வதிகூப்பிட்ட குரல் அங்கே கேட்டது. கமலாஸனி செல்வராஜனிடம் விடைபெற்றுக்கொண்டு பங்களாவுக்குச் சென்றனள்.

பங்களாவின் ஹாலில் போட்டிருந்த மேஜையின்மேல் சில தட்டுகளில் பலகாரங்களும் டம்ளர்களில் காப்பியும்வைக்கப்பட்டிருந்தன. ஸரஸ்வதியும் தீனதயாளுவும் அதனருகே உட்கார்ந்து கொண்டிருந்தனர். கமலாஸனி பலகாரங்களையும் காப்பியையும் எடுத்துக்கொண்டு ஓரறைக்குச் சென்று உட்கார்ந்தாள். தீனதயாளு நல்ல அந்தஸ்துள்ளவனென்று ஸரஸ்வதி அறிந்திருந்தபோதிலும், சுந்தரத்தின் மேலேயே அவள் கவனம் சென்றிருந்தது; அவனையே தன் மருமகனாக்கிக் கொள்ளவேண்டுமென்று அவள் எண்ணியிருந்தாள்.

கமலாஸனி அவ்விடம் விட்டுப்போனதும் அதிகாலையில் வெளியே சென்றதற்காக ஸரஸ்வதி அவளைக் கோபித்துக் கொண்டாள். தீனதயாளுவும், "இளங்கன்று பயமறியாது" என்றான். கமலாஸனிக்கு அப்பொழுதுண்டான கோபத்திற்கு அளவில்லை. "இந்தச் சண்டாளன் வீட்டைவிட்டு எப்பொழுது தொலைவான்" என்றெண்ணியிருந்தாள்.

ஸரஸ்வதியும் தீனதயாளுவும் செல்வராஜன் வருவானென்று சற்றுநேரம் காத்திருந்தும் வராமையால் அவன் எங்கே போயிருப்பானென்று அறியுமாறு ஸரஸ்வதி கமலாஸனி உட்கார்ந்திருந்த அறைக்குட்சென்று அவளைக்கேட்டாள்.

ஸரஸ்:—செல்வராஜனெங்கே? அவனுக்காகக் காத்திருக்கிறோமே?

கமலா:—அவர் இப்பொழுது வரமாட்டார். அவசரமாய் எங்கேயோ போய்விட்டார்.

ஸரஸ்:—மிகவும் விநோதமாயிருக்கிறதே! உனக்கு எப்படித்தெரியும்?

கமலா:—அவரே சொன்னார். அவரைத்தோட்டத்தில் கண்டேன். அவர் தான் போவதைப்பற்றி உனக்கு ஒரு கடிதமெழுதி வைத்துவிட்டுப் போவதாயிருந்தார். நான் அவரைக்காணவே என்னிடந்தெரிவித்துச் சென்றார்.

ஸரஸ்:—(கோபத்துடன்) அவன் சற்றுநேரங் காத்திருந்து என்னிடம் சொல்லிவிட்டுப் போகக்கூடாதா? அவனுக்குத்தெரிந்தது அவ்வளவு தான்—என்று சொல்லிக்கொண்டே தீனதயாளுவிடம் வந்தாள்.

செல்வராஜன் திடீரென்று அவ்விடம் விட்டுப்போன

காரணம் தீனதயாளுவுக்கு விளங்கவில்லை. அவன்போய் விட்டதைப்பற்றித் தீனதயாளு மகிழ்ச்சியடைந்தான்; ஆனால் அவன் திடீரென்று போனது அவனுக்குப் பெருஞ்சந்தேகத்தை விளைவித்தது. செல்வராஜன் போவதற்கு முன்னே அவன் கமலாஸனியைக் கண்டு தனியாய்ப்பேசியதும் அவனுக்குப் பொறாமையை உண்டுபண்ணிற்று. செல்வராஜன் கமலாஸனியை மறுபடியும் தனியே கண்டு பேச என்ன ஏற்பாடுசெய்திருக்கிறானோவென்று தீனதயாளு கிலேசமுற்றான். கமலாஸனி செல்வராஜனிடம் விசுவாசமுள்ளவளாயிருப்பாளென்று அவன் நிச்சயமாய் எண்ணினான். அவர்களிருவரும் ஒருவரை யொருவர் கடைக்கணித்துக் கொண்டிருந்ததையும் அவன் கண்டிருக்கிறான். தான் சரியான சமயத்தில் வந்ததைப்பற்றித் தீனதயாளு சந்தோஷமுற்றான்; ஆனால் அன்று காலை இருவரும் என்ன ஏற்பாடு செய்துகொண்டார்களோவென்று நினைக்கும்போது அவனுடல் நடுங்கிற்று.

தீன ;—அம்மா நான் உங்களிடம் ஒரு விஷயந்தெரிவிக்க வேண்டும்.

ஸரஸ் :—தாராளமாய்த் தெரிவியுங்கள்.

தீன :—நான் நேற்றிரவு கடிதமனுப்பியதும் திடீரென்று இங்கே வந்ததும் உங்களுக்கு ஆச்சரியத்தை விளைவித்திருக்கலாம்.

ஸரஸ்:—இல்லை, ஆச்சரியமென்ன? உங்களைப்பார்க்க மிகவும் ஆவலுடையவளாயிருந்தேன். நீங்கள் இங்கே சிநேகம் பாராட்டுவது எனக்கு மிக்க மகிழ்ச்சியை யுண்டுபண்ணுகிறது.

தீன :—நான் இப்பொழுது சொல்லப்போகிற விஷயத்தைக்கேட்டு நீஙகள் ஒருவேளை ஆச்சர்யமடைவீர்கள். நான் ஒரு முக்கியமான வேலையை முன்னிட்டே இங்குவந்தேன்.

தீனதயாளு என்ன சொல்லப்போகிறானென்பதை யறிந்து ஸரஸ்வதி தனக்குள் நகைத்தனள். தீனதயாளுவே சுந்தரமாயிருந்தால் அவள் பின்வாங்கி இருக்கமாட்டாள்.

தீன :—என் மனதிலுள்ளதைச் சொல்லுகிறேன். நான் உங்கள் குமாரத்தியைக் காதலித்திருக்கிறேன். உங்களிஷ்டத்தைத் தெரிவிக்கவேண்டும்.

இதைக் கேட்டதும் ஸரஸ்வதிக்கு ஒன்றுந்தோன்றவில்லை. சுந்தரமாயிருந்தால் அவளுக்குச் சந்தோஷமுண்டாயிருக்கும். ஆனால் அவன் கமலாஸனியைக் காதலிக்கவில்லையே!

தீனதயாளு ஸரஸ்வதி பதிலுரையாதது கண்டு தனக்குள்ளே நகைத்தான். சுந்தரத்தைப்பற்றி அவனுக்கு நன்றாய்த்தெரியும். ஸரஸ்வதியின் மனதிலிருந்த எண்ணங்களை அவனறிந்துகொண்டு அதற்குத் தகுந்தபடி சொல்வதற்குச் சித்தமாயிருந்தான். மேலும், ஸரஸ்வதி அநுதஸ்துள்ளவனையே

தன் மருமகனுக்குக் கோருவா ளென்பதும் அவனுக்குத் தெரியும்.

தீன :--நான் கமலாஸனியை முதல் முதல் கண்டவுடன் அவளைக் காதலித்துவிட்டேன். யார்தான் அங்ஙனம் எண்ணு மலிருப்பர்? அவள் அழகியவளாயும் மனதுக்கினியவளாயு மிருக்கிறாள். நான் சிறுபிள்ளைத் தனமாய் ஒரு காரியத்தை யுஞ்செய்யமாட்டேன். இப்பொழுது ஆசையுள்ளவன்போ லப் பாசாங்குசெய்து பிறகு அலக்ஷியஞ் செய்யமாட்டேன். நான் பூலோக விஷயங்களில் அதிக அனுபவமுடையவனாத லால் உங்கள் புதல்வியைப்போன்ற விலையற்றமாணிக்கத்தைத் தெரிந்தெடுக்கும் யோக்கியதையுள்ளவனாயிருக்கிறேன். என் மனதிற்கினிய பெண்ணை விவாகஞ்செய்து கொள்ளவேண்டு மென்று இவ்வளவு காலமாக முயன்றுகொண்டிருந்தேன். அநேக அழகிய பெண்களைக் கண்டிருந்தும் என்மனம் அவர் களின்மேல் நாடவில்லை. உங்கள் குமாரத்தியே என்மனதிற் குரியவளாயிருக்கிறாள்.

அவன் சற்றுநேரம் யாதும் பேசாமலிருந்தான். ஸரஸ் வதி மறுமொழி சொல்லாமல் உட்கார்ந்திருந்தாள். சுந்தர மாயிருந்தால்!

தீன :--ஒரு மூடன் உங்கள் பெண்ணைக் காதலித்தால் முதலில் அவன் அவளிடம் திருட்டுத்தனமாய்ப்பேச எண்ணு வான். நான் அப்படியல்லாமல் உங்களிடம் பேசுகிறேன். உங் கள் அனுமதியைப்பெற்ற பிறகே அவள் சம்மதத்தை உங்கள் மூலமாய்ப் பெறவேண்டுமென்பது என் கருத்து. நம்மிருவருக் கும் அதிகப்பழக்க மில்லாவிடினும் நீங்கள் என் வேண்டுகோ ளுக்கிணங்குவீர்களென்று நினைத்தே உங்களிடம் இதைத் தெரிவித்தேன். நான் இதை முன்னமே தெரிவித்திருப்பேன். வேறொருவன் அவளை மணம்புரிந்து கொள்ளக்கூடுமென்று எண்ணியிருந்தேன். நான் அங்ஙனமெண்ணியது தவறென்று தெரிந்ததனால் இப்பொழுது என் மனதிலுள்ளதை வெளி யிட்டேன். சுந்தரம் கமலாவை மணம்புரிந்து கொள்ளுவா னென்றெண்ணியிருந்தேன். நான் எண்ணியது பிசகென்று இப்பொழுதுதான் தெரிந்தது. அவன் ரத்னாவை மணம்புரிந்து கொள்ளப்போகிறான். அந்த விஷயம் அவர்கள் குழந்தை களாயிருந்தபோதே ஏற்பாடாய்விட்டதாம். சுந்தரம் இதை என்னிடம் நேரில் தெரிவித்தான். ஆகையால் உங்கள் மகளை நான் விவாகஞ்செய்து கொள்ளலாமென்று தோன்றிற்று. உங்கள் அபிப்பிராயத்தைத் தெரிவிக்கவேண்டும்.

ஸரஸ்வதியின் முகத்தில் கிலேசம் விசுவாசபங்கம் முத லியவைகளின் குறி நன்கு விளங்கிற்று. அவள் கடைசியாக, ஒன்று மில்லாததைக் காட்டிலும் பாதி இருப்பதாவது மே லானதென்றெண்ணி, தீனதயாளுவின் வேண்டுகோளுக்கிணங்

கிறாள். அவன் நல்ல அந்தஸ்துள்ளவனென்றும், தன்மகளை அன்பாய் வைத்திருப்பானென்றும் அவளுக்குத்தோன்றிற்று.

அவள் "தீனதயாளரே, நீங்கள் கேட்டதற்குச் சம்மதித்தேன். என் மகளைவிட உயர்ந்தபொருள் எனக்கு வேறொன்று மில்லை. அவள் சுகமாக இருக்கவேண்டுமென்பதே என் கருத்து. நான் அவளை இன்னொரு சமயம் கேட்கிறேன். அவள் சம்மதித்தால் நீங்கள் அவளை விவாகஞ்செய்துகொள்ளலாம்" என்றனள்.

தீனதயாளு அதைக்கேட்டதும் சந்தோஷமடைந்தான். ஆனால் ஸரஸ்வதியின் சம்மதத்தைப் பெற்றதனாலேயே தன் காரியம்முடிந்ததாக எண்ணலாகாதென்று அவன் நினைத்தான். ஏனெனில் கமலாஸனி தன்னைக் காதலிக்கவில்லையென்பது அவனுக்கு நிச்சயமாய்த்தெரியும். ஆகையால் அவன் கமலாஸனியை எங்ஙனம் வசீகரிப்பது?

## 11. மனதுக்கினிய காதலன்.

தீனதயாளு ஸரஸ்வதியின் பங்களாவில் அதிக நாள் தங்கியிருக்கவில்லை. அவன் ஒரு காரியத்தை உத்தேசித்து அவ்விடம் வந்தான். அதில் ஒருபாகம் முடிந்துவிட்டது; மற்றொருபாகம் முடியவேண்டும். அவன் உடனே கமலாஸனியின் சம்மதத்தைத்தெரிந்துகொள்ள இஷ்டப்படவில்லை. இரண்டொரு நாள் சென்ற பின் அவளைக்கேட்கச் சொல்லலாமென்றிருந்தான். அவசரப்பட்டால் யாதொருகாரியமுங் கைகூடிவராதென்று அவனுக்குத் தெரியும். ஆகையால் மறுநாட்காலையில் அவன் தன்னிருப்பிடத்திற்குப் போய்விட்டான்.

அவன் இருந்தபங்களா நாம் முன்னே கூறியதுபோலவே ஸரஸ்வதியின் பங்களாவிலிருந்து இரண்டு மைல் தூரத்திலிருந்தது. தீனதயாளு கமலாஸனியைப்பார்க்கவேண்டுமென்றெண்ணியபோதெல்லாம் மோட்டார்காரி லேறிக்கொண்டு ஸரஸ்வதியின் பங்களாவுக்கு வருவான். தான் எடுத்துக்கொண்ட காரியத்தை முடிப்பதற்கு ஸரஸ்வதி அவளாலான சகாயஞ்செய்வாளென்று எண்ணியிருந்தான்.

அவன் வரும்போதெல்லாம் கமலாஸனியின் முகத்தில் வெறுப்புக்குறி குடிகொண்டிருக்கும். அவன் அங்கே தங்கியிருப்பதால் அவளுக்கு மிக்கவருத்தமுண்டாகும். எப்பொழுதாவது கதவைத்திறக்குஞ் சப்தமுண்டானால் தீனதயாளு வருகிறானேயென்று துயரப்படுவாள். அவன் வந்தால் எப்பொழுது தொலைவானோவென்று எண்ணியிருப்பாள். அவன் வந்து போனபிறகு அவள் தனியாய் ஓரறையிலுட்கார்ந்து கொண்டு ஏதேனும் யோசித்துக்கொண்டிருப்பாள்.

சிலநாள் வரையில் தீனதயாளு அங்கேவரவில்லை. செல்வ ராஜனைப்பற்றியுங் கமலாஸனி ஒன்றுந் தெரிந்துகொள்ள வில்லை. அவள் செல்வராஜனைப்பற்றி நினைக்கும்போதெல் லாம் அவளுக்கு அடங்காத மகிழ்ச்சியுண்டாயிற்று. அவள் பிரதிதினமும் தோட்டத்தில் திரிந்துகொண்டிருப்பாள். அங் கிருந்து பார்த்தால் பழையவீடு நன்றாய்த்தெரியும். அதைக் காணும்போது அவளுக்கு ஆனந்தமுண்டாகும். செல்வரா ஜன் அவள் கண் முன்னேயே இருந்தான். அவன் வேலை செய்துகொண்டிருக்கும்போது அவன் தலைமயிர் காற்றில் அசைவதுபோல் அவள் எண்ணிக்கொள்வாள். அவன் சென் னையிலிருந்து சில சிலைகளையும் சாமான்களையும் எடுத்து வந்தி ருக்கிறானென்று அவள் கேள்வியுற்றிருந்தாள்.

இரண்டு மூன்று நாளைக்குப் பிறகு தீனதயாளு ஸரஸ் வதியின் பங்களாவுக்கு வந்தான். ஸரஸ்வதி அவனைக் களிப் புடன் வரவேற்றனள். மேலும் இரண்டு மூன்று நாளாக அவன் வராதகாரணமென்னவென்று அவனைக்கேட்டாள். அவன் வேலையாயிருந்ததால் வரசரிப்படவில்லையென்று மரி யாதையுடன் சொன்னான். அவன் ஒரு காரியமாய்ச் சென் னைக்குப் போயிருந்தானென்பதைக்கேட்டு ஸரஸ்வதிமகிழ்ச்சி யடைந்தாள். இம்மாதிரி விஷயங்களைக்கேட்பதில் அவளுக்கு மிகுந்த பிரியம்.

அதன் பிறகு தீனதயாளு அடிக்கடி வர ஆரம்பித்தான். அவன் அநேகமாய் இங்கேயே போஜனஞ்செய்வது வழக்கமா யிருந்தது. தான் குடிக்கூலிக்கு எடுத்துக்கொண்ட பங்களா வில்செய்துள்ள புதிய ஏற்பாடுகளைப்பற்றி ஸரஸ்வதியிடம் சொல்லுவான். அவன் ஸரஸ்வதியும் கமலாஸனியும் தன்னி ருப்பிடத்தை வந்துபார்க்கவேண்டுமென்று கேட்டுக்கொள் வான். அவன் கமலாஸனியின்மேல் மிக்க காதல்கொண்டி ருக்கிறானென்று ஸரஸ்வதி எண்ணியிருந்தாள். கமலாஸனிக் கும் அந்த விஷயம் தெற்றெனவிளங்கிற்றெனினும் அவள் தன் வெறுப்பை வெளிக்குக் காட்டவில்லை. தீனதயாளுவைக் காணும்போதெல்லாம் அவள்ஜாடையாய் எங்கேயாவதுபோய் விடுவாள்.

தீனதயாளு சென்னைக்கு அடிக்கடிபோய் மேகநாதனைக் கண்டு வியாபார விஷயங்களைப்பற்றிப் பேசுவான். அவன் ஸந்தோஷமாயிருக்கிறானென்பதையும் விசனத்தோடிருக்கிறா னென்பதையும் மேகநாதன் அறிந்தவனல்லன்.

கமலாஸனி செல்வராஜனைப்பற்றி ஒன்றுங்கேள்வியுற வில்லை. பழையவீட்டில் புகை எழும்பிக்கொண்டிருந்ததை மாத்திரம் பிரதி தினமும் அவள் பார்த்துக்கொண்டிருந்தாள். அவன் மறுபடியும் தாங்களிருவரும் சந்திக்கவேண்டுமென்று சொல்லி இரண்டு வாரமாயிற்று. அவனுக்கு ஏதாவது சம்ப

வித்திருக்கலாமோவென்று கமலாஸனி க்லேசமுற்றாள். அவன் ஒருவேளை அவளை மறந்துவிட்டானோ? இல்லை, மறக்கவில்லை.

லான்ஸ்டி தன் மகளைநோக்கி "கமலா, அன்றிரவு ஒரு கபடசந்நியாசி இங்கே தங்கியிருந்தானே, அவனைப்பற்றி உனக்கு ஏதாவது தெரியுமா?" என்றனன்.

கமலா :—யார் அது? தீனதயாளுவா?

லான் :—(கோபத்துடன்) தீனதயாளுவா! நன்றாய்ச் சொன்னாய்! தீனதயாளுவையா நான் கபட சந்நியாசி யென்று கூறுவேன்? பெண்ணே, நீ என்ன நினைத்துக்கொண் டிருக்கிறாய்?

கமலா :—வேறு யாரைப்பற்றிக் கேட்கிறாய், அம்மா?

லான் :—அந்த விசித்திரமான மனிதன்! செல்வராஜன். செல்வராஜனைப்பற்றி உனக்கு ஏதாவது தெரியுமா?

கமலா :—அவரைப்பற்றி எனக்கு ஒன்றுந்தெரியாது.

லான் :—எனக்கும் ஒன்றுந்தெரியவில்லை. அவன்பகல் வேஷக்காரன்-கபட சந்நியாசி! நம்பத்தகுந்தவனல்லன்; மிகவும் ஏழை. அவன் சிலைவேலை செய்பவனென்று தீனதயாளு சொல்லியிருக்கிறார். அவன் நடவடிக்கை மிகவும் ஆச்சரியகரமானது.

கமலா:—நான் அதைப்பற்றி ஆச்சரியப்படுகிறேன். அவர் மறுநாள் அதிகாலையில் புறப்பட்டுப்போய் விட்டாரே!

லான் :—அவன் அற்பபுத்தியைக் காண்பித்துவிட்டான், கமலா! தீனதயாளுவின் பங்களாவுக்கு வருவதாக அவரிடஞ் சொல்லியிருக்கிறேன். அதைப்பற்றி எனக்கு ஞாபகமூட்டு. அந்தப்பங்களா மிகவும் அழகாயிருக்கிறதென்றும், அதைத் தான் வாங்கவேண்டுமென்று உத்தேசித்திருப்பதாகவும் தீனதயாளு கூறினார்.

கமலா :—(அலக்ஷியமாய்) அப்படியா! நான் எப்பொழுது ஞாபகப்படுத்தவேண்டும்?

லான் :—நாளையதினம். நாம் நாளையதினம் போவோம்.

கமலா :—(முகத்தைச் சுளித்துக்கொண்டு) இவ்வளவு சீக்கிரத்திலா?

லான் :—ஆமாம். ஏன் கூடாது? அங்கே போவதற்கு நீ தடைசொல்லமாட்டாயென்று நினைக்கிறேன். உன் கருத்தென்ன?

கமலா :—எனக்கு ஒன்றிலும் இஷ்டமில்லை. போனாலும் போகலாம், போகாவிட்டாலும் எனக்கு வருத்தமில்லை. உன் னிஷ்டம்போலவே நாளையதினம் போவோம்.

மறுநாள் தலைவலியென்று பாசாங்குசெய்து தன்தாயோடு போகாமலிருந்து விடலாமென்று கமலாஸனி எண்ணி யிருந்தாள். நல்ல அந்தஸ்துள்ள தீனதயாளுவின் வீட்டுத்

குப்போகக் கமலாஸனி சம்மதியாவிட்டால், ஸரஸ்வதி அவளைக்கோபித்துக் கொள்வாளென்பது நிச்சயம்!

ஆகவே கமலாஸனி தன் தாயாருடன் மோட்டார்காரிலேறிக்கொண்டாள். சற்றுநேரத்திற்கெல்லாம் இருவரும் தீனதயாளுவின் இருப்பிடத்தை யடைந்தனர். தன் மகள் தன்னோடு வந்ததைப்பற்றி ஸரஸ்வதி சந்தோஷமுற்றாளெனினும் அவள் முகத்தில் விசனக்குறி இருந்ததைக் கண்டு வருத்தமுற்றாள்.

தீனதயாளு அவர்களை எதிர்கொண்டழைத்தான். அவர்கள் தன்னிருப்பிடத்திற்கு வந்ததைப்பற்றி அவன் மிக்க மகிழ்ச்சியடைந்தான். கம்பெனி க்ஷீணதசையை யடையுமென்றெண்ணி, தீனதயாளு சென்னையில் தனக்கிருந்த விலையுயர்ந்த பொருள்களையெல்லாம் பல்லாவரத்திற்குக்கொண்டு வந்துவிட்டான். அவைகளையெல்லாம் பார்த்து ஸரஸ்வதி ஆச்சரியமடைந்தாள். தீனதயாளு சொல்லியதெல்லாம் சரியாயிருக்குமென்று அவளுக்குத் தோன்றிற்று. ஸரஸ்வதி தன் மகளை நோக்கி "இந்தப் பாழடைந்த வீட்டில் இவ்வளவு விநோதப் பொருள்களிருக்கின்றனவே, அவர் பங்களாக்களில் எவ்வளவிராது!" என்று சொன்னாள். ஆனால் கமலாஸனி அதை லக்ஷியஞ்செய்யவில்லை.

ஸரஸ் :—(தீனதயாளுவைநோக்கி) வெகு நேர்த்தியாயிருக்கிறது. இம்மாதிரி பொருள்களை நானெங்குங் கண்டதில்லை.

தீன:—(சிரித்துக்கொண்டே) ஓ, ஒன்றுமில்லை. இதென்ன பொருள்! நுங்கம்பாக்கத்திற்கு வந்து பாருங்கள். ஒருமுறை உங்களை அங்கே அழைத்துப்போக வேண்டுமென்றிருக்கிறேன். மிகவுங் களைத்திருக்கிறீர்கள். கொஞ்சம் சிற்றுண்டி எடுத்துக் கொள்ளுங்கள்.

அவன் இருவரையும் ஓரறைக்குள் அழைத்துப்போனான். சமையற்காரன் இரண்டு வெள்ளித்தட்டுகளில் பலகாரமும் இரண்டு டம்ளர்களில் காப்பியுங்கொண்டுவந்து வைத்தான். கமலாஸனி கொஞ்சம் மாதிரி பார்த்தாளேயொழிய எதையுஞ்சரியாய்ச் சாப்பிடவில்லை. தீனதயாளு வேறோர் அறைக்குச்சென்று பலகாரம் சாப்பிட்டுத்திரும்பி வந்தான். அவன் தன் வாக்சாதுர்யத்தால் கமலாஸனியைக்களிக்கச் செய்யவேண்டுமென்று எவ்வளவோ முயன்றும், பயனில்லாமற்போயிற்று. அவன் ஸரஸ்வதியோடு வெகுநேரம் பேசிக் கொண்டிருந்தான். அவன் பேசியதில் ஒருவிஷயம் கமலாஸனியைக் கவனிக்கச்செய்தது.

அவன், ஓரிரவு தன்னோடு தங்கியிருந்த செல்வராஜனைப் பற்றி ஸரஸ்வதி ஏதேனுங்கேள்விப் பட்டாளாவென்று அவளைக்கேட்டான்.

ஸரஸ்.—நேற்றையதினம் அவனைப்பற்றிச் கமலாவிடம் பேசிக்கொண்டிருந்தேன். நாங்கள் அவனைப்பற்றி ஒன்றுங் கேள்விபுறவில்லை. அவன் நடவடிக்கை மிகவும் விநோதமானது. அப்படிப்பட்டவர்களை நம்பக்கூடாது—என்றாள்.

இதைக்கேட்டதும் தீனதயாளுவின் மனத்திலிருந்த ஒரு கவலை நீங்கிற்று. சற்றுநேரத்திற்கெல்லாம் ஸரஸ்வதி தீனதயாளுவினிடம் விடைபெற்றுக்கொண்டு தன் மகளுடன் வீட்டிற்குப் புறப்பட்டாள்.

அவர்கள் சென்றதும் தீனதயாளு தனியாய் ஓரறையிலிருந்தான். அவன் தனக்குள் "இந்தப்பெண்ணின் அழகிற்காகவும் அவள் செல்வத்திற்காகவுமே ஸரஸ்வதியோடு நட்புக்கொள்ளுகிறேன். இல்லாவிடில் அவளை யார் லக்ஷியஞ்செய்வார்கள்? அப்பப்பா! அவள்போன்ற மாமியார் எங்குமிருக்கமாட்டாள். நண்டைப்போல் தந்திரமுள்ளவள்; மயிலைப்போல் கர்வமுள்ளவள். எப்படியிருந்தாலு மிருக்கட்டும், என்காரியத்தை முடித்துக்கொள்ளுகிறேன்" என்றான்.

வீட்டிற்குத் திரும்பிப்போனபோது ஸரஸ்வதி தீனதயாளுவின் சற்குணங்களையும் அந்தஸ்தையும் பற்றிப்புகழ்ந்து பேசி, தன் மகள் அவனைக் கணவனாகப்பெற எவ்வளவோ புண்ணியஞ்செய்திருக்க வேண்டுமென்றெண்ணினாள். கமலாஸனி எதற்கும் பதில் கூறாமல் செல்வராஜனைப்பற்றி ஏதோ சிந்தித்துக் கொண்டிருந்தாள்.

மறுநாள் பொழுதுவிடிந்ததும் கமலாஸனி வெளியே சென்றாள். அவள் சற்றுநேரம் தோட்டத்தில் உலாவிக்கொண்டிருந்து, பிறகு பழையவீட்டை நோக்கிச்சென்றாள். அவள் எப்பொழுதும்போல் வேலியைத் தாண்டிக்கொண்டுபோய்த் தோட்டத்தில் விழுந்திருந்த ஒருபழையமரத்தின்மேல் உட்கார்ந்தாள். அவளைக் கண்டதும் செல்வராஜன் அவளிடம்வந்தான்.

கமலா:—இத்தனைநாளாக எங்கே யிருந்தீர்கள்?

செல்வ:—இங்கே தானிருந்தேன். நீ எங்கே இருந்தாய்?

கமலா:—நானும் இங்கே தானிருந்தேன். உங்களைப்பற்றி ஏதாவது கேள்விப்படுவேனென்றெண்ணியிருந்தேன். நாம்மறுபடியும் சந்திப்பதாகச் சொல்லவில்லை?

செல்வ:—(புன்னகையுடன்) நாம் எங்ஙனஞ் சந்திப்பதென்று பலமுறை யோசித்துப்பார்த்தேன். உனக்குக் கடிதமெழுதவுஞ் சரிப்படவில்லை; உன் வீட்டிற்கு நான் வருவதுங் கூடாதகாரியம். நான் பலமுறை வெளியே சென்றபோது உன்னை எங்குங்காணவில்லை. நான் இங்கே கொண்டு வந்திருக்குஞ்சிலைகளைப் பார்க்கவரவேண்டுமென்று உன் தாயாரை அழைக்கலாமென்று கடைசியாகத் தீர்மானித்தேன். அவர்கள் அதற்குச் சம்மதிக்கமாட்டார்களென்பது நிச்சயம். ஆனாலும் உன்னைப்பார்க்கலாமன்றோ?

கமலா :—நான் எங்கள் தோட்டத்திற்கப்பால் எங்கும் வருவதில்லை. எங்கேயாவது சென்றால் என் தாயார் கோபித்துக்கொள்வார்கள்.

செல்வ :—நான் அங்கே வருவது பிசகென்றெண்ணி வராமலிருந்தேன். கமலா, உள்ளே வந்து சிலைகளைப்பார்க்கிறாயா ?

கமலா :—அம்மா கோபித்துக் கொண்டால்—

செல்வ :—சற்று நேரத்திற்கெல்லாம் திரும்பிப்போய் விடலாம்.

கமலா :—சரி, அப்படியே வருகிறேன்.

இருவரும் வீட்டின் ஓரறையினுள் நுழைந்தார்கள். அவ்வறை மிகவும் பெரிதாயிருந்தது. வெளிச்சமுங்காற்றும் வருவதற்காக அவ்வறையில் இரண்டு ஜன்னல்கள் வைக்கப்பட்டிருந்தன. அவ்வறையில் அநேக சிலைகளுஞ் சிலைசெய்வதற்கு வேண்டிய சாமான்களும் நிரம்பியிருந்தன. பார்வைக்குப் பயங்கரமாயிருந்த ஒரு பெண் சிலை அறையின் நடுவில் நிறுத்தப்பட்டிருந்தது. களிமண்ணினாலுஞ் சலவைக்கல்லினாலுஞ் செய்யப்பட்ட தலை, கை, கால் முதலிய அவயவங்கள் ஓர் மூலையிலிருந்தன. வேலை தீர்ந்ததும் தீராததுமாயிருந்த சில சிலைகள் ஒரு புறத்திலிருந்தன.

கமலாஸனி பயங்கரமாய் விளங்கிய பெண் சிலையைக் கண்டவுடன் அதனருகில்சென்று அதைக் கவனித்துப்பார்த்துக்கொண்டிருந்தாள். அந்தச் சிலை வெகுநேர்த்தியாய்ச் செய்யப்பட்டிருக்கிறதென்று அவள் சந்தோஷமடைந்ததாகப் புலப்பட்டது. செல்வராஜன் அவள் முகத்தைப் பார்த்துக் கொண்டே அவளருகில் நின்றிருந்தான்.

கமலா :—இது வெகு நேர்த்தியாயிருக்கிறது. ஆனால் இதைப்பார்க்க எனக்கு இஷ்டமில்லை.

செல்வ :—உனக்கு அதன்மேல் இஷ்டமில்லையா ?

கமலா :—இஷ்டமுண்டு—இல்லை—அது என்னைப் பயமுறுத்துகிறது. அதைக் காணும்போதே எனக்குப் பயமுண்டாகிறது.

செல்வ :—சரிதான், அநேகர் அப்படித் தான் நினைக்கிறார்கள். அது சந்தோஷமும் நம்பிக்கையும் இல்லாமல் இருக்கிறாற்போற் காணப்படுகிறது.

கமலாஸனி அவ்வறை முழுவதையும் சுற்றிப்பார்த்தாள். ஆனால் அவள் மனம் அங்கிருக்கவில்லை—சுந்தரத்தின் பங்களாவிலிருந்த ஸமுத்திர கன்னிகையிடம் சென்றிருந்தது. அதைச்செய்தவன் செல்வராஜனன்றோ? இவன் தான் அந்தச் செல்வராஜனோ ? அவ்விஷயத்தைப்பற்றிச் செல்வராஜனைக் கேட்க இதுதான் தருணமென்று அவள் எண்ணியிருந்தாள்.

செல்வராஜன் ஒரு மேஜையின்மேல் சாய்ந்தவண்ணம்

நின்றுகொண்டிருந்தான். தன் வீட்டில் கமலாஸனி வந்திருந்ததே அவனுக்கு ஆனந்தத்தை யுண்டுபண்ணியது. அவன் தான் செய்த ஸமுத்திர கன்னிகையே உயிர்பெற்றெழுந்து வந்து தன் வீட்டில் உலாவுகின்றனளோ என்று நினைத்தான்! சற்றுநேரமானதும் கமலாஸனி அவனிடம் வந்தாள்.

கமலா:—நீங்கள் சந்தோஷமாய்க் காணப்படுஞ் சிலைகளைச் செய்வதில்லையோ?

செல்வ:—ஒரு தடவை செய்திருக்கிறேன்.

கமலா:—அது எங்கே இருக்கிறது?

செல்வ:—விற்றுவிட்டேன்.

கமலா:—அதைப்பார்த்தால் நலமாயிருக்கும்.

செல்வ:—அதை உனக்குக் காண்பித்திருக்கமாட்டேன்.

கமலா:—ஏன்?

செல்வ:—ஏனெனில்—ஏனெனில்—ஏன்—(என்று மயங்கினான்.)

கமலா:—சரி. அதைப்பற்றி நான் கேட்டிருக்கக்கூடாது. அதை யார் வாங்கினார்கள்?

செல்வ:—சென்னையிலுள்ள ஒருவர் வாங்கினார்.

கமலா:—நான் அவரிடஞ்சென்று அதைவாங்கிக்கொள்ளுகிறேன்.

செல்வ:—முடியாது. அவரிடமிருந்து அதை இன்னொருவர் வாங்கிக்கொண்டார்.

கமலா:—(புன்னகையுடன்) ஓ! எனக்குத் தெரியும். அதை வாங்கியவர் சுந்தரம்.

அதைக்கேட்டதும் செல்வராஜனுக்குப் பெருஞ்சந்தோஷமுண்டாயிற்று. கமலாஸனி ஸமுத்திர கன்னிகையைப் பார்த்திருக்கலாமென்று அவன் எண்ணினான்.

செல்வ:—நீ அதைப் பார்த்திருக்கிறாயா?

கமலா:—ஆம், பார்த்திருக்கிறேன்.

செல்வ:—(வெட்கியவனாய்) என்னை நீ மன்னிக்கவேண்டும். அதைத்தவிர வேறொன்றுஞ் செய்யமுடியவில்லை. குறித்த தினத்திற்குள் வேலையை முடிக்கவேண்டியதா யிருந்தது. நான் உன்னைப்பார்த்த பிறகு—ஞாபகமிருக்கிறதா?—திருவல்லிக்கேணியில்—ஜன்னல் வழியாய்ப்பார்த்தபிறகு—எனக்கொன்றுந்தோன்றவில்லை. என் எண்ணமெல்லாஞ் சிதறிப்போயின; ஊக்கத்துடன் வேலைசெய்ய முடியவில்லை. நான் சொல்வதை அறிந்துகொண்டாயா?

கமலாஸனி ஒன்றும் மறுமொழி கூறவில்லை. செல்வராஜன் அவள் கைகளைப்பிடித்துக் கொண்டான்.

செல்வ:—நான் சொல்வதை அறிந்துகொண்டாயா? கமலா—நான் உன்னை அப்படிக் கூப்பிடலாமென்றோ? நீ என்னைச்சுட்டிக்காட்டிய வண்ணம் அறையில் நின்றிருந்ததை

நான் மறக்கவில்லை. நீ ஏன் என்னைச்சுட்டிக் காட்டினாய்?

கமலா :—நான் இப்பொழுது சொல்லமுடியாது. பிறகு சொல்லுகிறேன்.

செல்வ : — நான் ஷாப்புக்குப்போய் வேலைசெய்யத் தொடங்கினேன். ஆனால்வேலையின்மேல்கவனஞ்சொல்லவில்லை. நீ பார்த்த ஸமுத்திர கன்னிகை அநேகமாய் வேலைசெய்து முடிந்திருந்தது. முகம்மாத்திரம் முடியவில்லை. உன் ஞாபகமே என்மனதில் குடிகொண்டிருந்தது; நான் எங்கேபார்த்தாலும் உன்முகமே என் கண்ணெதிரிலிருந்தது. பலமுறைவேலை செய்யத்தொடங்கியும் முடியாமல் விட்டுவிட்டேன். பிறகு ஓரிடத்திலுட்கார்ந்து உன்னைப்பற்றி நினைத்துக்கொண்டிருந்தேன். நீ என் முன்வந்து புன்னகை செய்வதுபோல் கனவு கண்டேன். நீயும் என்னைப்பற்றி நினைத்துக்கொண்டிருப்பாயென்றெண்ணியிருந்தேன். நீ என்னைப்பற்றி ஏதாவது நினைத்ததுண்டா?

கமலா :—ஆம், உங்களை மறுபடியும் எப்பொழுது காண்பேனென்றெண்ணியிருந்தேன்.

செல்வ :—நாமிருவரும் ஒருவரை யொருவர் மறக்கவில்லை. ஸமுத்திர கன்னிகையின் முகம் உன்னுடைய முகத்தைப் போலிருந்தால் நன்றாயிருக்குமென்று எனக்குத்தோன்றிற்று. உடனே வெறியனைப்போல் வேலைசெய்ய ஆரம்பித்தேன். வேலைசெய்து முடிந்ததும் அதன் முகம் உன்னுடையதுபோலவே இருக்கக்கண்டேன். கமலா, நான் இதுவரையில் செய்தவேலைகளில் அதுவே சிரேஷ்டமானது. எனக்கு ஒரு புதிய சக்தி உண்டானதால் அந்த வேலையை வெகு எளிதில் செய்துமுடித்தேன். நான் அதைப் பணத்திற்காகச் செய்யவில்லை—அதைவிட மேலான பொருளை நாடியேசெய்தேன். அதுவே என் மனதிற்கு அடுத்தது. இப்பொழுது அந்த ஸமுத்திர கன்னிகையே உயிர்பெற்றெழுந்து வந்திருக்கிறதோவென்று பிரமிக்கலானேன்.

கமலாஸனி ஆனந்தக்கண்ணீர் பெருக்கினாள். ஆனால் அவள் ஒன்றும் பேசவில்லை. முதல் முதல் காதல்கொண்ட அவ்விருவரும் தங்கள் மனதிலுள்ளதை வாய்மொழியாகத் தெரிவித்துக் கொள்ளவில்லை.

அவ்விருவரும் ஒருவரை யொருவர் தங்களை மறந்தவர்களாய் ஆலிங்கனஞ்செய்து கொண்டனர். இங்கே நடந்த விஷயங்களைப்பற்றிக் கேள்வியுற்றால் தன் தாயாரும் தீனதயாளுவும் என்ன சொல்வார்களோவென்று கமலாஸனி சிந்தித்துக்கொண்டிருந்தாள். தன்மேல் ஏதாவது ஸந்தேகங்கொண்டால் தன் தாயார் தன்னை வெளியே போகவிடமாட்டாளென்று அவள் கிலேசமுற்றாள்.

செல்வராஜன் இதை முன்னமே உணர்ந்து தங்கள்காதல்

கொஞ்சநாள் வரையில் இரகசியமானதாயிருக்கவேண்டு மென்று தீர்மானித்துக் கொண்டான். கமலாஸனியும் அதற்குச் சம்மதித்தாள்.

கமலாஸனி வீட்டைவிட்டு வந்து வெகு நேரமானதால் சீக்கிரந் திரும்பிப்போக வேண்டுமென்று தெரிவித்தாள். செல்வராஜன் அவள் கையைப்பிடித்துக் கொண்டே சிறிது தூரம் வந்தான்.

வாசற்படியண்டைவந்ததும், கமலாஸனி "நான் உங்களை மறுபடி எங்ஙனம் சந்திப்பது?" என்று கேட்டாள்.

செல்வ:—நான் இங்கே தானிருப்பேன், நீ எப்பொழுது வேண்டுமானாலும் வரலாம்.

அப்பொழுது தீனதயாளு குதிரையின் மேலேறிக் கொண்டு ரஸ்தாவில் போவதைக் கமலாஸனி கண்டாள். அவள் மனந்திடுக்கிட்டது. அவளும் செல்வராஜனும் ஒன்றாய் நின்றிருந்ததைத் தீனதயாளு கண்டிருப்பானென்று அவள் பயந்தாள். அவள் உடனே செல்வராஜனிடம் விடைபெற்றுக் கொண்டு தன் வீட்டிற்குப் போனாள்.

நல்ல வேலையாய்த் தீனதயாளு அங்கே வரவில்லை. கமலாஸனி வீட்டிற்குச்சென்றதும் ஓரறையில் தனியாய் உட்கார்ந்துகொண்டு தனக்கும் செல்வராஜனுக்கும் நடந்த ஸம்பாஷணையைப்பற்றி ஆலோசிக்கலானாள். கடைசியாக அவள் நற்குணம் வாய்ந்த செல்வராஜனே தன் மனதுக்கினிய காதலன் என்று நினைத்து மகிழ்ச்சியடைந்தாள்.

## 12. ஸந்தேகம் உண்மையாகவே முடிந்தது.

தீனதயாளு, செல்வராஜனும், கமலாஸனியும் ஒன்றாய் நின்றிருந்ததைக் கண்டதும் மனக்கலக்கமுற்றான். அவர்களுடைய முகக்குறி அவனுக்குச் சரியாய் விளங்கவில்லையென்றாலும், அவர்கள் உல்லாசமாய்ப் பேசிக்கொண்டிருந்தார்களென்பதை மாத்திரம் அவன் நிச்சயமாயறிந்து கொண்டான். அதைத் தீனதயாளுவைவிடக் குறைந்த அனுபவமுள்ளவனும் அறிந்து கொண்டிருப்பானல்லவா?

தீனதயாளு சிறிதுதூரஞ் சென்றதும் குதிரையை மெதுவாய் நடத்திச்சென்றான். அவன் மனதில் பற்பல எண்ணங்கள் தோன்றின. கமலாஸனியும் செல்வராஜனும் மறுபடியுஞ் சந்திப்பார்களென்றும், தன் வேலைக்காரனால் அவர்களுக்குண்டாகிய சிநேகம் நீடித்திருக்குமென்றும் அவன் முன்னமே எண்ணியிருந்தான். கமலாஸனி செல்வராஜனைப்பற்றித் தான் ஒன்றுங் கேள்விப்படவில்லையென்று இரண்டு நாளைக்குமுன்

சொன்னது இப்பொழுது அவன் ஞாபகத்திற்கு வந்தது. அவள் சொல்லியது உண்மையா?

மனுஷ்ய சுபாவம் மிகவும் ஆச்சரியகரமானதென்று தீனதயாளுவுக்குத் தெரியும். நல்ல ஆடையாபரணங்களணிந்து இனிய வசனங்கள் பேசி இதரர்களை மயக்கும் மாதர்களின் உள்ளக்கருத்தையும் அவன் அறிந்து கொள்வான். அப்படியிருக்கக் கமலாஸனி கூறியது உண்மையாயிருக்குமென்று அவன் நினைத்திருந்தானே! "ஒருவேளை உண்மையாயிருக்கலாம். இதுவே அவர்களுடைய இரண்டாவது சந்திப்பாயிருக்கலாம்" என்று அவன் பலவாறு யோசித்துக்கொண்டிருந்தான்.

நடந்தது நடந்துவிட்டது. இனிஅதைப்பற்றி நினைத்து என்னபலன்? தானெடுத்துக்கொண்ட காரியத்துக்கு விக்கினம் வருமோவென்றெண்ணித் தீனதயாளு கிலேசமுற்றான். கமலாஸனி அது வரையில் ஒருவரையுங்காதலியாமலிருந்தால் தான் அவளை எப்படியாவது விவாகஞ்செய்து கொள்ளலாமென்றெண்ணினான். அப்படியன்றி அவள் யாரையாவது காதலித்திருந்தால் தீனதயாளுவின் கதி என்னவாகும்? தன் செல்வத்தையும் இனியபேச்சையும் இச்சித்துக் கமலாஸனி மயங்கமாட்டாளென்பது அவனுக்குத்தெரியும். அவள் தனக்கு இஷ்டமில்லாவிடில் அவனை வெறுக்கத் தலைப்படுவாள்; அவனைத் தன் சத்துருவென்று கருதுவாள். ஏனெனில் அவனுக்கும் அவள் காதலுக்கும் நடுவில் தான் ஓர் இடையூறாக நிற்க வேண்டுமன்றோ?

தீனதயாளு தன் புருவங்களை நெரித்துக்கொண்டே யோசனைசெய்யலானான். தன் வழியிலிருந்த தடையை எப்படியாவது அப்புறப்படுத்த வேண்டுமென்பது அவன் கருத்து. அவன் எப்பொழுதும் முன்வைத்த காலைப்பின் வைப்பதில்லை. மேலும் இப்பொழுது அவன் எடுத்துக்கொண்ட காரியம் மிகவும் முக்கியமானதாக இருந்தது. கம்பெனி நாசமடையுந் தருணத்திலிருந்ததாலும் அவனுக்கு நாற்பதினாயிரம் ரூபாய் வேண்டியிருந்ததாலும் அவன் கமலாஸனியை மணம்புரிந்து கொள்ளவேண்டியது அவசியமாக இருந்தது. அவன் வெகு தூரஞ்சென்று விட்டதனால் மறுபடியுந் திரும்ப முடியவில்லை. அவன் தன் வழியிலிருந்த தடையை எப்படியாவது விலக்கிவிடவேண்டுமென்று எண்ணினான். ஆகையால் அவன் உடனே கமலாஸனியிடஞ் செல்லவேண்டுமென்று தீர்மானித்தான்.

அவன் வீட்டிற்கு வந்ததும் தன் வேலைக்காரனைநோக்கி "நான் தங்கமணியைப் பார்க்கவேண்டும். என்னறையிலிருக்கிறேன், சீக்கிரம் அவனை அங்கே வரச்சொல்" என்றான்.

சற்றுநேரத்திற்கெல்லாம் தங்கமணி அங்கே வந்தான். அவன் இன்னும் நொண்டிக்கொண்டிருந்தானெனினும் காலி

விருந்தகாயம் ஆகிவிட்டது. தீனதயாளு வரலாமென்று தெரிவித்தவுடன் அவன் உள்ளே சென்றான்.

அவ்விருவரும் ஒருமணிநேரம் பேசிக்கொண்டிருந்தனர். அவர்கள் இரகசியமாய்ப் பேசிக்கொண்டிருந்தபடியால், பேசியது சரியாய் விளங்கவில்லை. முதலில் அவ்விருவரும் சமாதானமாய்ப் பேசிக்கொண்டிருந்தனர். பிறகு தீனதயாளு கோபமாய்ப்பேச ஆரம்பித்தான். தான் சொல்லியதற்குத் தங்கமணி மறுத்துப்பேசியதால் தீனதயாளு அவனைப்பய முறுத்தினான். பிறகு இருவரும் முன்போல் சமாதானமாய்ப் பேச ஆரம்பித்தனர்.

ஒருமணிநேரஞ்சென்றதும், தங்கமணி கதவைத்திறந்து கொண்டு வெளியே வந்தான். தீனதயாளுவும் அவனுடன் வந்தான். அவர்களெதிரில் வந்த வேலைக்காரன் தீனதயாளுவின் முகக்குறியைக் கண்டு எங்கேயோ போய்விட்டான்.

தீன :—தங்கமணி, இன்று சாயந்திரம் போகிறாயா?

தங்க :—போகிறேன்.

தீன :—சரி, நான் சொல்லியது ஞாபகமிருக்கட்டும். அதற்கடையாளமாக—

தங்கமணி எங்கேயோ சென்றான். உடனே வேலைக்காரன் தீனதயாளுவிடம் வந்தான். தீனதயாளு வெளியேபோக வேண்டுமென்று அவனிடஞ்சொல்லி மோட்டார்காரைக் கொண்டு வரும்படி கட்டளையிட்டான்.

கமலாஸனி சரியான சமயத்தில் வீட்டிற்கு வந்தாள். ஸரஸ்வதி பலகாரம் சாப்பிடுவதற்காகத் தன்மகளை யழைத்தாள். கமலாஸனி அறையினின்றும் வெளியே வந்து ஸரஸ்வதியோடு உட்கார்ந்தாள். அவள் தன் தாயோடு அதிகநேரம் உட்கார்ந்திருந்தால் அவள் தீனதயாளுவைப்பற்றிப் புகழ்ந்து பேசிக்கொண்டிருப்பாளென்றெண்ணிச் சீக்கிரமே அவ்விடம் விட்டுப் போகவேண்டுமென்றிருந்தாள். அவள் தனிமையை நாடியிருந்தாள்; தனிமையே அவள்மனதிற்கு இதஞ்செய்தது.

காதற்குறியை யறியும் ஆற்றலுடைய எந்த ஸ்திரீயும் கமலாஸனியின் முகத்தில் அன்று தோன்றியிருந்த களையைக் கவனித்திருப்பாள். ஸரஸ்வதி அதை யறிந்துகொள்ளவில்லை. அவள் தன்மகளை எப்படியாவது தீனதயாளுவுக்கு விவாகஞ் செய்து கொடுக்கவேண்டுமென்றெண்ணியிருந்தாளே யொழிய, வேறொன்றையும்பற்றி எண்ணவில்லை. வெளியே அலைந்து திரிந்ததால் கமலாஸனியின் முகம் சிவந்திருந்த தென்று அவள் எண்ணியிருந்தாள்.

பலகாரம் சாப்பிட்டானதும் கமலாஸனி அவ்விடம் விட்டெழுந்தாள். ஸரஸ்வதி அவளைக் கோபித்துக்கொண்டு "கமலா, என்ன இவ்வளவுவிசித்திரமான பெண்ணாக இருக்கிறாயே! எப்பொழுது பார்த்தாலும் பைத்தியக்காரியைப்போல் உள்ளே

புருந்து கொண்டிருக்கிறாய்; இல்லாவிட்டால் வெளியே போய்த்திரிந்தலைகிறாய். என்னோடு உட்கார்ந்திருக்க வரவர உனக்கு ஸம்மதமில்லாமல் இருக்கிறதே. இங்கே தான் சற்று நேரம் உட்காரு" என்றாள்.

கமலாஸனி மிகவும் விசனத்துடன் அங்கே உட்கார்ந்திருந்தாள். சற்றுநேரத்திற்கெல்லாம் தீனதயாளு அங்கேவந்தான். அவன் வெகுநேர்த்தியாக உடை தரித்துக்கொண்டிருந்தான்.

அவனைக்கண்டதும் வழக்கம்போல் கமலாஸனியின் முகத்தில் வெறுப்புக்குறி தோன்றிற்றென்பது நாம் சொல்லாமலே விளங்கும். ஸரஸ்வதி அவனைப் பலவாறு ஸ்துதி செய்துகொண்டிருந்தனள். கமலாஸனி உடனே அவ்விடம் விட்டெழுந்து ஓர் அறைக்குள் போய்விட்டாள்.

தீனதயாளு வழக்கம்போலவே யாதொரு கவலையும் இல்லாதவன்போல் நடித்துப் பேசிக்கொண்டிருந்தான். ஆனால் கம்பெனியில் உண்டாகிய நஷ்டம் அவன் மனதைவிட்டு அரை க்ஷணமும் அகலாமல் அல்லல் விளைத்துக்கொண்டிருந்தது. அவன் கமலாஸனியின் அழகையும் குணத்தையும்பற்றி வெகு நேரம் விநயமாய்ப் பேசிக்கொண்டிருந்தான். அவன் சென்னையில் இருக்கும் கனவான்களுக்குள் மிகவும் சிரேஷ்டமானவனென்று ஸரஸ்வதி இப்பொழுது எண்ணலாயினள். சுந்தரமும் அவனுக்குக் கீழ்ப்பட்டவனென்று அவள் கருதியபடியால், எப்படியாவது தன்மகளை அவனுக்குக் கொடுத்துவிட வேண்டுமென்று தீர்மானித்து விட்டாள்! ஸரஸ்வதி தன்னிடம் மிகவும் விசுவாசமாக இருப்பதையும் முன்னிலும் பத்து மடங்கு அதிகமாகக் கௌரவம் பாராட்டுவதையும் கண்டு அவன் இப்பொழுது அகங்காரங்கொண்டு கமலாஸனியை விவாகம் செய்துகொள்வதில் அக்கரையில்லாதவன்போல நடித்தான். அது அவன்செய்த தந்திரங்களில் ஒன்றேயன்றி வாஸ்தவமாக அவன் அக்கரையில்லாமல் இருக்கவில்லை. கமலாஸனி தன்னை விவாகஞ்செய்துகொள்வதாகச் சொல்லிவிட்டால் அவன் அவளுக்கு அடிமையாகவேனும் ஆகிவிடுவான்! தற்சமயம் நாற்பதினாயிரம் ரூபாய் கிடைப்பதாக இருந்ததன்றோ?

ஸரஸ்வதி தன் மகளுடைய சம்மதத்தைக்கேட்டு வருவதாக அவனிடம் சொல்லிவிட்டுக் கமலாஸனி இருந்த அறைக்குள்சென்றாள். இந்தச் சமயம் தவறினால் பிறகு அவனுக்கு அலக்ஷியம் உண்டாகி விடுமென்று பயந்து அவள் எப்படியாவது தன் மகளுடைய சம்மதத்தைப் பெறவேண்டுமென்று எண்ணினாள். ஸரஸ்வதி என்ன பதில் கொண்டுவரப்போகிறாளோவென்று சிந்தித்துக்கொண்டே தீனதயாளு தனியாக உட்கார்ந்திருந்தான். கமலாஸனி தன்னை வெறுக்கிறாளென்

பதும் அவள் செல்வராஜனிடம் காதல்கொண்டிருக்கிறளென் பதும் அவனுக்கு நன்ருகத்தெரியும். ஆயினும் தான் மிகவும் தந்திரசாலியானபடியால் ஸரஸ்வதியைக்கொண்டு எப்படியாவது கமலாவதியைச் சிப்பமிக்கவிடலாமென்று உறுதியாக உள்ளத்தில் எண்ணினன். அப்படியன்றி, கமலாவதி சம்மதியாவிட்டால் அவளுக்குத் தன்னுலான வரையில் கெடுதி செய்யவேண்டுமென்று தீர்மானித்துவிட்டான்.

ஸரஸ்வதி வெகு சந்தோஷத்தோடு கூடிய முகத்துடன் "கமலா" என்று கூப்பிட்டுக்கொண்டே உள்ளே நுழைந்தாள். செல்வராஜனைப்பற்றி நினைத்துச் சந்தோஷித்துக்கொண்டிருந்த கமலாவதி, தன் தாயார் தீனதயாளுவைத் தனியாக விட்டு அங்கே வந்த காரணத்தை ஒருவாறு அறிந்துகொண்டு "சிவபூஜைவேளையில் கரடியைவிட்டாற்போல் இப்பொழுது ஏன் நம்மைத் தொந்தரவு செய்யவேண்டும்?" என்று நினைத்து வருந்தினள்.

ஸரஸ்வதி ஒரு நாற்காலியில் உட்கார்ந்துகொண்டு தன் மகளைப்பார்த்து, "கண்ணே, நீ நன்றாகப்படித்தவளாகவும் மிக்க புத்திசாலியாகவும் இருக்கிறபடியால் நான் உனக்கு அதிகமாகப் புத்திமதி சொல்லவேண்டிய அவசியமில்லை. ஆயினும் பெண்ணுக்குப் புருஷனைத் தேடுவதும் பிள்ளைக்குப் பெண்ணைத்தேடுவதும் இத்தேசத்தில் தாய் தந்தையரின் கடமையாதலால் நானே உனக்குக் கணவன் தேடவேண்டியவளாக இருக்கிறேன். விகாரமாக இருக்கிறவனையாவது, படிக்காத முண்டத்தையாவது, பணமில்லாத பக்கிரியையாவது தேடி வந்து உன் தலையில் கட்டமாட்டேனென்பது உனக்குத்தெரியும். தீனதயாளுவின் அந்தஸ்தும் புகழும் கல்வித்திறமும் உனக்குத்தெரியாமலிருக்கமாட்டா. அவர் உன்னை முழுமனதோடும் காதலித்திருப்பதாக என்னிடம் தெரிவிக்கிறபடியால் அவரைவிட மேலான புருஷன் கிடைப்பது கஷ்டமென்று கருதி அவரையே உனக்கு நாயகனாக்கவிரும்புகிறேன். எப்பொழுதும் என் பேச்சைத்தள்ளாமலிருந்ததுபோல் இப்பொழுதும் நான் சொல்வதைத் தவிர்க்காமல் அவரை விவாகம் பண்ணிக்கொள்வாயென்று நம்புகிறேன். ஆயினும் உன்னுடைய சம்மதமில்லாமல் அவருக்கு வாக்குக்கொடுக்க எனக்குச்சம்மதமில்லையாதலால் அதைக்கேட்கவே இப்பொழுது இங்கே வந்தேன். நீ சரியாக யோசனைசெய்து பதில்சொல்லவேண்டும். அவசரப்பட்டு அவர் இஷ்டத்திற்கு விரோதமாகப் பதில் சொல்லிவிட்டால் பிறகு பெருந்தீங்கு சம்பவிக்கும். அவர் மிகவும் கௌரவமுள்ளவரானபடியால் நம்மை அவர் அணுகிக்கேட்பதே அபூர்வமாகும். அப்படிக்கேட்கும்போது நாம் சம்மதியாவிட்டால் பிறகு அவர் சாமான்னியர்களைப்போல் நம்மிடம் வந்து வேண்டிக்கொண்டிருக்கமாட்டார்.

அவனை விட்டுவிட்டால் அவ்வளவு அந்தஸ்துள்ள புருஷனைத் தேடுவது கஷ்டமாக முடியும். என்னசொல்லுகிறாய்?" என்று கேட்டாள்.

அதைக்கேட்டதும் கமலாஸனியின் முகம் கோபத்தால் சிவந்தது. மிகவும் அற்ப அறிவுடையவளான தனக்கே தீனதயாளுவின் வஞ்சகர்குணங்கள் வெளிப்படையாய்த் தெரிந்திருந்தபோது தன் தாயாருக்கு அவைகள் ஏன் தெரியாமற்போயினவென்று அவள் ஆச்சர்யமும் கோபமுங்கொண்டாள். அவள் ஸரஸ்வதியை நோக்கி "அம்மா, இப்பொழுது நான் சொல்லப்போகும் விஷயத்திற்காக என்னை மன்னிக்கவேண்டும். அதனாலேயே உனக்கு நான் அடங்கி நடப்பவள் அல்லவென்று நினைத்து விடக்கூடாது. தீனதயாளுவைப்பற்றி நீங்கள் சொல்வதெல்லாம் உண்மையாக இருக்கலாம். ஆயினும் எனக்கு அவனைப்பார்க்கவும் பிடிக்கவில்லை. அவனைப்பார்க்கும்போதே காரணமில்லாமல் என் உடல் நடுங்குகிறது. அப்படியிருக்கும்போது நான் அவனை விவாகம் செய்துகொள்வது ஆகாத காரியமென்று எனக்குத் தோன்றுகிறது. மிகவும் ஏழையாக இருந்தாலும் என் மனதிற்குப் பிடித்தவனையே புருஷனைப் பெறவேண்டுமென்று தீர்மானித்திருக்கிறேன்" என்றாள்.

ஸரஸ்வதி தன் மகள் சொல்லியதைக்கேட்டு மிகவும் மனங்கலங்கி "கமலா, உன்மேல் தப்பிதமில்லை. பெண்கள் இங்கிலிஷ் படிப்பதினால் விளையும் பயன் இது. இங்கிலிஷ்காரப் பெண்கள் தாங்களாக நாயகர்களைத்தேடிக்கொள்வதுபோலவே தாங்களும் தேடிக்கொள்ள வேண்டுமென்று இவர்களும் எண்ணிவிடுகிறார்களேயொழிய அதனால் விளையும் தீங்குகளைக் கவனிக்கிறதில்லை. இன்னொருமுறை சொல்லுகிறாயா? அவசரப்பட்டுச் சொல்லாதே. இன்னும் சில காலம் யோசனை பண்ணிச் சொல்லுகிறாயா?" என்று கோபத்துடன்கேட்டாள். கமலாஸனி "அம்மா, யோசிக்கவேண்டிய அவசியமே இல்லை. அவனை விவாகஞ் செய்துகொள்ளவேமாட்டேன்" என்று சொல்லிவிட்டாள்.

ஸரஸ்வதி தீனதயாளுவிடம் என்ன சொல்வதென்று அறியாமல் மனங்கலங்கினாள். கமலாஸனி சம்மதிக்கவில்லையென்று சொன்னால் அவன் அலக்ஷியம் செய்துவிட்டுப்போய் விடுவானென்று பயந்தாள். அவள் அவனிடஞ்சென்று "ஐயா, அவள் உங்களையன்றி வேறுயாரை விவாகஞ்செய்துகொள்ளப் போகிறாள்? அறியாதவளாகையால் யோசித்துப் பதில்சொல்லுவதாகத் தெரிவிக்கிறாள். எப்படியும் நான் அவளை உங்களுக்கே மணஞ்செய்விக்கிறேன்" என்றாள். தீனதயாளு சந்தோஷத்துடன் விடைபெற்றுக்கொண்டு சென்றான்.

கமலாஸனி தன்னை மணம்புரிந்துகொள்ளச் சம்மதிப்பா

பாளோ சம்மதிக்கமாட்டாளோவென்று தீனதயாளு முன்னமே சந்தேகித்துக்கொண்டிருந்தான். அவன்கொண்ட ஸந்தேகம் உண்மையாகவே முடிந்தது. அவன் மிகுந்த சாமர்த்தியமுள்ளவனானபடியால், ஸரஸ்வதி உண்மையை மறைத்துச் சொல்லியிருந்தும், கமலாஸனி தன்னை விவாகஞ்செய்துகொள்ளச்சம்மதிக்கவில்லையென்பதை அறிந்துகொண்டான்.

## 13. மித்ரபேதஞ்செய்தால் கமலாஸனியைப் பெறலாம்.

மறுநாள் காலையில் தீனதயாளு சென்னைக்குப் புறப்பட்டான். அவன் மோட்டார்காரில் உட்கார்ந்துகொண்டு அதற்கு முன்னாள் நடந்த சம்பவங்களைப்பற்றி யோசிக்கலானான். சாதாரணமாய்க் காதல்கொள்ளும் ஒருவன் கமலாஸனி மறுத்ததைக்கேட்டு நிராசையாய்ப் போய்விட்டிருப்பான். தீனதயாளு அப்படிப்பட்டவனல்லவே! அவன் வெவ்வேறு எண்ணங்கொண் டிருந்தான். அவள் உடன்படமாட்டாளென்று தெரிந்திருந்தும் அவன் தன் உள்ளக்கருத்தை அவளிடந்தெரிவிக்கச் சொன்னான்.

தன்காரியம் முடியாததற்குச் செல்வராஜனே முதற்காரணமென்று தீனதயாளு எண்ணியிருந்தான்; செல்வராஜனில்லாமலிருந்தால் கமலாஸனி கூறியமறுமொழி வேறுவிதமாயிருந்திருக்குமென்று அவன் நினைத்தான். கமலாஸனி வேறொருவரையுங் காதலியாமலிருந்தால் ஸரஸ்வதியின் உதவியைக்கொண்டு தான் அவளை மனைவியாகப் பெறுதல்கூடுமென்று நம்பியிருந்தான்; செல்வராஜனால் தன் காரியம் தடைப்பட்டதென்றறிந்து அவனை எப்படியாவது ஒழித்துவிடவேண்டுமென்று தீனதயாளு தீர்மானித்தான்.

சற்றுநேரத்திற்கெல்லாம் தீனதயாளு கம்பெனிவாசலில் வந்து இறங்கினான். அவன் தன் அந்தரங்க அறைக்குப்போனவுடன் சுந்தரம் வீட்டிலிருக்கிறானாவென்று டெலிபோன்மூலமாய்க்கேட்டான். அவன் க்ளப்புக்குப் போயிருப்பதாகத் தெரிந்ததும் தீனதயாளு அவனை அங்கேகூப்பிட்டு அன்றைய தினம் தான் அவனைக் கம்பெனியில் பார்க்கவேண்டுமென்று தெரிவித்தான். சுந்தரம் அங்ஙனமே வருவதாகப் பதில் சொன்னான்.

பிறகு தீனதயாளு மேகநாதனை அவ்விடம் வரவழைத்தான். இருவரும் வியாபார விஷயங்களைப்பற்றி ஒருமணி நேரம் பேசிக்கொண்டிருந்தனர். தீனதயாளு அநேக கணக்குப் புஸ்தகங்களை யெடுத்துப் பார்த்தான். அவைகளிலிருந்த விஷயங்களை நன்றாய்ப்பார்த்துக்கொண்டு, பிறகு தன்சட்டைப்

பையிலிருந்த சிறிய குறிப்புப் புத்தகத்தை யெடுத்துப் பார்த்தான். கம்பெனியின் ரகசியங்களையெல்லாம் அதில் அவன் எழுதிவைத்திருந்தான். அவைகளை மேகநாதன் அறிந்து கொண்டானில்லை.

தீன :—மேகநாதா, செம்பு எப்படி இருக்கிறது?

மேக :—நாம் இப்பொழுதுதான் வாங்கவேண்டும். விலை சரசமாயிருக்கிறது.

தீன :—அப்படியா! சரிதான்.

மேக :—விலைமிகவுஞ் சரசமாயிருக்கிறது. இப்பொழுது வாங்கினால்தான் நல்லவிற்பனை நடக்கும். டிராம்வே கம்பெனியார் அதிகமாக வாங்கப்போகிறார்களாம். அவர்கள் வாங்கும் போது விலை அதிகமாய்விடும்.

தீன :—எப்பொழுது வாங்கப்போகிறார்கள்?

மேக :—இரண்டுமாதஞ்சென்று வாங்குவார்கள். நாம் இப்பொழுதே வாங்கினால்தான் லாபங்கிடைக்கும்.

தீனதயாளு தலையை அசைத்துவிட்டு நாற்காலியில் சாய்ந்துகொண்டான். எப்படியாவது செம்புவாங்கவேண்டுமென்று அவன் முன்னமே தீர்மானித்திருந்தான். அந்த விஷயத்தில் மேகநாதன் என்ன அபிப்பிராயப்பட்டிருக்கிறானென்பதைத் தெரிந்துகொள்ளும்பொருட்டு இப்பொழுது அவனை வரவழைத்தான். செம்புவாங்குவதால் ஏழு அல்லது எட்டாயிரம் ரூபாய் லாபங்கிடைக்குமென்று அவனுக்குத் தோன்றிற்று. அப்படிக் கிடைக்குமானால் கம்பெனி க்ஷீண தசையை யடையாதென்று அவன் எண்ணியிருந்தான்.

மேகநாதன் செம்புவாங்க உத்தரவுபெற்றுக்கொண்டு அவ்விடம் விட்டகன்றான். சற்றுநேரத்திற்கெல்லாம் சுந்தரம் அங்கே வந்தான்.

சுந் :—தீனதயாளு, நேரந்தவறாமல் வந்துவிட்டேன். இரண்டரை மணிக்கு வருவதாகத் தெரிவித்தேன், இல்லை? இப்பொழுது சரியாய் இரண்டரை மணிதான் ஆகிறது.

தீன :—அதைப்பற்றி அவசியமில்லை. வந்ததே போதுமானது.

தீனதயாளு சிரித்துக்கொண்டே மேஜைமேலிருந்த ஒரு விசையைத் தொட்டான். உடனே ஒரு சிற்றறையின் கதவு திறந்தது. அதில் கண்ணாடி டம்ளர், சோடாபுட்டிகள்முதலியவைகள் வைக்கப்பட்டிருந்தன. தீனதயாளு ஒரு சோடா புட்டியை உடைத்துச் சுந்தரத்தினிடங் கொடுத்துவிட்டுப் பிறகு இரண்டு மூன்று சிகரெட்டை அவனிடங்கொடுத்தான். சுந்தரம் அவைகளைச் சந்தோஷத்துடன்பெற்றுக்கொண்டான்.

தீன :—மித்ரா, நான் உன்னிடம் ஒரு முக்கியமான சங்கதிசொல்லவேண்டும்.

சுந் :—கமலாஸனியின் செல்வத்தைப் பற்றியா?

தீன :—இல்லை, இது வேறு விஷயம்—கமலாஸனியின் துரதிர்ஷ்டமென்று சொல்லலாம்.

சுந் :—என்ன, என்ன சங்கதி?

தீன :—அவள் பல்லாவரத்தில் ஒரு நாடோடியை நண்பனாகப்பெற்றிருக்கிறாள். நீ அவளுடைய கார்ட்டியனாகையால் உனக்கு அதைத் தெரிவிக்கவேண்டுமென்று எண்ணினேன்.

சுந் :—என்னை அவளுடைய கார்டியனாக ஏற்படுத்தியது கருணானந்தரின் புத்தியற்றகாரியமென்று முன்னமேசொன்னேனே! நான் என்ன செய்வது? யார் அது? என்ன சங்கதி? தெரிவி பார்ப்போம்.

தீன :—நீ சில நாளைக்குமுன் ஒரு சிலைவாங்கினுயே—கமலாஸனியைப்போலவே இருந்த சிலை—அதைச்செய்த சிற்பியின் பெயர் ஞாபகமிருக்கிறதா?

சுந் :—ஆம், அதைச்செய்தவன் செல்வராஜன்.

தீன :—சரிதான், அந்தச் செல்வராஜனே ஸரஸ்வதியின் பங்களாவுக்கு அருகிலிருக்கும் குடிசையின் சொந்தக்காரன். அது உனக்குத் தெரியுமா? கமலாஸனி அவனோடு பழகிவருகிறாள்.

சுந் :—அப்படியா? அவனைச்சரியானபடி சிக்ஷிக்கவேண்டும்.

தீன :—அவர்கள் மிகவும் அந்தரங்க நேசர்களாயிருப்பார்களென்று நினைக்கிறேன். அவ்விருவரும் எவ்வளவு காலமாய்ச் சிநேகர்களாக இருக்கிறார்களென்பது எனக்குத்தெரியாது. ஆனால் அவர்கள் ஒருவரையொருவர் முன்னமே தெரிந்துகொண்டிருக்கவேண்டுமென்று தோன்றுகிறது. இல்லாவிடில் அவன் அந்தச்சிலையை எப்படிச்செய்திருக்கக்கூடும்? அவர்களுக்கு இருக்குஞ்சிநேகம் சாதாரணமானதல்லவென்று எனக்குத் தோன்றுகிறது. அவ்விருவரும் ஒன்றாய்ப்பேசிக்கொண்டிருந்ததைப் பலமுறை கண்டிருக்கிறேன். கமலாஸனி ஒருமுறை அவன்மேல் சாய்ந்துகொண்டிருந்ததைக்கூடக் கவனித்திருக்கிறேன். அவன்மிகவும் ஏளியவன்; அயோக்கியன். இன்றைக்கு இருக்குமிடத்தில் நாளைக்கு இருக்கமாட்டான்.

சுந் :—அவன் இப்பொழுது அந்தப்பழைய வீட்டிலா வசிக்கிறான்?

தீன :—ஆமாம், அங்கே தான் இருக்கிறான். அந்த வீட்டில் ஓரறை இடியாமலிருக்கிறது. அதில் தான் வசிக்கிறான். கமலாஸனி பல்லாவரத்திற்குச் சென்றாளென்று அறிந்து அவனும் அங்கே சென்றானென்று நினைக்கிறேன்.

சுந் :—ஸரஸ்வதிக்கு இந்த விஷயந்தெரியாதோ?

தீன :—தெரியவே தெரியாது. கமலாஸனி மிகவும் தந்திரசாலியாயிற்றே!

சுந் :—நான் என்ன செய்வது? கருணானந்தர் செய்தது மூடத்தனமான காரியம். எப்படியிருந்தாலும் இந்த விஷயத்

தைக் கவனிக்கவேண்டும். நான் ஏதாவது செய்கிறேன். அவனுக்குக் கொஞ்சம் பணங்கொடுத்தால் போய்விடமாட்டானே?

தீன :—போகமாட்டான்.

சுந் :—பயமுறுத்தினுல்—

தீன :—சுந்தரம், இது இருபதாம் நூற்றுண்டாயிற்றே!

சுந் :—ஸரஸ்வதியைக் கைவசப்படுத்திக்கொண்டு கமலாஸனியை எங்கேயாவது அழைத்துக்கொண்டு போய்விட்டால்—

தீன :—அவனும் அங்கே வருவான்.

சுந்தரத்திற்கு இதற்குமேல் ஒன்றும் தோன்றவில்லை. அவன் சற்றுநேரம் ஏதேதோ யோசனைசெய்து கொண்டிருந்தான். கடைசியாக அவன் "கமலாஸனி இப்படி நடப்பாளென்று நான் இதுவரையில் நினைக்கவேஇல்லை. இப்பொழுது என்ன செய்யலாம்? இது எனக்குப் பெருஞ்சங்கடத்தை உண்டுபண்ணுகிறது. அவள் என் சொல்லைக்கேட்கமாட்டாள். அவள் எப்பொழுதும் என்னை ஒரு வாலிபனென்று மதிக்கிருள். கருணனந்தர் மிகவும் பைத்தியக்காரர்!" என்றுன்.

தீன :—நண்பா, நான் அனுபவசாலியாயும் உன் மித்ரனுயும் கமலாஸனியின் விஷயத்தில் அக்கரையுள்ளவனுயுமிருக்கிறபடியால் யுக்தமான சில விஷயங்களைச் சொல்லுகிறேன். நீ கமலாஸனியை நேரில்கண்டு பேசினுல் எல்லாம் சரியாய் விடுமென்று தோன்றுகிறது.

சுந் :—நானு?

தீன :—ஆம், நீ தான்.

சுந் :—அதனுல் ஒரு நன்மையும் உண்டாகாது. கமலாஸனியின் குணம் இப்படிப்பட்டதென்று உனக்குத் தெரியாது. அவள் என்னை லக்ஷியம்செய்வதே கிடையாது. என்னைக்கண்டதும் அவள் என்னேடு விளையாட ஆரம்பித்து விடுவாள்.

தீன :—நீ அவளுக்குப் புத்திசொன்னுல் தான் காரியம் முடியும். நான் சொல்வதைக்கேள். வயது சென்றவர்கள் அவளைக் கண்டிப்பதால் அவளுக்கும் செல்வராஜனுக்கு முள்ள சிநேகம் விர்த்தியடையுமேயன்றிக் குறைவுபடாது. அவள் தாயார் ஏதாவது சொன்னுல் அவள் அதை லக்ஷியஞ்செய்யமாட்டாள்.

சுந் :—அவள் அவனை மணம்புரிந்து கொள்வாளென்று எண்ணுகிருயோ?

தீன:—ஸரஸ்வதி அவளைக்கண்டித்தால், தான் அவனையே விவாகஞ் செய்துகொள்ள வேண்டுமென்று பகிரங்கமாய்ச் சொல்லிவிடுவாள். ஆகையால் இந்த விஷயம் இரகசியத்தில் இருக்கவேண்டும். அது நம்மிருவருக்குமாத்திரந்தான் தெரியும்.

இந்த விஷயத்தை வெளிவிடாமலே கமலாஸனியைக்கண்டிக்க வேண்டும். செல்வராஜன் யோக்கியனு அயோக்கியனுவென்று அவளுக்குத்தெரியாது. நண்பா, நான் சொல்வதை நம்பு; அவன் பரமஏழை—நாடோடி—அயோக்கியன்.

சுந் :—நீ சொல்வதை முற்றும் நம்புகிறேன்.

தீன :—சரி, அவளுக்கு யார் எச்சரிக்கை செய்வது? நான் செய்யக்கூடாது. என் வார்த்தையை நம்பமாட்டாள். நீ தான் தகுந்தவன். அவளை உன் சகோதரியைப்போல் பாவித்து நீ அவளுக்குப் புத்தி கூறலாம்.

சுந் :—சரி, பார்ப்போம்.

தீன :—அவளிடம் அதிகமாய்ப்பேசாதே. செல்வராஜன் நல்ல அந்தஸ்தில்லாதவனென்றும் அயோக்கியனென்றும் நீ கேள்வியுற்றதாக அவளிடம் தெரிவி; அவன் இதுவரையில் அநேக பெண்களை வஞ்சித்திருக்கிறுனென்றும் அவளிடம் சொல்லு. இதையெல்லாம் நான் சொன்னேனென்று அவள் தெரிந்துகொள்ளக்கூடாது. ஸரஸ்வதிக்கு இந்த விஷயம் தெரியாமலிருக்கவேண்டும்.

சுந் :—அப்படியே செய்கிறேன்.

தீன :—பல்லாவரத்திற்குப் போகிருயா?

சுந் :—அவசியம் போகிறேன். பிறகு ஏதாவது விபரீதம் நேரிட்டால்—

தீன :—ஆமாம், எதற்கும் முன் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்.

சுந் :—சரி, நான் போய் வருகிறேன். பல்லாவரத்திற்கு அடுத்தவாரம் போகிறேன்.

தீன : கமலாஸனியின் செல்வம் இன்னும் உன்னைவிட்டு நீங்கவில்லையே?

சுந் :—இல்லை, தயாராய் வைத்திருக்கிறேன். வேண்டும் போது பெற்றுக்கொள்ளலாம்.

சுந்தரம் கம்பெனியை விட்டுப்போனதும் தீனதயாளு மோட்டார்காரில் ஏறிக்கொண்டு நுங்கம்பாக்கத்திற்குச்சென்றுன். அவன் பங்களாவின் அருகில் வந்ததும் அவன் மனதில் பயங்கரமான எண்ணம் தோன்றிற்று. பத்மாவதி சிலநாளைக்கு முன் தன்னைக்கண்டது அவன் ஞாபகத்திற்கு வந்தது!

அவன் பங்களாவினுள்ளேசென்று ஓரிடத்தில் தனியாய் உட்கார்ந்தான். சுந்தரத்தின் உதவியைக்கொண்டு மித்திர பேதஞ்செய்தால் கமலாஸனியைப் பெறலாம் என்று அவன் நிச்சயமாய் எண்ணினுன்.

## 14. சந்தோஷம் அதிகரித்தது.

அன்றையதினம் சென்னைக்கு வந்தது தீனதயாளு

மாத்திரமல்ல. செல்வராஜனுக்கும் அங்கே சில வேலைகளிருந்ததால் அவனும் வந்திருந்தான். ஆனால் அவன் நாடிவந்த காரியம் தீனதயாளுவின் காரியங்களைப்போன்றதன்று.

செல்வராஜன் தன்னிடம் சிலைவாங்குபவர்களைப் பார்ப்பதற்காகவும், தனக்குவேண்டிய சில சாமான்களை வாங்குவதற்காகவும் சென்னைக்குச் சென்றிருந்தான். அவனுடையவேலை அவனுக்குச் சந்தோஷத்தைத் தருவதில்லை. ஏனெனில் அவனிடம் சிலைவாங்குபவர்கள் குறைந்தவிலைக்கு வாங்கவேண்டுமென்றிருந்ததால் அவன் கஷ்டத்திற்குத்தகுந்தலாபம்கிடைப்பது அபூர்வமாக இருந்தது. ஆனால் தற்சமயம் அவனுக்கு மிகுந்த சந்தோஷமுண்டாயிற்று. அதன் காரணம் என்னவெனில், அவன் கமலாஸனியைப்பற்றி நினைத்துக்கொண்டிருந்தான். அப்படிப்பட்ட சந்தோஷம் அவனுக்குண்டானதும் உலகமே அவன் கண்ணுக்கு வேறுமாதிரியாகத் தெரிந்தது! கமலாஸனியைவிட அவனுக்கு மிக்கசந்தோஷமுண்டாயிற்று. ஏனெனில், அவன் தன் கனவு பலிக்குமென்று எண்ணவில்லை-தான் செய்தசிலை உயிர்பெறுமென்று நினைக்கவில்லை! ஆகையால் அவன் சந்தோஷமுற்றது ஆச்சரியமானதன்று.

அன்று பகல் இரண்டு மணிக்குள் அவன் தன் வேலைகளை முடித்துக்கொண்டான். பல்லாவரத்திற்குப்போகும் வண்டி புறப்பட இன்னும் மூன்று மணிநேரம் இருக்கிறதென்று அறிந்து அவன் எங்கேயாவது பொழுதுபோக்காய்த்திரிந்துகொண்டிருக்கலாமென்று எண்ணினான். மியூஸியம், பீபுல்ஸ் பார்க் முதலிய இடங்களுக்குப்போக அவனுக்குச் சம்மதமில்லை. எங்கேயாவது தெருக்களின் வழியாய்ச்செல்லவேண்டுமென்றெண்ணி மவுண்டுரோட்டின் வழியாய்ச்சென்றான்.

அரைமணி நேரத்திற்கெல்லாம் அவன் நுங்கம்பாக்கத்தையடைந்தான். அங்குள்ள சில கட்டடங்களை உற்றுநோக்கிக்கொண்டிருந்தபொழுது அவ்வழியே ஒருவன் வருவதைக் கண்டான்.

வந்தவன் தரித்திருந்த சொக்காய் அவனைவிட மூன்று பங்கு பருத்ததேகமுடையவனுக்குப் போதுமானதாயிருந்தது. அவன் ஒரு பெரிய தலைக்குட்டை அணிந்திருந்தான். அவன் சொக்காயின் உட்புறத்தில் ஏதோ ஒரு மூட்டை இருப்பதாகத்தென்பட்டது.

அம்பலவாணன் தன் சட்டைக்குள்ளிருந்த குழந்தையோடு ஏதோ பேசிக்கொண்டே செல்வராஜன் நின்றிருந்ததைக்கவனியாமல் அவன்மேல் இடித்துக்கொண்டுபோனான். மிகுந்த வேகமாய் வந்து இடித்துக்கொண்டதால், குள்ளன் விழும் தருணத்திலிருந்தான். ஆனால் செல்வராஜன் அவனைப் பிடித்துக்கொண்டான். அம்பலவாணன் தலைக்குட்டை கீழே விழுந்து விட்டதால் அவனுக்கு மிக்ககோபமுண்டாயிற்று.

செல்வராஜன் கீழேவிழுந்த தலைக்குட்டையை எடுத்துக் கொண்டு குள்ளனைப்பார்த்து "ஐயா, எனக்கு மிகவும் வருத்த மாயிருக்கிறது. என்னால் உங்களுக்கு மிகுந்த கஷ்டமுண்டா யிற்று" என்றான்.

அம்பலவாணன் முணு முணுத்துக்கொண்டே தன் தலைக்குட்டையை வாங்கிக்கொண்டான். அப்போது அவன் சட்டைக்குள்ளிருந்த குழந்தை தலையைத் தூக்கிப்பார்த்தது. அதைக்கண்டதும் செல்வராஜன் ஆச்சர்யமுற்று "ஆஹா! இக்குழந்தை எவ்வளவு அழகாயிருக்கிறது! அதற்குக்காயம் படவில்லையே?" என்றான்.

அம்ப:—இல்லை, இல்லை. தலைக்குட்டையை என் தலை மேல் வைக்கிறாயா? எங்களிருவருக்கும் காயம்படவில்லை. விளக்குக் கம்பத்தைப்போல் மனிதன் ரோட்டில் நின்றிருப் பதை நான் இது வரையில் கண்டதில்லை. அப்பா, இனிமேல் ரோட்டில் இம்மாதிரி நிற்காதே. குழந்தைகளுக்குக் கெடுதி யுண்டாகும்.

செல்வராஜன் தலைக்குட்டையைவாங்கி அம்பலவாணன் தலையில் வைத்துவிட்டு அவ்விடம் விட்டுப்போக ஆரம்பித் தான். அப்பொழுது சட்டையின் உட்புறத்திலிருந்த குழந் தை தலையை நிமிர்த்திச்செல்வராஜனைப்பார்த்து, "குள்ளப் பா! நான் பாக்கணம்" என்றது. அதைக்கேட்ட அம்பலவா ணன் தன் சட்டையைச்சிறிது நீக்கி "அதோபார்; கண்ணே! அவனைப் பார். அவன் பிசாசைப் போலிருக்கிறான். இல்லே?" என்றான்.

அந்தக்குழந்தை "இல்லே, நல்லா இருக்கான்" என்று சொல்லிக்கொண்டே செல்வராஜனை உற்றுப்பார்த்தது. செல் வராஜன் அதனருகில் சென்று "வா, குழந்தாய்! என்னிடம் வா" என்றான்.

அம்பலவாணன் பொறுமையுடன் குழந்தையை மூடிக் கொண்டு அவ்விடம் விட்டுச்சென்றான். செல்வராஜன் அவ னையே பார்த்துக்கொண்டிருந்தான். அவன் அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டபோது கீழே ஒரு சிறிய ஜோடு விழுந்தி ருக்கக்கண்டான். அவன் அதைக் கையிலெடுத்துக்கொண்டு தனக்குள் "நான் இன்னொரு முறை அந்தக் குழந்தையைப் பார்க்கவேண்டியிருக்கிறது. இந்தஜோடு அதனுடையதென் றே நினைக்கிறேன். அந்தக்குள்ளனைப் பின்பற்றிப்போய் அவ னிடம் இதைக்கொடுக்கவேண்டும்" என்று சொல்லிக்கொண் டே அம்பலவாணன் சென்றவழியை நோக்கிப்போனான்.

அந்தக்குள்ளனுடைய கால்கள் வளைந்திருந்தபோதிலும் மெல்லியனவாயிருந்ததால் அவன் அதிவிரைவாய்ச்சென்றான். செல்வராஜன் அவ்வழியேசென்று ஒரு தெருவை அடைந்த தும் குள்ளன் கண்ணுக்குப் புலப்படவில்லை. எங்கேசென்று

ளென்பதை அறியாமல் அவன் அங்கிருந்த ஒரு சேவகனை நோக்கி "ஒரு பெரியவர் இந்த வழியில் வந்தாரா?" என்று கேட்டான்.

சேவ:-யார் ஐயா, ஒரு மூட்டையை எடுத்துக்கொண்டு போனவரா? ஏதாவது தொலைந்துவிட்டதோ?

செல்வ:—இல்லை, ஒரு வஸ்து அகப்பட்டது. அந்தப் பெரியவர் எப்படிப்போனார்?

சேவ:—அப்பாசாமி முதலி தெருவிலிருப்பான். இப்பொழுது சென்றது அம்பலவாணனும் அவன் மகனும்.

செல்வ:—அவர்களை எல்லோரும் அறிவார்களோ?

சேவ:- ஆம், நுங்கம்பாக்கத்திலிருப்பவர்களெல்லாம் அவர்களை யறிவார்கள். அந்தக்கிழவன் முரடனாயிருந்தாலும் குழந்தையினிடத்தில் அதிக ஆசையுள்ளவனாயிருக்கிறான். அதன்மேல் காற்றுகூட வீசக்கூடாதென்பது அவன் எண்ணம். இங்கிருந்துபோய் இடது கைப்புறம் திரும்புங்கள். 25-ம் நம்பர் வீடு.

சேவகன் சொல்லியதைக் கேட்டுக்கொண்டு செல்வராஜன் அம்பலவாணனைத் தேடிச்சென்றான். சற்றுநேரத்திற்கெல்லாம் அவன் அம்பலவாணன் வீட்டிற்கு வந்து கதவைத் தட்டினான். அதைக்கேட்டதும் அம்பலவாணன் கோபத்துடன் வந்து கதவைத்திறந்து "என்ன ஐயா இது? தபாற்காரனைப்போல் கதவை இடித்துத் தூங்கிக்கொண்டிருக்குங் குழந்தையை எழுப்புகிறாயே, என்ன சங்கதி?" என்றான்.

செல்வ:-நான் உரக்க இடிக்கவில்லையே! நீங்கள் நின்றிருந்த இடத்தில் இந்த ஜோடு விழுந்து கிடந்தது. அதை உங்களிடம் கொடுக்கவேண்டுமென்று வந்தேன்.

அம்ப:-ஓ, அப்படியானால் நீ கதவைத் தட்டியது கிரமந்தான். என் கண்மணியின் ஜோடு தொலைந்துவிட்டால் அவன் அழுவானே. அவனுக்கென்று இதை அதிக விலைகொடுத்து வாங்கினேன்.

செல்வ:—நான் அவனை இம்சைசெய்யவில்லையென்று நினைக்கிறேன்.

அம்ப:—இல்லை, அவன் அழவில்லை. அவன் நல்ல அழகுடையவன். இல்லை?

செல்வ:-அவன்போன்ற அழகுடைய குழந்தையை நான் இதுவரையில் கண்டதில்லை. நான் இன்னொருமுறை அவனைப் பார்க்கலாமா?

அம்:-நீ இப்பொழுது எனக்கு உதவி புரிந்திருக்கிறாய். ஆகையால் வந்து பார்க்கலாம்.

செல்வராஜன் அம்பலவாணனோடு குழந்தைபடுத்திருந்த அறைக்குச் சென்றான். குழந்தை ஓர் அழகிய படுக்கையின் மேல்படுத்துக் கொண்டிருந்தது. அவ்வறை வெகு அழகாய்

அலங்கரிக்கப்பட்டிருந்தது. அம்பலவாணன் குழந்தையை உட்காரவைத்தான். அதைக்கண்டதும் செல்வராஜனுக்கு மிகுந்த களிப்புண்டாயிற்று. அதே நிலையில் அந்தக் குழந்தையைப் போல் ஒரு சிலைசெய்தால் நன்றாயிருக்குமென்று எண்ணினான்.

செல்வ.—வெகு நேர்த்தியாயிருக்கிறான். ஆஹா! அவன் சிரசின் அழகை நான் என்னென்று சொல்வேன்!

அம்ப:—இவனைப்போல் அழகுடையவன் வேறெங்கே யாவது இருப்பானா? அப்படியிருப்பதாக யாராவது சொன்னால் அது பொய்யாகுமேயன்றி உண்மையாகாது.

செல்வ:—இவன் உங்கள் குமாரனா?

அம்ப:—(சந்தேகத்துடன் செல்வராஜனைப் பார்த்து) என் மகன்தான். என் அருமை மகன்! வேறு யாருடைய மகனென்று எண்ணுகிறாய்?

செல்வ:—சரிதான், அவன் உங்களை "அப்பா" என்று கூப்பிட்டதைக் கவனித்திருக்கிறேன்.

அம்ப:-'குள்ளப்பா'வென்று கூப்பிடுவான், அவன் என்னை எப்படிக் கூப்பிட்டால் நன்றாயிருக்குமென்று யோசித்தேன். சில குழந்தைகள் தங்கள் தகப்பன்மார்களைக் கண்டு பயப்படுவது வழக்கம். ஆனால் என் குழந்தை பயப்படாது. எனக்கு இவனைவிட உயர்ந்த பொருள் என்ன இருக்கிறது? ஆகையால் அவன் குள்ளப்பாவென்று கூப்பிட்டால் நன்றாயிருக்குமென்று அறிந்து அப்படியே என்னைக் கூப்பிடும்படி பழக்கி விட்டேன். அவன் அதைச் சொல்லும்போது என்ன மதுரமாயிருக்கிறது தெரியுமா?

செல்வ:—அவன் பெயரென்ன?

அம்ப:—சந்திரன்.

செல்வ:—நேர்த்தியான பெயர்! ஆனால் விநோதமாயிருக்கிறது.

அம்ப:—அவன் என் குழந்தையாதலால் அவனை எப்படி வேண்டுமானாலும் கூப்பிடலாமன்றோ? அவனும் என்வார்த்தையை மீறி நடப்பதில்லை.

செல்வ:—(சிரித்துக்கொண்டே) வாஸ்தவந்தான். சந்திரன் எப்படி உலகத்தவரைக் களிக்கச்செய்கிறானோ அப்படி இவனும் உங்களைக்களிக்கச் செய்வானென்று எண்ணுகிறேன்.

அம்ப:—அதற்கென்ன சந்தேகம்? அவன் சந்திரனாயிற்றே! இல்லை?

செல்வ:— ஆமாம், நான் உங்களை ஒன்று கேட்கவேண்டும். தயவுசெய்து அவனை—

அம்ப:-(கோபத்துடன்) விரல் நுழைய இடம்விட்டால் தலையை நுழைத்துக் கொள்ளுகிறாயே! நீ அவனை எடுத்துக் கொண்டுபோக உனக்கென்ன அதிகாரம்? நீ யார்? அவன் எனக்குத்தான் சொந்தம். நான்—அவன்—அவன்தகப்பன்.

செல்வ :—ஐயோ, நீங்கள் பிசகாய் எண்ணுகிறீர்களே! நான் அவனை எடுத்துக்கொண்டுபோக விரும்பவில்லை. அவன் உருவத்தை ஒரு கடுதாசியில் எழுதிக்கொண்டு அவனைப் போல் ஒரு சிலை செய்யலாமென்று எண்ணினேன்.

அம்ப :—ஓ, சமாதியின்மேல் வைக்கச்சிலை செய்வதற்காகவா அவன் உருவத்தைப் பார்த்தெழுதப்போகிறாய்? முடியாது.

செல்வ :—சமாதியின்மேல் வைப்பதற்கல்ல—ஒருமாளிகையில் வைப்பதற்காக; அல்லது ஒரு அழகிய தோட்டத்தில் வைப்பேன். ஒரு நீரூற்றினருகில் கையில் புஷ்பங்களுடன் அவன் சிலை நின்றிருப்பதைப்பார்க்க உங்களுக்கு ஆசை இல்லையா?

அம்ப :—அப்படியானால் சரிதான். அப்படிப்பட்ட இடங்களில் தான் வைக்கவேண்டும். நீ அவனைப்போல் படமெழுதிக்கொள்ளலாம்.

செல்வராஜன் தன் சட்டைப்பையிலிருந்த ஒரு குறிப்புப் புத்தகத்தையெடுத்து அதில் குழந்தையின் உருவத்தைப் போல் எழுத ஆரம்பித்தான். சற்றுநேரத்திற்கெல்லாம் எழுதிமுடித்து அதை அம்பலவாணனுக்குக் காட்டினான்.

அம்ப :—(படத்தைப்பார்த்து) இது அவனைப்போலவே இருக்கிறது. சிலையைச் சலவைக்கல்லினால் செய்யப்போகிறாயா? நான் அதைப் பார்க்கவேண்டும்.

செல்வராஜன் தன் விலாஸத்தை ஒரு காகிதத்திலெழுதி அதை அம்பலவாணனிடங் கொடுத்தான்.

செல்வ :—என் வீடு பல்லாவரத்திலிருக்கிறது. ரெயில்வே ஸ்டேஷனுக்கு மேற்கே இரண்டு மைல் தூரத்தில் கருணானந்தர் பங்களாவுக்கு அருகிலிருக்கிறது. உங்களுக்கு எப்பொழுது இஷ்டமோ அப்பொழுது வாருங்கள். நான் அங்கே தான் இருப்பேன்.

அம்ப :—சந்திரன் தடைசொல்லாமலிருந்தால் வருகிறேன்—ஏனெனில் அவனுக்கும் விருப்பு வெறுப்பென்பது உண்டல்லவா? சரி, வருகிறேன்.

செல்வராஜன் அந்தக்குழந்தையை இன்னொருமுறை பார்த்துவிட்டு அம்பலவாணனிடம் விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டான். அவன் போகும்போது மேஜையின்மேல் ஒரு ஐந்து ரூபாய் நோட்டை வைத்துவிட்டுப் போனான். அவன் ஏற்கெனவே சந்தோஷமுற்றிருந்தான். குழந்தையைக்கண்டதால் அவன் கொண்ட சந்தோஷம் அதிகரித்தது.

## 15. வெளியே செல்லாதபடி ஏற்பாடு செய்யவேண்டும்.

செல்வராஜன் சென்னைக்குச்சென்ற மறுநாள் சாயங் காலம் கமலாஸனி தோட்டத்தில் உலாவிக்கொண்டிருந்தாள். காற்று ஜில்லெனவீசிக் கொண்டிருந்தது. புஷ்பங்கள் நன் ருய் மலர்ந்திருந்தன; குயில்கள் இனிமையாய்க் கூவிக்கொண் டிருந்தன; இவைகளைக் கண்டதும் அவள் மனதில் திடீரென்று ஒருவித எண்ணம் உண்டாயிற்று.

அவள் வீட்டைவிட்டுப் புறப்படும்போதே அவள்தாயார் ஒருமணி நேரத்திற்குள் திரும்பிவந்துவிடும்படி கட்டளை யிட்டிருந்தாள். கமலாஸனி செல்வராஜனைப் பார்க்கவேண்டு மென்றெண்ணியவளாய் அவன் வீட்டைநோக்கிச்சென்றாள். அப்படிச்சென்று கொண்டிருந்தபோது தான் செல்வராஜ னோடு அதிகநேரம் பேசுவதற்கில்லையே என்று வருந்தினாள். ஸரஸ்வதி அவளுடன் விவாக விஷயமாய்ப் பேசியது முதல் அவள் முகத்தில் குடிகொண்டிருந்த வெறுப்புக்குறி இப்பொ ழுது தான் மாறியது; இப்பொழுது தான் அவள் முகத்தில் சந்தோஷக்குறி தோன்றிற்று. அவள் சற்றுநேரத்திற்கெல் லாம் செல்வராஜன் வீட்டை அணுகினாள். அவள் வருவதைப் பார்த்திருந்த செல்வராஜன் உடனே அவளெதிரில் வந்து "கமலா, நான் எதிர்பார்த்தபடியே வந்து விட்டாய்" என்று சொல்லிக்கொண்டே அவள் கையைப்பிடித்து அழைத்துப் போனான்.

கமலா :—நான் வருவேனென்று உங்களுக்கு எப்படித் தெரியும்?

செல்வ :—(சிரித்துக்கொண்டே) எனக்கு ஜோசியம் தெரியும்.

கமலா :—உங்களுக்கு எதுதான் தெரியாது! மனிதர் களுடைய உள்ளக்கருத்தை அறிபவர்க்கு மற்ற விஷயங்களை அறிவது கஷ்டமல்லவே.

செல்வ :—கமலா, இப்பொழுது எனக்கு ஒருவேலைக் காரனிருக்கிறான். உனக்குத் தெரியுமா?

கமலா :—தெரியாதே, யார் அவன்?

செல்வ :—குதிரைமேலேறி விழுந்தானே, அவன்தான்.

கமலா : (திடுக்கிட்டு) தினதயாளுவின் வேலைக்காரனு? ஐயோ! அவனை ஏன் வைத்துக் கொண்டீர்கள்?

செல்வ :—அவனை ஏன் வைத்துக்கொள்ளக் கூடாது?

கமலா :—அவன் யோக்கியனுயிருப்பானு?

செல்வ:—நல்ல யோக்கியன். அவனைப் பார்க்கும்போதே

அவன் எனக்குத் தகுந்த வேலைக்காரனென்று தோன்றிற்று. இரண்டு நாளைக்குமுன் அவன் என்னிடம் வந்து தன்னை வேலைக்காரனாக அமர்த்திக்கொள்ளும்படி வேண்டினான். நான் அவனை அங்ஙனமே வைத்துக்கொண்டேன். தீனதயாளு தன்னை அயோக்கியத் தனத்திற்காக வேலையினின்றும் நீக்க வில்லையென்று அவன் என்னிடங்கூறினான். நான் அதைப் பற்றித் தீனதயாளுவுக்கு எழுதினேன்.

கமலா :—ஆமாம், தீனதயாளு என்ன தெரிவித்தான்?

செல்வ :—தங்கமணி யோக்கியனென்றும், ஆனால் தன்னிடத்தில் வேலைசெய்ய அவன் தகுந்தவனல்லனென்று அவனை வேலையினின்று நீக்கிவிட்டதாகவும் தெரிவித்தான். என்னிடத்திலுள்ள முரட்டுவேலையைச்செய்ய அவன் தகுந்த வனல்லவா? ஆகையால் அவனை வைத்துக்கொண்டேன்.

கமலா :—அவன் நன்றாய் வேலை செய்கிறானா?

செல்வ:—மிகவும் நன்றாய்ச் செய்கிறான். அவன் கபட வேஷதாரியல்ல. அவன் மனதில் ஏதோவருத்த மிருப்பதால் சரியாய்ப் பேசுவது கிடையாது. வேலையில் மிகவுங்கெட்டிக்காரன்.

இருவரும் வீட்டினறைக்குள் சென்றார்கள். அதில் இரண்டு பழைய நாற்காலிகளிருந்தன. அவைகளில் இருவரும் உட்கார்ந்து கொண்டனர். கமலாஸனியின் முகம் மிகுந்த காந்தியுடன் விளங்கியது.

செல்வராஜன் சற்றுநேரம் அவள் முகத்தை உற்றுநோக்கிவிட்டுப் பிறகு "உன்னை எப்பொழுது காண்பேனென்றிருந்தேன்" என்றான்.

அதைக்கேட்டதும் கமலாஸனி புன்னகை செய்தனள்; அந்தப் புன்னகையில் அநேக விஷயங்கள் அடங்கியிருந்தன— செல்வராஜன் அவளிடம் தெரிந்துகொள்ளவேண்டிய விஷயங்களெல்லாம் அதிலடங்கியிருந்தன.

ஸரஸ்வதி கமலாஸனியிடம் வந்து தீனதயாளுவைப் பற்றிப்பிரசங்கம் செய்ததைவிட இந்தப்புன்னகையில் அநேக அரிய விஷயங்கள் அடங்கியிருந்தன. அவள் கண்களில் சந்தோஷமும் துக்கமும் கலந்திருப்பதைக்கண்ட செல்வராஜன் "கமலா, என்ன சங்கதி? நீ விசனத்தோடிருப்பதாகத் தெரிகிறதே! ஏதாவது விசேஷமுண்டா?" என்று கேட்டான்.

அவள் கீழ்நோக்கிய கண்களுடன் ஏதோ சிந்தித்துக் கொண்டிருந்தாள். தீனதயாளுவைப்பற்றி அவள் செல்வராஜனிடம் தெரிவிக்கலாமா? அதைப்பற்றி நினைக்கும்போதே அவள் உடல் நடுங்கிற்று.

செல்வ :—(அவள் கைகளைப்பிடித்துக்கொண்டு) கமலா, ஏதோ நடந்திருப்பதாகத் தெரிகிறது. என்ன சங்கதி? நீ அனுபவிக்கும் துன்பத்தை நான் பங்கிட்டுக் கொள்ளாமலி

ருக்க என் மனம் சகியாது. சொல்லமாட்டாய்? சொல்லியே தீரவேண்டும்.

அவன் தன் கைகளைப்பற்றியிருந்த மாதிரியில் அவன் தன்னைக்காப்பாற்றக் கூடியவனென்று அவள் அறிந்துகொண்டாள். அவளுக்கு அது புதிதாகக் காணப்பட்டது. தனக்கு ஆதரவாயிருக்கும் ஒருவரையும் அவள் இதுவரையில் கண்டதில்லை. தன் தாயார்கூடத் தன்னிடத்தில் அவ்வளவு விசுவாசமாயிருக்கவில்லையென்று அவள் எண்ணினாள். ஸரஸ்வதி தன்மகளைச் செல்வரங்கனுக்கு விவாகஞ்செய்து கொடுக்க வேண்டுமென்று யோசனைசெய்து கொண்டிருந்தாளேயன்றி, அவளை ஆதரவுடன் வைத்திருக்கவில்லை.

செல்வ :—கண்ணே, சொல்லமாட்டாயா?

கமலா :—தீனதயாளு—

செல்வ :—ஏன் மயங்குகிறாய்? தெரிவி.

கமலா :—அவனை மணம்புரிந்து கொள்ளும்படி அம்மா என்னைக்கேட்டார்கள், நான் அதற்கு மறுத்துவிட்டேன்.

செல்வராஜன் இதுவரையில் பிடித்திருந்த அவள் கரங்களைவிட்டு விட்டு அவள் முகத்தில் முத்தமிட்டான். சற்று நேரம் வரையில் இருவரும் பேசாமலிருந்தனர். அவர்கள் அங்ஙனமே வெகுநேரமிருந்திருப்பார்கள். ஆனால் அவ்வறையிலிருந்தகெடியாரம் நேரம் ஆய்விட்டதென்று கமலாமணிக்கு எச்சரிக்கை செய்தது.

கமலா :—நான் தீனதயாளுவின் வேண்டுகோளுக்கு இணங்கியிருந்தால் என்ன செய்திருப்பீர்கள்?

செல்வ :—நிறைவேறக்கூடாத விஷயத்தைப்பற்றிப்பேசாதே. நான் என்ன செய்திருப்பேன் தெரியுமா? விவாகம் நிறைவேறுவதற்குமுன் உன்னை அபகரித்துக்கொண்டு போயிருப்பேன்.

அதைக்கேட்டதும் கமலாமணி நகைத்தாள்.

செல்வ :—கண்ணே, நான் உன்னை எப்பொழுதும் விடமாட்டேன். ஆனால்—

கமலா :—என்ன ஆனால்?

செல்வ:—நீயேஎன்னை விலக்கிவிட்டால்சென்றுவிடுவேன்.

கமலா :—நான் எப்பொழுதும் அங்ஙனம் செய்யமாட்டேன். ஆனால்—

செல்வ :—என்ன ஆனால்?

கமலா :—(புன்சிரிப்புடன்) நான் அம்மாதிரி நினைக்கவில்லை—நீங்கள் என்னை லக்ஷியஞ்செய்யாவிட்டால்—

செல்வ :—நான் இதுவரையில் உன்னை அலக்ஷியப்படுத்தியிருந்தால் என்னை மன்னித்துவிடு. நான் அம்மாதிரி செய்யவே மாட்டேன். நீ எனக்குப் புதிய வாழ்க்கையும், புதிய நம்பிக்கையும், புதிய ஆசையையும் தந்திருக்கிறாய்.

பிறகு இருவரும் தங்கள் தங்களுடைய சங்கதிகளைச் சொல்லிக் கொண்டனர். அவன் சில நாளைக்குமுன் செய்த ஒப்பிய ஓர் அழகிய சிலையால் தனக்கு நல்ல கீர்த்தியுண்டாயிற்றென்றும், அதனால் தனக்கு அதிகலாபங்கிடைக்குமென்றும் தான் கூடிய சீக்கிரத்தில் அவளை மணம்புரிய யோக்கியதையுள்ளவனுவானென்றும், தனக்கு மிகுந்த பொருள் கிடையாதென்றும் அவளிடந்தெரிவித்தான். அவள் தன் விருப்பங்களை அவனிடந்தெரிவித்தாள்; தனக்குள்ள செல்வத்தைப் பற்றியும் அவனிடங்கூறினள்.

'செல்வம்' என்றவார்த்தையைக் கேட்டதும் செல்வராஜன் தன் முகத்தைச் சுளித்துக்கொண்டு கமலாஸனியைப் பார்த்து "கமலா, உனக்குச் செல்வமில்லாமலிருந்தால் நன்மையாயிருக்கும்" என்றான்.

கமலா :—எனக்கும் அப்படித் தான் தோன்றுகிறது. உங்களிடம் பொருளில்லாமல் என்னிடமிருந்து என்ன பயன்? யாருக்காவது கொடுத்து விடுவோமா?

செல்வ:-(சிரித்துக்கொண்டே) வேண்டாம் வேண்டாம். அதுவும் நல்ல காரியத்திற்கு உபயோகமாகும். அது ஒருவனுக்கு எவ்வளவு சந்தோஷத்தைக் கொடுக்கும்!

சற்றுநேரத்திற்கெல்லாம் கமலாஸனி செல்வராஜனிடம் விடைபெற்றுக் கொண்டு தன்வீட்டுக்குப் போய்விட்டாள்.

அன்றிரவு இருள் வந்து மூடியவுடன் செல்வராஜன் வீட்டிலிருந்து ஒரு போர்வழி எங்கேயோ சென்றான். அவன் அணிந்திருந்த உடையும் அவனது துரிதமான நடையும் சென்றது தங்கமணி யென்று தெரிவித்தன.

அவன் தீனதயாளுவின் இருப்பிடத்தைநோக்கி அதிவேகமாய்ச் சென்று கொண்டிருந்தான். அவன் அரை மணி நேரத்திற்குள் அவ்விடம் போய்ச்சேர்ந்தான்.

அவன் தான் போகவேண்டிய இடம் நெருங்கிவிட்டதென்று அறிந்ததும் மிகுந்த ஜாக்கிரதையோடு நடக்க ஆரம்பித்தான். ஜன்னல்களின் வழியாய் விளக்கு பிரகாசித்துக் கொண்டிருந்ததால், தன்னையாராவது கண்டு விடுவார்களெனப் பயந்து அவன் அவ்வீட்டைச்சுற்றி வந்தான். அவ்வீட்டின் பின்புறத்திலிருந்து பார்த்தபோது ஓரறையின் ஜன்னலில் பசுமையான வெளிச்சம் தெரிந்தது.

தங்கமணி தன்னையாராவது பார்க்கிறார்களாவென்று சுற்றுப்புறம் பார்த்துவிட்டு அந்த ஜன்னலினருகே சென்று கண்ணாடியைத் தட்டிவிட்டு இருளில் மறைந்து கொண்டு மறுமொழியை எதிர்பார்த்திருந்தான். உடனே ஒரு கதவு திறக்கப்பட்டது. தீனதயாளு மெல்லிய குரலுடன் "யார் அது, தங்கமணியா?" என்று கேட்டான். வந்தது தங்கமணி தானென்று அறிந்துகொண்டு தீனதயாளு அவனை அறைக்குள்

அழைத்துச் சென்றான்.

தீன :—என்ன விசேஷம்?

தங்க :—அவள் இன்று மாலை அங்கே வந்திருந்தாள்.

தீன :—அப்படியா! அவர்கள் என்ன செய்தார்கள்?

தங்க-:சற்றுநேரம் வெளியே பேசிக்கொண்டிருந்தார்கள்.

தீன :—பிறகு?

தங்க :—உள்ளே சென்றார்கள்.

தீன :—சந்தோஷம்! எவ்வளவு நேரம் பேசினார்கள்?

தங்க :—அரைமணி நேரத்திற்கு மேலிருக்கும்.

தீன :—அவர்கள் என்ன பேசிக்கொண்டார்கள்?

தங்க:-நான் வெளியே இருந்ததால் ஒன்றும்கேட்கவில்லை.

தீன :—நீ இங்கே வந்தது சரிதான். அங்கே ஏதாவது நடந்தால் அதை எனக்கு உடனே தெருவி. அவன் வெளியே சென்று எப்படிக்காலங் கழிக்கிறானென்றும், என்ன செய்கிறானென்றும் நான் தெரிந்துகொள்ளவேண்டும். அவள் அங்கே மறுபடியும் வந்தால் அவர்கள் என்ன பேசிக்கொள்ளுகிறார்களென்பதைக் கவனி. அவர்கள் ஒருவருக்கொருவர் கடிதமெழுதிக்கொண்டால் அதை நான் பார்க்கவேண்டும். அது தான் முக்கியம்.

தங்க :—அப்படியே செய்கிறேன்.

தீன :—நீ இங்கே வந்ததையாராவது கண்டார்களோ?

தங்க :—இல்லை.

தீன :—நல்லது, நாமிருவரும் சந்திப்பது ஒருவருக்கும் தெரியக்கூடாது. நீ இங்கே வரும்போது உன்னையாராவது பார்க்கிறார்களாவென்று ஜாக்கிரதையாய்ப் பார்த்துக்கொண்டு வா. ஜன்னலில் சிவப்பு வெளிச்சந்தெரிந்தால் உள்ளேவராதே. பச்சையாயிருந்தால் வா—என்றுசொல்லி அவனிடம் ஏதோ தின்பண்டங்கொடுத்து அடுத்த அறைக்குள் போகச்சொன்னான்.

தங்கமணி அவ்விடம் விட்டுப்போனதும், தீனதயாளு ஓர் நாற்காலியில் உட்கார்ந்தவண்ணம் தங்கமணிகூறிய விஷயத்தைப்பற்றி யோசித்துக் கொண்டிருந்தான். கமலாவணி செல்வராஜன் வீட்டிற்குச் செல்வதை உடனே நிறுத்திவிடலாமா அல்லது கொஞ்சக்காலஞ்சென்று நிறுத்தலாமாவென்று யோசித்தான். அவர்கள் பேசிக்கொள்ளும் சங்கதியைச் சரியாகத்தெரிந்துகொள்ள ஏது இல்லாமையால் கமலாவணி வெளியே செல்லாதபடி ஏற்பாடுசெய்யவேண்டும் என்று அவன் நிர்மானிக்கலானான். அப்படிச்செய்வதினால் அவர்கள் கடிதமெழுதிக்கொள்வார்களென்றும் அவைகளைத்தங்கமணி தன்னிடங் கொண்டு வருவானென்றும் அவன் எண்ணியிருந்தான்.

# 16. எண்ணம் ஈடேறிவிட்டது.

கமலாஸனியின் அபிப்பிராயத்தைக்கேட்ட மூன்றுநாள் தீனதயாளு மறுபடியும் ஸரஸ்வதியின் பங்களாவுக்கு வந்தான். ஸரஸ்வதி அவனைத் தங்கள் குடும்பத்தில் ஒருவனுகப்பாவித்து வந்தாளாதலால் அவன் தனக்கிஷ்டமான போதெல்லாம் அங்கே வருவதும் போஜனஞ்செய்வதுமாக இருந்தான்.

ஸரஸ்வதியும் கமலாஸனியும் சிற்றுண்டி அருந்திக்கொண்டிருந்தார்கள். ஸரஸ்வதி தீனதயாளுவைக் கண்டதும் அவனை அங்கே அழைத்தாள். அவன் சிற்றுண்டிவேண்டாமென்று ஒரு டம்ளர் காப்பிமாத்திரம் வாங்கிக்கொண்டான். அவனைக் கண்ட பிறகு கமலாஸனி யாதும் பேசாமல் எழுந்து போய்விட்டாள். தீனதயாளுவும் ஸரஸ்வதியும் அங்கேயே உட்கார்ந்திருந்தனர். தீனதயாளு தான் நாடி வந்த காரியத்தைச் சீக்கிரத்தில் முடித்துக்கொண்டுபோக வேண்டுமென்று எண்ணியிருந்தான்.

தீன :—கமலாஸனி தனியாய் வெளியேபோவதை நான் கண்டதாக ஞாபகமிருக்கிறது.

ஸரஸ் :—ஆமாம், அவள் பலமுறை சென்றிருக்கிறுள். அவளுக்கு இங்கேபொழுது போகவில்லை. ஆகையால் எங்கேயாவது அலைந்து திரிகிறுள். அவள் தனியாய்ப்போவது எனக்குச் சம்மதமில்லை. நான் சொல்வதைக் கேட்பதில்லை, நானென்ன செய்வது?

தீன :—எனக்கும் பயமாக இருக்கிறது. அவள் பார்வைக்கு அழகாயிருக்கிறுள்; விலையுயர்ந்த ஆபரணங்களை அணிந்துகொண்டிருக்கிறுள். ஏதாவது நேரிட்டால்—.

ஸரஸ் :—ஐயோ, என்னைப் பயமுறுத்துகிறீர்களே! அவள் தனியாய்ப் போவது சரியல்லவென்று எனக்கு முன்னமே தோன்றிற்று. சரி, இனி ஜாக்கிரதையாயிருக்கவேண்டும். அவளோடுகூட ஒருவேலைக்காரியை அனுப்புகிறேன். நான் பலமுறைசொல்லியும் அவள் வேண்டாமென்று தடுத்துவிட்டுத் தனியாய்ப்போகிறுள். என்னுலேயே அவள்கெட்டுப்போகிறுள்.

தீன :—அவள் மிகவும் நற்குணமுடையவள். அவளைப் புதல்வியாகப்பெற்ற உங்களுக்கு யாதொரு குறைவுமில்லை. ஆனல் அவளைத் தனியாய் வெளியே செல்லவிடுவது சரியல்ல. அவள், எப்பொழுதாவது வெளியேசென்றுல் ஒருவேலைக்காரியை அவளுடன் அனுப்புங்கள். அப்படிச்செய்தால் நாம் எதைப்பற்றியும் பயப்படவேண்டியதில்லை.

ஸரஸ்வதி தீனதயாளு தெரிவித்தது மிகவும் முக்கியமான விஷயமென்று எண்ணினுள். தன் மனதிலிருந்த பெரும்

பயத்தை அவன் நீக்கிவிட்டதாகக் கருதி உள்ளங்களித்தாள். அவன் சொல்லியது போலவே தன் மகளோடு ஒருவேலைக்காரியை அனுப்பவேண்டுமென்று அவள் தீர்மானித்தாள்.

தினா :— நான் இந்த விஷயத்தைமேல்போட்டுக் கொண்டதற்காக என்னை மன்னிக்கவேண்டும். ஆனால் கமலாவளியின் விஷயத்தில் எனக்கிருந்த அக்கறையுண்டாயிருப்பதால் இதை உங்களிடம் தெரிவிக்கலானேன்.

வால் :— நீங்கள்மேல்போட்டுக்கொள்ளாமல் மற்றுயார் போட்டுக்கொள்வது? நீங்கள் சொல்லியது மிகவும் சரி.

தன் தந்திரம் பலித்துவிட்டதை எண்ணி மகிழ்ந்து கொண்டே தினதயாளு பங்களாவைவிட்டுப்போனான். வால்வதி தன் மகள் வெளியே போகும்போது ஒருவேலைக்காரியை அனுப்பத் தயாராயிருந்தாளாதலால் கமலாவளி செல்வராஜன் வீட்டிற்குப்போவது கஷ்டசாத்தியமாகும். வால்வதிக்குத்தெரியாமல் போகவும் முடியாது. கமலாவளியும் செல்வராஜனும் பங்களாத்தோட்டத்தில் சந்திப்பார்களென்றும் தான் அதற்குத் தகுந்த ஏற்பாடு செய்யவேண்டுமென்றும் தினதயாளு எண்ணியிருந்தான்.

அடுத்தமுறை கமலாவளி வெளியே செல்லவேண்டுமென்று தன் தாயாரிடம் தெரிவித்ததும், வால்வதி ஒருவேலைக்காரியை அவளுடன் அனுப்புவதாகச்சொன்னாள். கமலாவளி தான் தனியே செல்வதால் யாதொரு கெடுதியும் சம்பவிக்காதென்று தன் தாயாரிடம் எவ்வளவோ சொல்லியும் பயன் படவில்லை.

அன்று முதல் கமலாவளி வெளியே போவதற்கில்லாமல் போயிற்று. அவள் வருத்தத்துடன் தோட்டத்தில் திரிந்து கொண்டிருப்பாள். செல்வராஜன் வீடு அவ்வளவு சமீபத்திலிருந்தும் தனக்கு வெகு தூரத்திலிருந்ததை நினைத்துத் துக்கப்படுவாள்.

அவள் செல்வராஜனைப் பாராமலிருந்தால் அவன் என்ன நினைத்துக்கொள்வான்? தன்னை மறந்துவிட்டாளென்றெண்ணுவானோ? அவள் அவனை ஒரு முறை கண்டு நடந்த சங்கதியை—தான் வெளியே வரமுடியாதபடி தன் தாயார்கட்டுச்செய்திருப்பதை—அவனிடம் தெரிவித்துவிட்டால் அவள் மனதிலுள்ள வருத்தம் நீங்கிவிடும். நாளுக்கு நாள் அவள் தேகம் மெலிந்துவிட்டது; முகத்திலிருந்த களைமாறியது; எப்பொழுதும் வருத்தத்துடனிருப்பாள்.

இவைகளையெல்லாம் வால்வதி அறிந்தாளில்லை; சென்னையைவிட்டு வந்ததால் தன் மகள் இளைத்திருப்பாளென்று எண்ணியிருந்தாள்.

தினதயாளு வால்வதியின் வீட்டிற்கு வந்துபோன ஒரு வாரத்திற்கெல்லாம் வால்வதி தன் மகளோடு மோட்டார்

காரில் வந்து கொண்டிருந்தான். அவர்கள் வேடிக்கைபார்த்தமாய் வெளியேசென்று இப்பொழுது திரும்பிவந்தனர். மோட்டார்கார் செல்வராஜன் வீட்டின் வழியாய்வந்தது. அந்த வீட்டைக்கண்டதும் கமலாஸனியின் மனம் பதை பதைத்தது. அங்கே புகை எழும்பியதும் தங்கமணி தோட்டத்தில் வேலை செய்து கொண்டிருந்ததும் அவளுக்கு நன்றாய்த்தெரிந்தன. ஒரு ஜன்னலில் தச்சன் வேலைசெய்து கொண்டிருந்ததையும் அவள் கண்டாள். வண்டி இருபது மைல் வேகத்தில்போய்க் கொண்டிருந்ததால் அவள் இதற்குமேல் ஒன்றையும்பார்க்க நேரமில்லை. அவைகளைப் பார்த்ததிலேயே அவள் சந்தோஷிக்கலானாள். செல்வராஜன் அந்த வீட்டிலிருந்தானென்றும் அவன் பங்களாவத்தில் சிலகாலம் தங்கியிருப்பானென்றும் அவள் அறிந்துகொண்டாள்.

ஸரஸ்வதியும் அவள் மகளும் வண்டியை விட்டிறங்கி உள்ளே வந்தபோது சுந்தரம் அங்கே உட்கார்ந்திருப்பதைக் கண்டார்கள்.

சுந்தரம் :—(ஸரஸ்வதியைநோக்கி) வந்துவிட்டீர்களா, நல்லகாலம். வண்டிகெட்டுப்போய் விட்டதோவென்று சந்தேகித்துக்கொண்டிருந்தேன்.

ஸரஸ் :—சுந்தரம்; ஏது இவ்வளவு தூரம் வந்துவிட்டாய்? என்ன விசேஷம்?

சுந் :—உங்களையும் கமலாஸனியையும் பார்த்துவிட்டுப் போகலாமென்று வந்தேன். பட்டணத்தில் பொழுதுபோகாமையால் வேடிக்கையார்த்தமாய் இங்கே வந்தேன்.

ஸரஸ் :—பட்டணத்திலா பொழுது போகவில்லை? கமலா, அவன் சொல்வதைக்கேள்! இந்தப் பாலைவனத்தில்பொழுது போகாமல் நாங்கள் அவஸ்தைப் படுகிறோம்.

சுந் :—(ஆச்சரியத்துடன்) பாலைவனமா? எனக்கு இது சுகமாகத் தோன்றுகிறது. மிகவும் நேர்த்தியாயிருக்கிறதே! கமலா, உனக்கெப்படித் தோன்றுகிறது?

கமலா :—நல்ல இடமென்று தான் தோன்றுகிறது. இங்கே எத்தனை நாளிருந்தாலும் எனக்குச் சம்மதந்தான்.

ஏதோ ஒரு சங்கதிதெரிவிக்கவேண்டுமென்று வந்திருந்த சுந்தரம் கமலாஸனி சொல்லியதை நன்றாய்க்கவனித்துக் கொண்டான். கமலாஸனியின் விஷயமாய்த் தான் சொல்ல வேண்டிய சங்கதியை எப்படித் தெரிவிப்பதென்று அவன் ஆலோசித்துக் கொண்டிருந்தான். செல்வராஜனுக்கும் கமலாஸனிக்கும் சிநேகமுண்டென்பதைத் தான் அறியாதவன்போல் பாவனைசெய்யத் தன்னாலாகுமாவென்று சிந்தித்தான். ஸரஸ்வதி கமலாஸனியோடிருக்கும்போதே தான் சொல்லவேண்டிய சங்கதியைத் தெரிவித்துவிட்டால் கமலாஸனி அதன் பிறகு சரியாய் நடந்து வருவாளென்று அவனுக்குத் தோன்றிற்று.

அவன் கமலாஸனியை ஜாடையாகப் பார்த்தான். அவள் முகம் வெளுத்திருந்தது. அவன் "கமலாஸனி அங்ஙனம் நடப்பாளென்று நான் நம்பியிருக்கமாட்டேன்." என்று எண்ணிக்கொண்டான்.

சுந் :—கமலா, நான் ஒரு சிலைவாங்கினேனே—ஞாபகமிருக்கிறதா?—ஸமுத்திர கன்னிகை — உன்னைப்போலவே இருக்கிறதே—

கமலா :—ஆம், ஞாபகமிருக்கிறது.

சுந் :—அதைச்செய்தவன்—செல்வராஜன்— இந்தப் பங்களாவினருகில் இருக்கிறானென்று கேள்வியுற்றேன்.

ஸரஸ் :—(தன்மகளைப் பார்த்துக்கொண்டே) வாஸ்தவந்தான்.

சுந் :—அவன் மிகுந்த புத்திசாலியாதலால் நான் அவனைப்பார்க்கவேண்டுமென்றிருந்தேன்—அப்படிப்பட்டவர்களிடம் நாம் நட்புக்கொள்வது யுக்தமல்லவா?—ஆகையால் மவுண்டுரோட்டிலுள்ள அவன் ஷாப்பிற்குச்சென்றேன்; அவன் இங்கே வந்திருப்பதாக ஏற்பட்டது. பிறகு விசாரிக்கப் புகுந்ததில், அவன்மிகவும் அயோக்கியனென்று தெரிந்தது ஆகையால் அவன் சகவாசம் உதவாதென்று தீர்மானித்துவிட்டேன்.

ஸரஸ் :— (பயந்தவளாய்) அப்படியா, நாம் மிகவும் ஜாக்கிரதையாயிருக்கவேண்டும். அவன் ஓரிரவு இங்கே தங்கியிருந்தான்—உனக்குத் தெரியுமா?

சுந் :—தெரியாது, எதற்காக வந்தான்?

ஸரஸ் :—தீனதயாளு ஒருவேலைக்காரனிடம் கடிதம் கொடுத்தனுப்பினார். அவன் செல்வராஜன் வீட்டண்டை வந்ததும் குதிரை இடறிவிழுந்தது. அதனால் அந்தவேலைக்காரனுக்குக் காயம்பட்டது. செல்வராஜன் அவனைத் தன் வீட்டிற்கு அழைத்துச்சென்று அவனுக்குவேண்டிய சிகிச்சைசெய்தான். அவன் வைத்திருந்த கடிதத்தைச் செல்வராஜன் எடுத்து வந்து இங்கே கொடுத்தான். அவனை அன்றிரவு இங்கே தங்கியிருக்கச் சொன்னேன். ஆனால் அவன் நடவடிக்கை எனக்குப் பிடிக்கவில்லை.

சுந் :—நீங்களிருவரும் அவனோடு சகவாசஞ்செய்ய வேண்டாம். நான் கேள்விப்பட்ட வரையில் அவன் நாடோடியென்று ஏற்படுகிறது.

ஸரஸ் :—அது மிகவும் உண்மை தான்.

இதைக்கேட்டதும் கமலாஸனி ஏதோசாக்குச் சொல்லிவிட்டு அவ்விடம் விட்டுப்போனாள். அவள் தன்னறையிலுள்ள கட்டிலின்மேல் படுத்துக்கொண்டு சுந்தரம் சொல்லியதை நினைத்துக் கண்ணீர்விட்டாள் அவள் முகத்தில் அனல் வீசியது; மார்பு படபடவென்று அடித்துக்கொண்டது;

அவளுக்கு மிக்ககோபமுண்டாயிற்று. அவள் தனக்குள் "அது உண்மையாயிராது—உண்மையாயிராது" என்றுசொல்லிக்கொண்டாள்.

அது உண்மையாயிருந்தால் அவள் வாழ்க்கை என்னவாகும்? நடந்துபோன விஷயங்களை அவளெங்ஙனம் மறப்பாள்? எவ்வளவு காலம் துக்கஸாகரத்தில் மூழ்கியிருப்பாள்? அவள் ஒரு மணிநேரம் அங்கே படுத்திருந்தாள். வருத்தம் கொஞ்சங் கொஞ்சமாகக் குறைய ஆரம்பித்தது. தான் செல்வராஜனை முதல் முதல் திருவல்லிக்கேணியில் கண்டது இப்பொழுது அவள் ஞாபகத்திற்கு வந்தது; பிறகு அவள் செல்வராஜன் வீட்டுத்தோட்டத்தில் தனியாய் உட்கார்ந்திருந்தபோது அவன் தன்னிடம் வந்து இனிமையாய்ப் பேசிய பேச்சு இப்பொழுது அவள் காதில் விழுந்தது; அவன் தீனதயாளுவின் கடிதத்தை எடுத்துக்கொண்டு வந்து நின்றது போலவே இப்பொழுது அவள் கண் முன் தோன்றினான்; இருவரும் செல்வராஜன் வீட்டில் இனிமையாய்ப் பேசிக்கொண்டிருந்ததை அவள் எண்ணினாள். செல்வராஜன் 'நான் செய்த சிலை உயிர்பெற்றெழுந்து வந்ததோ' என்று கூறியது அவள் மனதிலேயே இருந்தது.

கமலாஸனிக்கு அவன்மேல் சந்தேகமுண்டாகவில்லை. அவனது குளிர்ந்தபார்வை யோக்யனுக்கே உரியதென்றெண்ணி எது சம்பவித்தாலும் தான் அவனிடம் அன்புள்ளவளாயிருக்கவேண்டுமென்று அவள் தீர்மானித்தாள். அங்ஙனம் எண்ணியதும் அவள் மனக்கவலை ஒழிந்துவிட்டது. நித்திரைபோய் விட்டாள்.

சுந்தரம் தன் நண்பனது வேண்டுகோளின்படி கமலாஸனிக்கு எச்சரிக்கைசெய்துவிடவே தீனதயாளுவின் எண்ணம் ஈடேறிவிட்டது.

## 17. தீனதயாளு ஆனந்தக்கடலில் மூழ்கினான்.

செல்வராஜன் சென்னைக்குச்சென்று வந்த மறுநாளே தன் வேலையை ஆரம்பஞ்செய்தான். அவன் ஒரு நாற்காலியில் உட்கார்ந்துகொண்டு முன்னே எழுதிய குழந்தையின் படத்தை மறுபடியும் இன்னொரு கடிதத்தில் எழுதலானான்.

தங்கமணி அவ்வறையிலுள்ள சாமான்களைத் துடைத்துக்கொண்டிருந்தான். அவன் முகத்திலுள்ள விசனக்குறி இன்னும் நீங்கவில்லை. அவனுக்குப் புதிய துன்பம் நேரிட்டிருக்குமென்று செல்வராஜன் எண்ணலானான்; ஆனால் அவன் யாருடைய அநுதாபத்தையும் எதிர்பார்க்கவில்லையென்று

தெளிவாய் விளங்கிற்று. அவனுக்கு உதவி செய்யலாமென்று தான் அவனை ஏதாவது கேட்டபோதிலும் அவன் சரியான பதிலளிக்கமாட்டானென்பது செல்வராஜனுக்குத் தெரியும்.

தன் முழங்காலின்மேல் வைத்திருந்த படத்தைப்பார்த்துக்கொண்டே செல்வராஜன் வெகுநேரம் யோசனைசெய்துகொண்டிருந்தான்; ஏனெனில் சிலையை எம்மாதிரி செய்வதென்று அவனுக்குத் தோன்றவில்லை. அவன் முதலில் எழுதியபடத்தில் தலையும் புயங்களும் மாத்திரம் இருந்தன. இன்னும் சில கோடுகளிழுத்தால் அந்தக்குழந்தை அணிந்திருந்த ஆடையும் அது சாய்ந்துகொண்டிருந்த தலையணையும் நன்றாய் விளங்கும். வாஸ்தவத்தில் அந்தக் குழந்தை வெகு நேர்த்தியாயிருந்தது. இரண்டாவது எழுதியபடத்தைக் கண்டு செல்வராஜன் ஆச்சரியமடைந்தான்.

அவன் அருகாமையிலுள்ள மேஜையிலிருந்து சிலசாமான்களை எடுத்து அந்தப்படத்திற்கு வர்ணம் கொடுத்தான். அந்தப் படம் உயிரோடுள்ள குழந்தையைப்போலவே யிருந்தது. செல்வராஜன் அதைத் தன் வேலைக்காரனுக்குக் காண்பித்து "தங்கமணி இது எப்படி இருக்கிறது?" என்றான்.

தங்கமணி யாதும் பேசாது சற்றுநேரம் அதை உற்று நோக்கினான். செல்வராஜன் படத்தையே பார்த்துக்கொண்டிருந்ததால் தங்கமணியின் முகத்தோற்றம் அவனுக்குத் தெரியவில்லை. தங்கமணியின் முகத்தில் இருள் மூடியது; அவன் யாதும் பதில் சொல்லாதது கண்டு செல்வராஜன் அவனை நோக்கி "நன்றாயிருக்கிறதா?" என்று கேட்டான்.

தங்கமணி:—இது உங்கள் மனதில்தோன்றிய உருவமா?

செல்வ:—இல்லை, ஏன் அப்படிக் கேட்கிறாய்? இது யாரென்று உனக்குத் தெரியுமா?

தங்க:—தெரியாது—ஆனால் இது எனக்குத் தெரிந்த ஒரு குழந்தையின் உருவத்தைப் போலிருக்கிறது.

செல்வ:—இது அந்தக் குழந்தையின் படமாகவே இருக்கும். நேற்றையதினம் நுங்கம்பாக்கத்திற்குச்சென்றபோது அங்கொரு குழந்தையைக் கண்டேன், அதன் படந்தான் இது.

தங்க:—அப்படியானால் எனக்குத்தெரிந்த குழந்தையின் படந்தான் இது; குழந்தை எப்படி இருக்கிறது?

செல்வ:—சௌக்கியமாகத் தானிருக்கிறது. குள்ளன் அதன்மேல் அதிக ஆசை வைத்திருக்கிறான்.

இதைக்கேட்டதும் தங்கமணி அவ்விடம் விட்டுப்போய், முன்னே செய்துகொண்டிருந்த வேலையை மறுபடியும்செய்யத்தொடங்கினான். குழந்தையின் சங்கதியைக்கேட்டதும் அவனுக்கு மிக்கவருத்தமுண்டாயிற்று.

நுங்கம்பாக்கத்திலிருந்த குழந்தைக்கும் தன் வேலைக்

காரனுக்கும் என்ன சம்பந்தமிருக்கலாமென்று செல்வராஜன் யோசித்தான். ஆனால் அதைப்பற்றித் தங்கமணியைக்கேட்க அவனுக்கு இஷ்டமில்லை. அவன் மறுபடியும் தன் வேலையைக் கவனிக்கலாயினன். ஒரு சிலையை எந்த பாவனையில் செய்ய வேண்டுமென்பது அவனுக்கு எப்பொழுதும் ஒரு யோசனை யாக இருக்கும். சில சமயங்களில் வேலையில் ஊக்கம் உண்டா வதற்கு இரண்டு மூன்று நாள் முன்னமே அவன் வேலைசெய் வான்; பிறகு தெருவில் சென்று கொண்டிருக்கும்பொழுதா வது, இரவில் படுத்துக்கொண்டிக்கும் பொழுதாவது, தன் சிநேகர்களுடன் பேசிக்கொண்டிருக்கும் பொழுதாவது—அவ னுக்கு ஒரு எண்ணம் தோன்றும். அதுமுதல் அவன் சாதுர்ய மாகவும் விரைவாகவும் வேலைசெய்யத் தொடங்குவான். தற்போது அவனுக்கு ஊக்கம் உண்டாக வெகுகாலமாயிற்று. அவன் மனதில் அநேக படங்கள் தோன்றின; ஆனால் அவை களில் ஒன்றும் அவனுக்குத் திருப்திகரமானதாக இருக்க வில்லை. கடைசியாக, கீழே கிடந்த ஒரு சமாசாரப்பத்திரிகை யின்மேல் அவன் பார்வைசென்றது. அதில் "ஒரு ஸ்திரீ கொடுக்கக்கூடிய சிறந்த நன்கொடை குழந்தையே ஆகும்" என்று எழுதியிருந்தது. அதைக் கண்டதும் அவனுக்கு ஒரு யோசனை தோன்றியது. ஒரு தாய் குழந்தையைக் கையில் வைத்திருப்பதுபோல் சிலைசெய்தால் நன்றாயிருக்கு மென்று அவன் எண்ணினன். பத்மாவதி குழந்தையை வைத்துக்கொண்டு தீனதயாளுவினெதிரில் நின்றிருந்தபாவனை அவன் மனதில் தற்செயலாய்த் தோன்றிற்று.

அதுமுதல் செல்வராஜன் ஊக்கத்துடன் வேலைசெய்ய ஆரம்பித்தான். கமலாஸனி மறுபடியும் அங்கே வருவதற் குள் அந்த வேலையை முடித்துவிடவேண்டுமென்று அவன் ஆசையோடிருந்தான். அவள் அதைக்கண்டு களிக்கவேண்டு மென்பதே அவனது பேராவா. அவன் ஒரேசமயத்தில் தொழில் காதல் என்னும் இரண்டு எஜமாட்டிகளுக்குக் கீழ்ப்படிந்து நடந்துவந்தான். அவன் வேலைசெய்து கொண்டிருந்ததை அடிக்கடி நிறுத்திக் கமலாஸனியின் காலடிசப்தம் கேட்கிறதா வென்று உற்றுக்கேட்பான; அங்ஙனம் ஒன்று மில்லாமலிருப் பது கண்டு மறுபடியும் வேலைசெய்யத் தொடங்குவான்.

இரண்டு நாட்களில் கரடுமுரடான ஒரு பெண்சிலையைச் செய்தான். வேலைப்பாடில்லாத கைகளையும் முகமற்ற தலை யையும் பார்க்கும்போதே அந்தச்சிலை வெகு நேர்த்தியாயி ருக்குமென்று தோன்றிற்று. செல்வராஜன் தன் காதலியை ஒரு முறையாவது பார்க்கவேண்டுமென்று ஆவல்கொண் டான்; அவள் வரவில்லை; ஆனால் அவள் வராமலிருந்தது அவனுக்கு ஆச்சரியத்தை உண்டுபண்ணவில்லை. அவள் அடிக்கடி தன்னிடம் வருவது அசாத்தியமென்பது அவனுக்

குத்தெரியும்; அங்ஙனம் வருவதால் தங்கள் காதலுக்கே நாசமுண்டாகுமென்று அவன் எண்ணியிருந்தான்.

ஒருவாரம் வரையில் கமலாஸனி வராமற்போகவே செல்வராஜன் மிக்க கவலையுற்றான். சிலவேலை அநேகமாய் முடிந்துவிட்டதால் தன் காதலியைப எங்ஙனம் காண்பதென்று சிந்திக்கலாயினான். அவள் ஏன் வரவில்லை? அவள் செல்வராஜனைக் காதலித்திருக்கும் விஷயம் ஸரஸ்வதிக்குத் தெரிந்துவிட்டதோ? அவ்விஷயம் ஸரஸ்வதிக்குத் தெரிந்தால் தன் மகளை வெளியே அனுப்பமாட்டாளென்பது அவனுக்குத் தெரியும்; அவள் தன் மகளை நல்ல அந்தஸ்துள்ள கனவானுக்கே விவாகஞ்செய்து கொடுப்பாளென்பதையும் அவன் அறிந்திருந்தான்.

கமலாஸனியைக் காணும்பொருட்டு அவள் வீட்டிற்குப் போகலாமாவென்று அவன் யோசிக்கலாயினான். அப்படிச் சென்றால் ஸரஸ்வதி தன்னை வெறுப்பாளென்றும், அவள் முன்னமே ஏதேனும் சந்தேகம் கொண்டிருந்தால் அது இப்பொழுது அதிகரித்து விடுமென்றும் அவனுக்குத் தோன்றிற்று.

அவன் அதற்குமுன் வேலைசெய்ததுபோல் இப்பொழுது செய்யமுடியவில்லை. அவன் மனம் கமலாஸனியிடம் சென்றிருந்தது. கமலாஸனி தனனிடம் வராதபடி ஏதாவது அஸந்தர்ப்பமுண்டாயிருக்கலாமென்று ஒரு சமயம் நினைப்பான். மற்றொரு சமயம் அவளுக்கு ஏதேனும் கெடுதி சம்பவித்ததோ வென்றெண்ணி மனங்கலங்குவான். அவள் ஏன் வரவில்லை?

இரண்டு வாரமாயிற்று; இன்னும் கமலாஸனி வரவில்லை, சில சமயங்களில், செல்வராஜன் அவளைக் காணவேண்டுமென்ற ஆசையால் அவள் வீட்டின் புறமாகச்செல்வான்; மற்றுஞ் சில சமயங்களில் தோட்டத்தில் ஒளித்துக்கொண்டு பார்ப்பான்; இன்னுஞ் சில சமயங்களில் ரோட்டில் நின்றிருப்பான்.

ஒரு நாள் ஸரஸ்வதியின் மோட்டார்கார் ரோட்டில் சென்று கொண்டிருந்தது; செல்வராஜன் அப்போது ரோட்டில் நின்றிருந்ததால் கமலாஸனி வண்டியிலிருந்ததைக் கண்டான்; அவளும் இவனை ஜாடையாகப் பார்த்தாள். ஒரு விநாடிக்குள் வண்டி அவ்விடம் விட்டுப்போய்விட்டது. கமலாஸனியைக் கண்ட மாத்திரத்தில் செல்வராஜனுக்கு அடங்காத ஆனந்தமுண்டாயிற்று. ஏனெனில் அவளது பார்வையினால் அவள் தன்மேல் வைத்துள்ள காதல் குறையவில்லையென்று அவன் அறிந்துகொண்டான்.

தங்கமணி இரண்டு தரம் தீனதயாளுவிடஞ்சென்று ஒன்றும் நடக்கவில்லையென்று அவனிடந்தெரிவித்தான். காத

லர்களிருவரும் சந்திக்காததின் உண்மையைத்தெரிந்து கொள்வதில் தீனதயாளுமிக்க ஆவலுடையவனாயிருந்தான்.

தீனதயாளுவின் விஷயங்கள் யாவும் திருப்திகரமாகவேயிருந்தன. சுந்தரம் தான கூறியபடி கமலாஸனிக்கு எச்சரிக்கைசெய்தானென்பதைக் கேள்வியுற்று அவன் மகிழ்ச்சியடைந்தான். கமலாஸனி செல்வராஜன் வீட்டிற்குப்போவது தீனதயாளுவால் தடுக்கப்பட்டது. தான் எடுத்துக்கொண்ட காரியத்திற்கு இடையூறாக ஏற்பட்ட செல்வராஜனைக் கூடிய சீக்கிரத்தில் ஒழித்துவிடலாமென்று தீனதயாளு நம்பியிருந்தான்.

தீனதயாளுவின் கம்பெனி நல்ல ஸ்திதியிலிருப்பது போலவே காணப்பட்டது. கமலாஸனியின் செல்வமும், செம்பு வியாபாரத்தில் கிடைக்கும் லாபமும் தன்னைக்கரையேற்றி விடுமென்று தீனதயாளு தைரியமாயிருந்தான். செல்வராஜனை ஒழித்துவிட்டால் கமலாஸனியைச் சுலபமாய்ப் பெறலாமென்று அவன் எண்ணினான். தான் செய்த தந்திரம் தனக்கு அனுகூலமாயிருக்குமென்றெண்ணி, தீனதயாளு ஆனந்தக்கடலில் மூழ்கினான்.

# 18. கெடுவான் கேடு நினைப்பான்.

செல்வராஜன் அன்று கமலாஸனியை மோட்டார்காரில் கண்டது அவன் மனக்கவலையை அதிகரித்தது. தாங்களிருவரும் இரகசியமாய்க் கடிதமெழுதிக்கொள்ள என்ன ஏற்பாடுசெய்யலாமென்று ஆலோசிக்கலாயினான். ஆனால் இரண்டு விஷயங்கள் அவனுக்குச் சங்கடத்தை உண்டு பண்ணின. ஸரஸ்வதி முன்னமே தங்களிடம் சந்தேகங்கொண்டிருந்தால், இப்பொழுது கமலாஸனிக்குத் தான் தபால்மூலமாய் அனுப்புங்கடிதத்தால் அது அதிகரித்து விடுமென்று பயந்தான். அப்படிச் செய்வதினால் தாங்களிருவரும் எப்பொழுதும் சந்திக்கமுடியாதென்றும் அவன் எண்ணினான். முன்னமே தங்களுக்குள் ஏற்பாடுசெய்து கொள்ளாமல் கடிதமெழுதுவது பிசகென்று அவனுக்குத் தோன்றிற்று.

இரண்டாவது, அவன் தான் முதலில் கடிதமெழுதுவது சரியல்லவென்று நினைத்தான்; கமலாஸனியை உலகத்தார் இகழும் நிலைமையில் வைக்க அவனுக்கு இஷ்டமில்லை. எனினும், கமலாஸனியின் சங்கதியைத்தெரிந்துகொள்ளவேண்டுமென்று அவன் மிக்க ஆவலோடிருந்தான்.

தங்கமணி தோட்டத்திலும் ரோட்டிலும் திரிந்துகொண்டிருப்பான். கமலாஸனி அவ்விடங்களில் வருகிறாளாவென்று தெரிந்துகொள்வதற்காகவே செல்வராஜன் அவனை அவ்விடங்களில் இருக்கச்செய்தான்; செல்வராஜனே அவ்விடங்களில்

காத்துக்கொண்டிருப்பான்; தான் அவ்விடங்களில் திரிந்து கொண்டிருப்பதையாரேனும் கண்டால் தன்மேல் சந்தேகங் கொள்வார்களென்று அவன் பயந்தான்.

தங்கமணி இந்த வேலையை ஒப்புக்கொண்ட மூன்றாவது நாள் ஸரஸ்வதியின் மோட்டார்கார் ரோட்டில்சென்றுகொண்டிருந்தது. அதைக் கண்டதும் தங்கமணி வண்டியிலிருந்தவர்கள் தன்னைப் பார்க்கும்படி ஒரு புறமாய் நின்றிருந்தான்; வண்டி அவன் நின்றிருந்த இடத்தண்டை வந்ததும், கமலாஸனி ஒரு கடிதத்தைக் கீழே எறிந்தாள். வண்டியில் ஸரஸ்வதியும் அவள் மகளும் உட்கார்ந்திருந்ததை அவன்கண்டான்; ஆனால் ஸரஸ்வதி அவனைக் கவனிக்கவில்லை; அவன்போலிருப்பவர்களை அவள் லக்ஷியஞ்செய்வது வழக்கமில்லையன்றோ?

தங்கமணி தன் எஜமானனிடம் வந்தபோது கடிதத்தைப் பற்றி அவனிடம் ஒன்றுந்தெரிவிக்கவில்லை. அவன் அன்றிரவு தீனதயாளுவினிடம் சென்றான். ஜன்னலில் பச்சைவெளிச்சம் தெரிந்தது; சற்றுநேரத்திற்கெல்லாம் கமலாஸனி எழுதிய கடிதம் தீனதயாளுவின் கையிலிருந்தது.

தீனதயாளு தங்கமணியை வேறோரறைக்கு அனுப்பிவிட்டான். அவன் சென்றதும் ஒரு மணியை அடித்தான். உடனே ஒரு வேலைக்காரன் அவனெதிரில் வந்து நின்றான். சிறிது வெந்நீரெடுத்து வரும்படி தீனதயாளு அவனுக்குக் கட்டளையிட அங்ஙனமே கொண்டுவரப்பட்டது.

வேலைக்காரன் அவ்வறையை விட்டுப்போனதும் தீனதயாளு கடிதத்தையெடுத்து, ஒட்டியிருந்தபுறத்தைத் தண்ணீரினின்றும் எழும்பும் நீராவியில் பிடித்துக்கொண்டிருந்தான்.

சற்றுநேரத்திற்கெல்லாம் தீனதயாளு கடிதத்தை உறையினின்றுமெடுத்துப்படித்துக் கொண்டிருந்தான். அவன் அதை ஒரு முறைக்கு இருமுறை படித்துவிட்டு, மேஜையிலிருந்த ஒருமெல்லிய காகிதத்தை எடுத்து அந்தக்கடிதத்தின் மேல்வைத்துச் சிலவாக்கியங்களையும் கையெழுத்தையும் எழுதிக்கொண்டான். எழுதிமுடிந்ததும் அவன் தனக்குள் "இதுவும் ஒரு காரியத்திற்கு உபயோகப்படும்" என்று சொல்லிக் கொண்டான். தன் வேலை முடிந்ததும், கடிதத்தைத் திரும்பவும் உறையில்வைத்து ஒட்டித் தங்கமணியிடங் கொடுத்து விட்டான்.

மறுநாள் சாயங்காலம், தங்கமணி அந்தக் கடிதத்தைச் செல்வராஜனிடங் கொடுத்தான். அவன் வழக்கம்போல அன்று மாலை வரையில் அலைந்து திரிந்துவிட்டு வீட்டிற்கு வந்ததும், அப்பொழுது தான் கமலாஸனி அந்தக்கடிதத்தைத்தன்னிடங் கொடுத்தாளென்று சொல்லி அதைத் தன் எஜமானனிடங் கொடுத்தான்.

தங்கமணி கடிதத்தைச் சட்டைப்பையிலிருந்து எடுத்த

போது செல்வராஜன் சந்தோஷமுற்றவனாய் "கடிதமா? உனக்கு எப்படிக்கிடைத்தது?" என்று கேட்டான்.

தங்க:—தாயாரும் மகளும் வண்டியில்போய்க்கொண்டிருந்தனர். வண்டி நான் நின்றிருந்த இடத்தை அணுகிய தும் சின்னம்மாள் அதைக்கீழே எறிந்தார்கள்.

அதைக்கேட்டதும் செல்வராஜன் மிகவும் சந்தோஷமுற்றான். கமலாஸனி இம்மாதிரி செய்வாளென்று அவன் முன்னமே அறிந்திருந்தான். அதற்காகவே அவன் தன்வேலைக்காரனை வெளியே அனுப்பிக்கொண்டிருந்தான் அவன் "தங்கமணி, நீயே எனக்கொரு பொக்கிஷம்! இப்பொழுது வீட்டைவிட்டுப் போகாதே. எதற்காவது உன்னை நான் கூப்பிடும்படி நேரிடும்" என்றான். அதைக்கேட்டதும் தங்கமணி அவ்வறையைவிட்டுச்சென்று வெளியே உட்கார்ந்தான்.

தங்கமணி அவ்விடம் விட்டுப்போனதும் செல்வராஜன் கடிதத்தைப்பிரித்துப் பார்க்கலானான்.

அதில் "என் பிரியமுள்ள காதலருக்கு மிகவும் வணக்கத்துடன் எழுதியது:—எனக்கு என்ன நேரிட்டதோவென்று நீங்கள் கலங்குவீர்களென்று நினைக்கிறேன். தங்கமணி எப்பொழுதும் வெளியே திரிந்துகொண்டிருப்பதனாலேயே நீங்கள் மிகவுங்கவலைப்படுகிறீர்களென்று ஏற்படுகிறது. அடுத்தமுறை நான் அவனைக் காணும்போது இந்தக்கடிதத்தை அவனிருக்குமிடத்தில் எறியப்போகிறேன். —அது உங்களுக்கு வந்து சேருமென்றே நம்பியிருக்கிறேன். நான் உங்களைப்பார்க்க வரமுடியாது. என் தாயார் ஏதோ சந்தேகங்கொண்டு என்னை வெளியே போகவிடுவதில்லை. நான் எப்பொழுதும்போல் சௌக்கியமாயிருக்கவில்லை—உங்களை ஒருமுறை பார்த்தால் எல்லாம் சரியாய்விடும். நீங்களும் என்னைப்பார்க்க முயலவேண்டாம்—ஏதாவது கெடுதி நேரிடும். உங்களிடமிருந்து ஏதாவது கிடைத்தால் அதைப் பார்த்துக்கொண்டும் படித்துக்கொண்டும் இருக்கலாமென்று எனக்குத் தோன்றுகிறது. நான் பிரதினமும் முன்புறத்தறையின் ஜன்னலில் உட்கார்ந்து கொண்டிருக்கிறேன். ஏதாவது சங்கதி தெரியப்படுத்தவேண்டுமானால் தங்கமணி தோட்டத்தின் வழியாய் அங்கே வரலாம். யாராவது அவனைக்கண்டாலும் அவன் தோட்டத்தில் ஒளித்துக்கொள்ளலாம். அவன் வரும்போது நான் ஜன்னலண்டையிராமற்போனால் அவனை மறுநாள் வரச்சொல்லுங்கள். நான் எப்பொழுதும் ஒரே இடத்தில் இருக்கமுடியாதென்பது உங்களுக்குத்தெரிந்தவிஷயமே. எவ்வளவு காலம் உங்களைப் பாராமலிருந்தாலும் நான் கொண்ட காதல் குறையாதென்பதை நிச்சயமாய் நம்புங்கள்.

தங்கள் அன்புள்ள காதலி,

"க" என்று எழுதியிருந்தது.

அந்தக்கடிதம் விலாஸமும் கையெழுத்துமின்றி ஸங்கேதமாய் எழுதப்பட்டிருந்தது. அதைக்கண்டதும் செல்வராஜன், பாலைவனத்தில் தண்ணீரைக் கண்டவன்போல் களிப்புற்றான். அவன் அதைப் பலமுறை படித்தான்; கண்களிலொற்றிக்

கொண்டான்; அதற்கு முத்தந்தந்தான். அவனுக்கு என்றுமில்லாத சந்தோஷமுண்டாயிற்று. "உங்களை ஒரு முறை பார்த்தால் எல்லாம் சரியாய்விடும்" என்று கமலாமணி எழுதியது அவனுக்குக் களிப்பை உண்டுபண்ணியது. அவள் தேகசௌக்கியத்தைக் கெடுத்துக் கொள்வாளோவென்று அவன் க்லேசமுற்றான். "உங்களிடமிருந்து ஏதாவது கிடைத்தால் அதைப்பார்த்துக் கொண்டும் படித்துக் கொண்டுமிருக்கலாம்" என்று அவள் எழுதியதை நினைத்து அவன் ஆனந்தக்கடலில் மூழ்கினான். அவனுக்கும் அப்படித் தோன்றிற்று; அவளது திவ்விய கரத்தால் ஸ்பரிசிக்கப்பட்ட ஏதேனுமொரு பொருள் தன்னிடமிருந்தால் ஆறுதலடையலாமென்று எண்ணியிருந்தான். அவன் ஏதாவது வேலைசெய்து கொண்டிருந்தால் சீக்கிரமே பொழுதுபோய் விடும் — அவளோ? தன் காதலனைப்பற்றிச் சிந்தித்துக் கொண்டேயிருப்பாளே!

அவள் வெகுகாலம் காத்திருக்கக்கூடாதென்று அவன் எண்ணினான். அவன் மேஜையிலிருந்து ஒரு கடுதாசியை எடுத்து அதில் எழுத ஆரம்பித்தான். அந்தக் கடிதத்தை எழுதிமுடிக்க வெகுநேரமாயிற்று.

மறுநாள் காலையில் அவன் தங்கமணியை அழைத்து அவனிடஞ் சில சங்கதிகள்சொல்லிக் கடிதத்தையுங்கொடுத்தான். பிறகு அவன் வேலைசெய்ய ஆரம்பித்தான். தங்கமணி எப்பொழுது திரும்பி வருவானென்று எதிர்பார்த்த வண்ணம் அவன் வேலைசெய்து கொண்டிருந்தான்.

அன்று பகல் 12-மணிக்குத் தங்கமணி திரும்பிவந்தான். அவன் சென்றபோது ஜன்னலில் கமலாமணி உட்கார்ந்திருந்ததாகவும் கடிதத்தை அவளிடங்கொடுத்துவிட்டதாகவும் தன் எஜமானனிடம் சொன்னான். தங்கமணியின் சட்டைப்பையிலேயே அக்கடிதம் நித்திரைசெய்து கொண்டிருந்ததென்று செல்வராஜனுக்குத் தெரிந்திருந்தால் அவன் அதை எதற்காகவைத்துக் கொண்டிருந்தானென்பது அவனுக்கு நன்கு விளங்கியிருக்கும்.

ஏற்பாட்டின்படி தங்கமணி அவ்விரவு தீனதயாளு வீடுசென்றான். தங்கமணியை முன்போலவே வேறோரறைக்கு அனுப்பிவிட்டு, தீனதயாளு கடிதத்தைப் படிக்கலாயினான். அதைப் படிக்கும்போது அவன் புன்னகை கொண்டான்; முகத்தில் அனல் வீசியது. அவன் தனக்குள் "இது நல்ல காதல்! நான் அவளுக்குத் தகுந்த காதலனல்லவோ!" என்று முணுமுணுத்தான்.

அவன் ஒரு காகிதத்தையெடுத்து அக்கடிதத்திலிருந்த விஷயங்களை அதில் எழுத ஆரம்பித்தான். அதிலிருந்த கையெழுத்துக்கும் அவன் எழுதியதற்கும் வித்தியாஸமிருந்த

தான் தானெழுதியதைக் கிழித்தெறிந்தான். கடைசியாக அவன் அதைப்போலவே ஒரு கடிதமெழுதிவிட்டான். செல்வ ராஜன் எழுதிய கடிதத்திற்கும் அதற்கும் பேதமில்லாமலி ருந்தது. கையெழுத்தும் அதேமாதிரி இருந்தது.

அந்த வேலை முடிந்ததும் அவன் செல்வராஜன் எழுதிய கடிதத்தை எடுத்து மறுபடியும் படிக்க ஆரம்பித்தான். பிறகு அவன் அதேமாதிரி இன்னொரு கடிதமெழுதினான். அதில் சில விஷயங்களைத்தானே கற்பனைசெய்து எழுதிவிட்டான். அந்தக் கடிதமெழுதியானதும் செல்வராஜன் எழுதிய கடிதத் தைக்கிழித்துக் கொளுத்திவிட்டான்.

சற்றுநேரத்திற்கெல்லாம் இரண்டு கடிதங்கள் மேஜை யின்மேலிருந்தன—ஒன்று கமலாஸனிக்கும் மற்றொன்று ஒரு வாடகை வண்டிக்காரனுக்கும். உடனே தினதயாளு தங்கமணி யை விளித்து அவளிடம் இரண்டு கடிதங்களையும் கொடுத்த னுப்பினான்.

கமலாஸனியையும் செல்வராஜனையும் வஞ்சித்துக்கெடுக்க வேண்டுமென்று எண்ணியே செல்வராஜன் எழுதியகடிதத் தைக்கிழித்துவிட்டு வேறொரு கடிதமெழுதி யனுப்பினான். கமலாஸனி அதைப்படிக்கும்போது அதில் எழுதியுள்ள சங் கதி நமக்கு விளங்குவதாகும். கெடுவான் கேடு நினைப்பான் என்பதை நினையாமல் தினதயாளு இவ்விதஞ்செய்யலானான்.

## 19. கைக்கெட்டியது வாய்க்கெட்டா மற்போகாது.

கமலாஸனி அன்று தங்கமணியிடம் கடிதத்தையெறிந்து விட்டு வீட்டிற்கு வந்த பிறகு தோட்டத்தைப் பார்த்தவண் ணம் ஓரறையின் ஜன்னலில் உட்கார்ந்திருந்தாள். ஆனால் தோட்டத்தின் வழியாய் ஒருவரும் வராததால் அவள் காத்தி ருந்தது வீணேயாயிற்று. அவள் எதிர்பார்த்திருந்தது நிறை வேறவில்லை; ஆனால் அவள் தைரியத்தை இழந்தாளல்லள். செல்வராஜன் உடனே பதிலெழுதமுடியாதபடி அநேக இடை யூறுகள் உண்டாயிருக்கலாமென்று எண்ணியவளாய் மறுநா ளும் அங்ஙனமே காத்திருக்கவேண்டுமென்று தீர்மானிக்கலா யினாள். காதலனுடைய பதிலை எதிர்பார்த்தவளாய்க் காத்துக் கொண்டிருந்தது அவளுக்கு முன்போல் அவ்வளவு மனோ வியாகுலத்தை உண்டுபண்ணவில்லை. முன்னமே பதிலெழுதி விட்டானென்றும் அது உடனே தன்னிடஞ்சேர்த்துவிட்ட தென்று தன் காதலன் நம்பியிருக்கிறானென்றும் கமலாஸனி கனவிலும் நினைக்கவில்லை. தங்கமணியின் தந்திரம் அவளுக்கு எங்ஙனம் தெரியும்?

மறுநாள் காலையில் தான் கடிதத்தில் குறிப்பிட்டிருந்த நேரத்திற்கு முன்னமே ஜன்னலில் உட்கார்ந்திருந்தபொழுது தங்கமணி மெதுவாகச் செடிகளை நீக்கிக்கொண்டு தன்னை நோக்கி வருவதைக் கண்டதும் கமலாஸனி மிக்க களிப்புற்றனள். தங்கமணி தன்னை யாரும் பார்க்கக்கூடாதபடி வெகு சாதுர்யமாய்ப் பதுங்கிப் பதுங்கிவந்ததைக் காணவே கமலாஸனி அவன் சாமர்த்தியத்தை வியந்தனள். அவன் ஓரிடத்தில் மறைவாக நின்று வீட்டின் ஜன்னல்களை ஒவ்வொன்றாய்க் கவனித்துப்பார்த்தான். அவன் வந்ததையறிந்த கமலாஸனி தானுட்கார்ந்திருந்த பலகணியின் திரைச்சீலையை விலக்கிவிட்டு வெளியிலிருப்பவனுக்குத் தன்னுருவம் நன்றாய்த்தெரியும்படி நின்றாள். அவளைப் பார்த்ததும் தங்கமணி இருந்த இடத்திலிருந்தே தனது வலது கையை மேலெழுப்பிச் சைகைசெய்தான். கமலாஸனியும் தானவனைக் கண்டதற்கு அடையாளமாக அங்ஙனமே சைகைசெய்தனள்.

பிறகு கமலாஸனி அவ்விடத்தைவிட்டு உள்ளே கொஞ்சதூரஞ்சென்று தங்கமணி என்ன செய்கிறானென்று கவனிக்கலாயினாள். அவன் வெகு ஜாக்கிரதையுடன் செடிகளினிடையிற்புகுந்து கொஞ்சதூரம் வந்து கீழே கிடந்த ஒரு மரக்கிளையைத்தூக்கி அதன் கீழ் எதையோ வைத்து விட்டு மறுபடியும் ஒளித்துக்கொண்டான். அதைக்கண்ட கமலாஸனி தான் அதை அறிந்துகொண்டதாக ஜாடை காட்டிவிட்டுக் கீழே யிறங்கிச்சென்று தோட்டத்தில் புகுந்து தங்கமணிவைத்த கடிதத்தை எடுத்துக்கொண்டு மீண்டும் தன் அறைக்குச்சென்றனள். அப்பொழுது அவளுக்கு உண்டான மகிழ்ச்சியை யார்தான் மட்டிட்டுச்சொல்லக் கூடும்!

அந்தக் கடிதத்தில்,

"என் கண்மணி! உன் கடிதத்தைப்பார்த்த மாத்திரத்தில் எனக்கு எவ்வளவு சந்தோஷமுண்டாயிற்றென்று கூற நான் சக்தியற்றவனாயிருக்கிறேன். உன்னைப்போலவே, நானும் உன்னை ஒரு முறையாவது பார்க்க [illegible] மென்று—நீ வெளியே வராதபடி உன் தாயார் திட்டஞ்செய்திருப்பார்களென்று—நான் முன்னமே அனுமானித்திருந்தேன். என் நிமித்தம் நீ [illegible] 10 [illegible]

இடம். அங்கே நம்மை ஒருவரும் பார்க்கமாட்டார்கள். நான் உன்னை வந்து பார்ப்பது கூடாதாகையால் உன்னைச் சிரமப்படுத்தவேண்டியவனா யிருக்கிறேன். நாளைய இரவு உனக்காகக் காத்துக்கொண்டிருப்பேன். நீ எனக்காகச்செய்யுங் காரியம் ஆபத்தானதென்றாலும், நீ என்மேற்கொண் டுள்ள காதல் அதை ஒரு பொருட்டாக மதியாது.

உன் பிரியமுள்ள,

"சே என்று எழுதியிருந்தது".

இக்கடிதத்தின் முற்பாகம் செல்வராஜன் எழுதியபடியே யிருந்தது; பிறகு எழுதியிருப்பதெல்லாம் தீனதயாளுவின் சொந்தக்கற்பனை ஆகும்.

கமலாஸனி அதைப் படித்ததும் ஸ்தம்பித்து நின்றுவிட் டாள். தன் மித்திரனுக்கு என்ன நேரிட்டிருக்குமோவென்று கிலேசமுற்றதோடு தான் எங்ஙனம் மறுநாளிரவு அவனிடஞ் செல்வதென்று பிரமிக்கலானாள். ஆயினும் தலைவலியென்று பாசாங்குசெய்துவிட்டு முன்னதாகவே படுக்கையறைக்குச் சென்று விடுவது நலமென்று அவளுக்குத் தோன்றிற்று. அங்ஙனம் செய்வாளாயின் அவள் ஒருவர் கண்ணிலும் அகப் படாமல் செல்வராஜனிடம் சென்றுவிடலாமென்று எண்ணி னாள். இவ்விதமாக யோசனைசெய்து முடித்ததும் அவளுக் குப்பெருமகிழ்ச்சி யுண்டாயிற்று. அவள் எப்படியாவது போய்த்தீரவேண்டுமென்று உறுதியாய்த் தீர்மானித்துவிட்ட னள். ஒருமுறை செல்வராஜன் "நீ எந்தவேளையில் எதைச் செய்யச்சொன்னாலும் செய்யச்சித்தமாயிருக்கிறேன்" என்று கூறியது இப்பொழுது அவள் ஞாபகத்திற்கு வந்தது. ஆகவே அவள் அவன் என்ன செய்யச்சொன்னாலும் செய்துமுடிப்பது தன் கடமையென்று தீர்மானிக்கலாயினாள். தன்னையும் அவ னையும் பாதிக்கக்கூடிய துன்பமொன்று நேரிட்டிருப்பதாகக் கடிதத்தில் எழுதப்பட்டிருந்தது அவள் மனதை வருத்தத் தொடங்கிற்று. அக்கடிதத்தைக் கண்டதனாலுண்டான சந் தோஷத்தை அச்செய்தி குறைத்துவிட்டது. அவள் முகத்தி லிருந்த புன்னகை ஓடி ஒளித்துக்கொள்ளவும் அங்கு விசனம் குடிகொண்டது.

அவள் கடிதத்தைத் தன் ஆடைக்குள் பத்திரமாய்வைத் துக்கொண்டு, தன் தாயாருடன் வார்த்தையாடிச் சற்றுநேரம் பொழுதுபோக்கலாமென்றெண்ணியவளாய் மெத்தையை விட்டுக்கீழேயிறங்கி ஸரஸ்வதியிருந்த இடத்தையடைந்தாள்.

நாம் முன்னே கூறியதுபோலவே, தங்கமணி கடிதத்தை மரக்கிளையின் கீழ்வைத்துவிட்டு ஓரிடஞ்சென்று நின்றுகொண்டு கமலாஸனி அதை எடுத்துக்கொண்டு போவ தைப்பார்த்தபின்னர் மெதுவாய் அவ்விடம்விட்டுப் பெயர்ந் தான். அவன் தன் எஜமானனிடஞ்சென்றதும் செல்வராஜன்

அவனைநோக்கி எப்பொழுதும்போல் "ஏதாவது விசேஷமுண்டா?" என்று ஜாடையாய்க்கேட்டான். தங்கமணி தலையை யசைத்துக்கொண்டே தான் கமலாஸனியைக் காணவில்லையென்று பதில்சொன்னான். அவன் மோட்டார்காரரையாவது கண்டானாவென்று செல்வராஜன் கேட்டதற்கு மோட்டார் ஓட்டுகிறவனைத் தான் வழியிற்கண்டு பேசியதில் அவன் சென்னைக்குப்போவதாக ஏற்பட்டதென்றும் ஆகவே ஸரஸ்வதியும் அவள் மகளும் எங்கும் வெளியே செல்லமாட்டார்களென்று தான் நினைப்பதாகவும் மறுமொழி கூறினான்.

செல்வராஜன் செய்துகொண்டிருந்த ஓர் சிலையை யாரோ வாங்கிக்கொண்டுபோய்விட்டார்கள். ஆதலால் அவனுக்குப் பொழுதுபோவது மிகவுங்கஷ்டமாகத் தோன்றியது. அவன் கமலாஸனியைப்பற்றியும் தாங்கள் சந்திக்கமுடியாமல் இடையூறு சம்பவித்ததைப்பற்றியும் எப்பொழுதும் எண்ணிக்கொண்டிருந்தானாதலால் அவன் மனம் புதியவேலைமேல் நாடவில்லை. அவன் ஸரஸ்வதிக்கு அதிருப்தியுண்டாகாதபடி தான் கமலாஸனியை மணம்புரிந்துகொள்ளப் போதுமான சாதனங்களைக் கூடியசீக்கிரத்தில் சேகரித்துக்கொள்ளவேண்டுமென்று யோசிக்கலாயினான். தற்போதிருக்கும் அந்தஸ்தோடு தன் கமலாஸனியை விவாகம்செய்துகொள்ளவேண்டுமென்று தெரிவித்தால் உலகம் நகைக்குமென்று அவன் எண்ணலாயினான். திரண்ட செல்வமுள்ள ஸரஸ்வதியின் மகளைப்பிச்சைக்காரனையொத்த செல்வராஜன் விவாகஞ்செய்துகொள்வது யாருக்குத் தான் சரியாகத்தோன்றும்?

அன்றிரவு தங்கமணி தீனதயாளு குடியிருந்த பங்களாவையணுகி ஜன்னலின் கதவைத் தட்டியவுடன் தீனதயாளு உடனே கதவைத்திறந்து அவனை உள்ளே வரவழைத்துக்கொண்டான்.

தீன:—என்ன சங்கதி?

தங்க:—அவள் கடிதத்தை எடுத்துக்கொண்டாள்.

தீன:—சரி, இன்னொரு கடிதத்தை வண்டிக்கார முனுசாமியிடம் கொடுத்துவிட்டாயா?

தங்க:—ஆஹா, கொடுத்துவிட்டேன்.

தீன:—மெயிலுக்குப் போகவேண்டுமென்று அவனிடந் தெரிவித்தாயா?

தங்க:—ஆமாம்.

தீன:—நல்லது, நீ என்ன செய்யவேண்டும் தெரியுமா? மிகவும் ஜாக்கிரதையாயிருக்கவேண்டும். நீ எப்பொழுதும் கோபமுள்ளவனாகத் தானிருக்கிறாய்; ஆகையால் இந்த வேலைக்கு நீ தான் லாயக்கானவன். உன் குணமாற்றிக் கொள்ளவேண்டும்—முடியுமா?

தங்க:—அப்படியே செய்கிறேன். இந்தவேலை முடிந்த

தும் நான் போய்விடலாமல்லவா? பிறகு நான் உங்களுக்குத் தேவையில்லையே?

தின:—ஆஹா, நீ சுகமாய்ப்போகலாம். நான் முன்னே சொல்லியதுபோலவே வெறுங்கையனாய்ப் போகமாட்டாய்.

தினதயாளு தான் தங்கமணிக்குக் கொடுக்கும் பணம் ஒருவாரம் சாராயத்திற்குப் போதுமானதாயிருக்குமென்று எண்ணிக்கொண்டான். தங்கமணி தன்னைவிட்டகன்றதும் அவன் அறையில் இங்குமங்கும் நடந்துகொண்டே ஏதோ சிந்திக்கலாயினான். இருபத்து நான்கு மணிநேரம் எப்பொழுது தொலையப்போகிறதென்று அவன் ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டிருந்தான். இப்பொழுது தான் செய்துள்ள யுக்தி வீண்போகாதென்று அவன் நிச்சயமாய் நம்பியிருந்தான். கமலாஸனி தன் வலையிற்சிக்கி விடுவாள் என்று அவன் உறுதியாய் எண்ணியிருந்தான்.

அவன் சாய்ந்த தலையுடனும் நெரித்தபுருவங்களுடனும் தான் செய்துள்ள ஏற்பாடு மறுநாளிரவு எங்ஙனம் முடியுமென்று யோசித்துக்கொண்டே அறையில் உலாவிக்கொண்டிருந்தான். அவன் சற்றுநேரத்திற்கொருமுறை தொடர்பற்றதாயும் அர்த்தமில்லாததுமான சிலசொற்களைச்சொல்லி முணுமுணுத்துக்கொண்டிருந்தான்.

"நம்முடையகுரலை எழுப்பவேண்டும் — கேட்டவுடன் அவன் வெளியே வருவான்—வராவிட்டாலும் பாதகமில்லை—ஆனால் அது நிச்சயம்" என்று பலவாறாகப்பிதற்றினான். அதிலிருந்து அவனெண்ணங்கள் இனி நிகழப்போகும் சம்பவங்களில் சென்றன. இப்பொழுது தான் செய்துள்ள யுக்தியால் கமலாஸனி தன் வசத்திற் சிக்குவாளென்றும், அங்ஙனம் நிகழ்ந்தால் அவளது செல்வமும் அவளுடன் தன்னைச்சேருமென்றும், அப்படிச்சேர்ந்தால் தன் கம்பெனி தலையெடுத்துவிடுமென்றும் எண்ணலாயினான். இவ்வாறாக யோசித்து முடித்து பிறகு •சைக்கேட்டுவேது வாய்க்கேட்டாமற்போகாது என்று நினைத்துத் தைரியத்துடனிருந்தான்.

## 20. எதிர்பார்த்தவாறே நிகழ்ந்தது.

கமலாஸனிக்குக் கடிதம் வந்துசேர்ந்தது முதல் புறப்படவேண்டுமென்றிருந்த நேரம்வரையில் பொழுது மிகவும் தாம்ஸமாய்ச்சென்று கொண்டிருந்தது. மறுநாள் பகல்முழுவதும் தன்னை உற்சாகப்படுத்திக்கொள்ளுமாறு அவள் இங்குமங்கும் உலாவிக்கொண்டும், சிலநேரம் ஏதேனுமொரு புஸ்தகத்தைப்படித்துக்கொண்டும் மற்றுஞ்சிலநேரம் தையல்வேலை செய்துகொண்டும் இன்னுஞ் சிலநேரம் புதியபாட்டுக் களைப் பாடிக்கொண்டு மிருந்தாள். ஆனால் ஒன்றும் அவளுக்குச்

சந்தோஷத்தை உண்டுபண்ணவில்லை. அவள் உட்கார்ந்தவண்ணம் தன் கையிலணிந்து கொண்டிருந்த பொன் கெடியாரத்தை அடிக்கடிபார்த்து மணி விரைவாகச் செல்லவில்லையேயென்று வருத்தப்பட்டுக் கொண்டிருந்தாள்.

செல்வராஜனும் அங்ஙனமே அமைதியற்றவனாயிருந்தான். தங்கமணி வழக்கம்போல் அன்று பகல் வரையிலும் அலைந்து திரிந்துவிட்டுத் தன் எஜமானனிடந்திரும்பி வந்து கமலாவனியைத்தானெங்கும் காணவில்லையென்றும் வான்மதியின் மோட்டார்காரும் எங்கும் வெளியேசெல்லவில்லையென்றும் தெரிவித்தான். மோட்டார்காரைப்பற்றி அவன் கூறியது முற்றும் உண்மையே. கமலாவனி எங்கேனும் வெளியே சென்றுவிட்டால் தன் தந்திரம் பலியாதென்று உணர்ந்த நீலதயாளு வான்மதியின் மோட்டார்கார் எங்கேயாவது செல்லுகிறதாவென்று ஜாக்கிரதையாய்ப் பார்த்துவரும்படி தங்கமணிக்குக் கட்டளையிட்டிருந்தான். அப்படிக்கமலாவனி தன் தாயாருடன் வெளியேசெல்ல நேரிட்டால் அவள் தங்கமணியிடம் ஒரு கடிதத்தை எறியலாமென்றெண்ணி, நீலதயாளு அப்படிக்கடிதம் கிடைக்குமானால் அதைத் தாமதமில்லாமல் தன்னிடங்கொண்டு வரும்படி தெரிவித்திருந்தான்.

கமலாவனியை எங்குங்காணவில்லையென்று தங்கமணி கூறியது செல்வராஜனுக்கு மிக்க விசனத்தை உண்டுபண்ணியது. அன்று பகல் முழுவதும் மழைபெய்துகொண்டிருந்ததாலும் செல்வராஜனுக்கு வேலையின்மேல் மனம் நாடவில்லையாதலாலும் யாதும்செய்யாமல் சோம்பேறித்தனமாய்க்காலம் போக்கினான்.

அன்று மாலை ஆறுமணியானதும் மழைநிற்க ஆரம்பித்தது. கரியமேகங்களால் இருளடைந்திருந்த ஆகாயம்வெட்ட வெளிச்சமாய்க் காணப்பட்டது; இருள் வந்ததும் எண்ணிலாத நக்ஷத்திரங்கள் ஆகாயத்தை அலங்கரிக்கத்தொடங்கின; ஆகவே அன்றிரவு பகலைப்போலிராமல் மனதிற்கு இன்பம் தரத்தக்கதாக இருந்தது. செல்வராஜன் அன்று பகல் முழுவதும் வீட்டிலேயே யிருந்தானாதலால் சாயங்காலமானதும் எங்கேயாவது நல்லகாற்றில் உலாவவேண்டுமென்று எண்ணினான். தேகசௌக்கியத்திற்காக மாத்திரம் அவன் வெளியே செல்லவேண்டுமென்று எண்ணினானல்லன்; கமலாவனியை அணுகவேண்டுமென்றும் அவன் ஆவல்கொண்டிருந்தான். அவன் தங்கமணியை அழைத்துத் தன்னுடைய கம்பளி உடைகளையும் தடியையும் எடுத்து வருமாறு கட்டளையிட்டான்.

தங்க:—(திடுக்கிட்டு) வெளியேசெல்லப் போகிறீர்களா என்ன?

செல்வ:—ஆம், போகவேண்டும். உடைகளை எடுத்து

வந்தாயா?

தங்க :—குளிரில் வெளியே போகிறீர்களோ?

செல்வ ;—எப்படியிருந்தாலும் போய்த்தான் தீரவேண்டும். எனக்காக நீ இங்கே காத்துக்கொண்டிருக்கவேண்டாம். வேண்டுமானால் நீ எங்கேயாவது போகலாம்.

தங்கமணி யாதும் பேசாமல் செல்வராஜன் வேண்டியவற்றை எடுத்து வருவதற்காகச்சென்றான். அவன் சென்றதும் 'இவன் மிகவும் விசுவாசமானவன்; இவன் மனதிலுள்ளதை அறிய அவசியமாகாது" என்று செல்வராஜன் தனக்குள் சொல்லிக்கொண்டான்.

இரண்டு நிமிஷஞ்சென்றதும் செல்வராஜன் உடைதரித்துக்கொண்டு வீட்டைவிட்டுப் புறப்பட்டு ஸரஸ்வதியின் பங்களாவைநோக்கிச் செல்லலானான். இரவு முன்னிருந்தது போலவே பிரகாசமாக இருந்தது. சந்திரன் தன் குளிர்ச்சி பொருந்திய காந்தியால் உலகத்தவரைக் களிக்கச்செய்துகொண்டு நிர்மலமாய் விளங்கினான். குளிர் அதிகமாக இருந்ததால் செல்வராஜன் விரைந்து செல்லத்தொடங்கினான்; ஆனால் அவன் அங்ஙனம் சென்றதற்கு அது முக்கியகாரணமன்று. அவன் தான் போற்றக்கருதும் திவ்வியப்பொருளின் உறைவிடத்தைநோக்கிச்சென்றுகொண்டிருந்தான். தன் காதலியைக் கண்ணுறுவது முடியாதகாரியமென்று அவனுக்கு நன்றாய்த்தெரிந்திருந்தும் அவள் வசித்து வந்தவீட்டின் சுவரையாவதுபார்த்தால் தன் மனக்கவலை நீங்குமென்று அவன் எண்ணலாயினான்.

பங்களாவின் ஜன்னல்களின் வழியாகவந்த வெளிச்சத்தைக் கண்டபோதுதான் அவன் பங்களாத்தோட்டத்தில் அத்துமீறிச்சென்று கொண்டிருந்ததாகத் தெரிந்துகொண்டான். தன்னை அச்சமயத்தில் அங்கு யாரும் கண்டுபிடிக்கமுடியாதென்று அவனுக்கு நிச்சயமாய்த் தெரிந்திருந்தபோதிலும், தான் மிகுந்த ஜாக்கிரதையாகவே செல்லவேண்டுமென்று எண்ணலாயினான். அங்ஙனமே அவன் அங்கிருந்த இருப்புவேலியைத்தாண்டியதும் செடிகளின் மறைவில்சென்று பங்களாவின்முன் வந்து ஓரிடத்தில் நின்றுகொண்டு மெத்தையை உற்றுநோக்கினான். கமலாஸனி இருக்கும் அறையில் எப்பொழுதும் பச்சை வெளிச்சம் தெரியுமென்று அவனுக்குத் தெரியுமாதலால் அதை அவன் எளிதில் கண்டுகொண்டான். அவ்வறையில் சற்றுநேரத்திற்கொருதரம் ஒரு நிழல் நகர்ந்துகொண்டிருந்ததைக்கண்டதும் அவன் மனம் பதைத்தது.

அவன் தன் மனதை ஒருவாறு திடப்படுத்திக்கொண்டு முன்னே நின்றவிடத்தைவிட்டுச் சற்றுத்தூரஞ் செல்லலானான். தன்னை யாராவது கண்டுவிட்டால் திருடனென்றெண்ணிப் பின்பற்றுவார்களெனப் பயந்தவனாய் அவன் மரநிழலி

லேயேசென்று கொண்டிருந்தான். சற்றுநேரத்திற்கெல்லாம் கமலாவணியின் அறைக்கு நேராகநின்றான். அதிர்ஷ்டம் காதலர்களின் பக்கத்திலிருக்குமென்று அநேகர் நினைக்கும் வண்ணமே அன்றிரவு அது செல்வராஜனிடமிருந்து உதவி புரிந்தது. அவன் அங்கே சென்று நின்ற சற்றுநேரத்திற்கெல்லாம் கமலாவணிபாடும் குரல் கோகிலபக்ஷியின் தொனியைப்போல் வெளியே வரலாயிற்று.

அவள் ஹார்மோனியத்தின் சுருதியோடு இசையும் இனிய சாரீரத்துடன் பின்வருமாறு பாடலாயினாள்:

"திருவே என் செல்வமே தேனே வானோர் செழுஞ்சுடரே
செழுஞ்சுடர் நற்சோதிமிக்க உருவே யென்னுறவே யென்னூனே
ஊனினுள்ளமே உள்ளத்தினுள்ளே நின்ற கருவே
என்கற்பகமே கண்ணே கண்ணிற்கருமணியே
மணியாடுபாவாய் காவாய் அருவாய வல்வினை நோயடையாவண்ணம்
ஆவடுதண்டுறையுறையுமமரரேறே".

"அப்பனீ யம்மைநீ யையனுநீ அன்புடையமாமனு மாமியுநீ
ஒப்புடையமாதருமொண் பொருளுநீ யொருகுலமுஞ் சுற்றமுமோரூருநீ, துய்ப்பனவு முய்ப்பனவுந்தோற்றுவாய்நீ
துணையாயென்னெஞ்சந் துறப்பிப்பாய்நீ இப்பொன்னீ
இம்மணிநீ இம்முத்துநீ இறைவனீ ஏறூர்ந்தசெல்வனீயே".

"கற்புறுசிந்தைமாதர்களை வலையன்றிவேறு
பிற்புறத்தலை நாடார் யாங்களுமின்பவாழ்வுந்
தற்பொறியாக நல்குந்தலைவ நின்னலதோர் தெய்வம்
பொற்புறக்கருதோங்கண்டாய் பூரணானந்தவாழ்வே".
"பத்திநீ பத்திக்கானபலனுநீ பலவாச்சொல்லுஞ்
சித்திநீ சித்தர் சித்திக்கிடமுநீ திடமார்மோன
முத்திநீ முத்திக்கானமுதலுநீ முதன்மையான
புத்திநீ யெனக்கொன்றுண்டோ பூரணானந்தவாழ்வே".

அங்ஙனம் பாடிமுடித்ததும் கமலாவணியின் குரல்நீங்க ஆரம்பித்தது. கடைசியாக, விசனமேலீட்டினால் பாடுவதையே நிறுத்திவிட்டனள். அவளுடைய கீதம் செல்வராஜனைப் பரவசப்படுத்தியதால் அவன் நின்ற இடத்திலேயே அசையாமல் மரம்போல் நின்றிருந்தான். அப்போது அவன் இருக்கும் இடமுங்காலச்செலவும் மறந்தவனானான். அவன் மனதில் தன்னால் நன்கு பாராட்டப்பட்ட குரலோசையே குடிகொண்டிருந்தது. அவன் மிக்ககவனத்துடன் பார்த்தபோதுமுற்றத்தில் விசனக்குறியையுடைய ஒரு அணங்கு விளக்கெதிரில் நின்றிருந்தாள்.

கமலாஸனியின் குரலோசை நின்றவுடன் செல்வராஜனைக் கட்டுப்படுத்தியிருந்த மந்திரசக்தியும் நீங்கிவிட்டது. உடனே தான் அத்துமீறி வந்து தோட்டத்தில் நின்றிருந்ததை உணர்ந்தவனாய் உடல்நடுங்கி அவ்விடம்விட்டுப் பெயர்ந்தான். அவன் சென்று கொண்டிருந்தபொழுது கமலாஸனிபாடிய பாட்டுகளின் இன்னிசை அவன் காதில் சப்தித்துக்கொண்டிருந்தது.

செல்வராஜன் வேலியைத்தாண்டிக்கொண்டு தோட்டத்தில்சென்று கொண்டிருந்தபொழுது இனிவரப்போகும் துன்பத்திற்கு அடையாளமாக அவன் மனம் சஞ்சலமடைந்தது. கமலாஸனியின் முகத்தில் இருந்த விசனக்குறியும், தன் சந்தோஷமற்ற வாழ்க்கையும், யாதொரு வேலையுமில்லாமல் தனியே பொழுதுபோக்கு வதாலுண்டான கவலையுமே அதற்குக் காரணமாயிருக்கலாம். காரணம் எதுவாயிருந்தாலுமிருக்கட்டும்; அவன் அன்றிரவு துன்பமுற்றதுபோல் தன் வாழ்நாளில் ஒருமுறைகூட அனுபவித்ததில்லை.

அவன் தன் வீட்டிற்குப்போனபொழுது சுமார் ஒன்பது மணி இருக்கலாம். அது இருள் மூடியிருந்ததால் அவன் மனதில் ஏற்கெனவேயிருந்த சஞ்சலம் பதின்மடங்கு அதிகரிக்கலாயிற்று. ரங்கமணி தன் எஜமானனிடம் தெரிவித்தது போலவே எங்கேயோசென்றுவிட்டான். செல்வராஜன் தன் அறைக்குள்சென்ற சற்றுநேரத்திற்குப் பிறகு சிறிது காப்பி வைத்துக் குடித்துவிட்டு ஓரிடத்தில் படுத்துக்கொண்டான். அப்பொழுது அவன் கெடியாரத்தைப்பார்த்தான். ஒன்பதரை மணி ஆயிருந்தது. அச்சமயம் கமலாஸனி தன்னைக் காணவேண்டுமென்ற அவாவுடன் உடைதரித்துக்கொண்டு புறப்படச்சித்தமாய்க் காத்திருந்தாளென்பதை அவன் கனவிலும் நினைக்கவில்லை. அந்தசமயத்தில் தீனதயாளு தலைவலியினால் அவளைத்தடுப்பவன்போல் பாவனைசெய்து நல்லகாற்றில் வெளியேசெல்லத் தன் மோட்டார்காரைக்கொண்டு வந்து நிறுத்தும்படி கட்டளையிட்டான்.

கமலாஸனி பாடவேண்டுமென்ற ஆவலுடன் அன்றிரவு பாடவில்லை; ஸரஸ்வதி அவளைப் பாடும்படி பலமுறைவேண்டிக் கொள்ளவே அவள் தலைவலியென்று பாசாங்குசெய்திருந்தும் ஹார்மோனியத்தை எடுத்து வைத்துக்கொண்டுபாடினாள்.

ஸரஸ்வதி தன் மகள்பாடியதைமாத்திரம் கேட்டுக்கொண்டிருந்தாளேயொழிய, கமலாஸனியின் மனதில் என்ன எண்ணங்கள் இருந்தனவென்றும் பாடும்போது அவளுக்கு எவ்வித உணர்ச்சி உண்டாயிற்றென்றும் அவள் அறிந்தாளல்லள். யோசிக்குமிடத்து, கமலாஸனி தான் கொண்டகாதல் அவலமாகாமல் தன்னைக்காத்தருளவேண்டுமென்று கடவுளை ஸ்துதி செய்தாளென்றும், தன் காதலனையே தெய்வமென நினைத்துத்

தன் வயமழிந்து பாடினளெனவும் தோன்றுதலாகும்.

பாடிமுடிந்தவுடன் அவள் தலைவலி அதிகமாய் விட்டதென்று தன் தாயாரிடம் சொல்லிவிட்டுப் படுக்கையறைக்குச் சென்றனள். நேரமுங்கொஞ்சங் கொஞ்சமாகச்சென்றுகொண்டிருந்தது; அவள் புறப்படவேண்டிய வேளையும் நெருங்கிக் கொண்டு வந்தது. அவள் தான் செய்யும் காரியத்தில் தைரியமுடையவளாயிருந்தாளெனினும், அதைப்பற்றி நினைக்கும் போது அவள் மனதில் ஒருவித பயம்தோன்றிற்று. முதலில் அவள் ஒருவர் கண்ணிலும் புலப்படாமல் வீட்டைவிட்டுச் செல்லவேண்டும். இராப்போஜனம் முடிந்ததும் வேலைக்காரர்கள் வெளியே வரமாட்டார்களென்று அவளுக்கு நிச்சயமாய்த் தெரியுமாதலால் அது சுலபமாக முடிந்துவிடுமென்று எண்ணியிருந்தாள். அவள் ஒருவருக்கும் தெரியாமல் மெத்தையைவிட்டுக்கீழே இறங்கி அங்கிருந்து ஒரு ஜன்னலின் வழியாகத் தோட்டத்திற்குச் செல்லவேண்டுமென்று தீர்மானித்திருந்தாள். கீழே இருந்த ஒரு ஜன்னலின் கதவு எளிதில் திறக்கக்கூடியதாயும் கம்பியில்லாததாயுமிருந்ததால் அவ்வழியே திரும்பி வரலாமென்று எண்ணியிருந்தாள்.

தன் கைக்கெடியாரத்தைப் பார்த்து ஒன்பதரை மணி ஆயிற்றென்று அறிந்துகொண்டதும் அவள் இனித்தாமதிக்கலாகாதென்று எண்ணலாயினள். நடுக்கமுற்ற கையுடன் அவள் ஒரு சால்வையை எடுத்து உடம்பு முழுமையும் போர்த்துக்கொண்டு புறப்படத்தயாராய் நின்றாள்.

அவள் அவ்வறையைவிட்டுச் செல்ல ஆரம்பித்ததும் அவள் மார்பு பட படவென்று அடித்துக்கொண்டது. தான் சதியோசனைக் காரியென்றும் தான் செய்யுங்காரியத்தைத் தெரிந்துகொண்டால் உலகத்தவர் நகைப்பார்களென்றும் அவள் மனதில் தோன்றியதால் அது அவளை மிகவும் வருத்தியது. ஆனால் அதைப்பற்றிச்சிந்திக்க இப்பொழுது அவளுக்கு நேரமில்லை. உடனே தன் மனதைத் திடப்படுத்திக்கொண்டு கீழே காலடிசப்தம் கேட்கிறதாவென்று காதுகொடுத்துக் கேட்டாள். யாதொரு சப்தமும் உண்டாகாமையால் அவள் விரைவுடன் மெத்தையைவிட்டுக் கீழே இறங்கினாள். அவள் சமையலறைக்குள் நுழைந்ததும் வெளிப்புறத்தில் காலடி சப்தம் கேட்டது. அதைக்கேட்டதும் அவள் திடுக்கிட்டவளாய் அங்கிருந்த ஒரு திரையின் பின்புறத்தில் ஒளித்துக் கொண்டாள். காலடிசப்தம் அடங்கியவுடன் அவள் தன் வழியே செல்லலாயினள்.

சற்று நேரத்திற்கெல்லாம் அவள் தோட்டத்தில் நடந்து கொண்டிருந்தாள். பங்களா அவள் பார்வையிலிருந்துகொஞ்சங் கொஞ்சமாக மறைய ஆரம்பித்தது. தன்னையாராவது கண்டு விடுவார்களோவென்ற பயம் இப்பொழுது அவள்

மனதை விட்டு அறவே நீங்கியது. அவள் சென்றபொழுது குளிர்ந்தகாற்று வீசிக்கொண்டிருந்ததால் அது அவளுக்குச் சிறிது உற்சாகத்தை உண்டுபண்ணியது. செல்வராஜனுடைய வீட்டிற்குச் சமீபமாக வரவர அவளுக்குச் சந்தோஷம் அதிகரித்துக்கொண்டே வந்தது.

நீல நிறம் வாய்ந்த ஆகாயத்தில் பல்லாயிரக்கணக்கான நக்ஷத்திரங்கள் பிரகாசித்துக் கொண்டிருந்த ஓர் வட்டமான பெரிய நீலப்பந்தலில் அநேகமாயிரம் விளக்குகளை ஏற்றிவைத்தாற்போலிருந்தது. சந்திரன் தனது தண்ணொளியால் எல்லாப் பொருள்களையும் அலங்கரித்துக் கொண்டிருந்தான். இதையெல்லாங் கண்ட கமலாஸனிக்கு மிக்ககளிப்புண்டாயிற்றெனினும் ஒரு விஷயம் அவள் மனதைவருத்திக்கொண்டிருந்தது. "நம்மிருவரைப்பற்றியதாகவுமிருக்கும் ஒரு விஷயம் நிகழ்ந்திருக்கிறது" என்று கடிதத்தில் எழுதியிருந்தது அவளுக்கு நீங்காத துன்பத்தை உண்டுபண்ணிற்று.

செல்வராஜன் வீடு சமீபித்ததும், தான் இன்னுஞ் சற்று நேரத்திற்குள் தன் காதலனுடன் நின்றிருக்கலாம் என்று எண்ணியவளாய்க் கமலாஸனி களிக்கலானாள். மூன்றுவாரத்திற்குள்ளாகத் தான் நடக்கும்பொழுதும் நித்திரைசெய்துகொண்டிருக்கும்பொழுதும் கண்ட கனவு கூடிய சீக்கிரத்தில் பலித்து விடுமென்று அவள் சந்தோஷித்தாள். அவள் வேலியைத் தாண்டிக்கொண்டு தனக்குப் பழக்கமான வழியில் சென்று கொண்டிருந்தாள். அவள் சிறுமியாயிருந்தபொழுது வேலைக்காரியுடன் அங்கே வந்து அடிக்கடி கண்பொத்தி விளையாட்டு விளையாடுவது வழக்கமாதலால் அந்த வழியை அவள் எப்பொழுதும் மறந்தாளல்லள். சற்று நேரத்திற்கெல்லாம் அவள் கடிதத்தில் குறிப்பிட்ட இடத்தண்டை வந்து சேர்ந்தாள்.

அவள் தன் காதலனைக்காணமிக்க ஆவலுள்ளவளாயிருந்ததால் தன்னை யறியாமல் "காதலா, செல்வராஜா" என்று பிதற்ற ஆரம்பித்தாள். ஆனால் அவ்விடத்தில் ஒருவரும் இல்லாதது கண்டு அங்குள்ள ஒரு மரத்தண்டைசென்று அதன்மேல் சாய்ந்துகொண்டு நின்றிருந்தாள். அவள் ஒவ்வொரு நிமிஷமும் செல்வராஜன் குரலோசை கேட்பதாகவும் அவன் அங்கே வந்து தன்னை மார்புறத்தழுவி முத்தந்தருவதாகவும் எண்ணிக்கொள்வாள்.

ஆனால் வாஸ்தவத்தில் அங்கு யாரும் வரவில்லை. அவளைச் சுற்றியிருந்த பொருள்களெல்லாம் நிசப்தமாயும் அசைவற்றனவாயும் இருள் மூடியனவாயும் இருந்தன. அங்கிருந்த மரங்கள் நிலாவைமறைத்துக் கொண்டிருந்தன. காற்று வீசாமத ஒரே நிலையாயிருந்தது. அவள் தன்னருகிலிருந்த மரத்தைப்போலவே அசைவற்றவளாய்ச் செல்வராஜன் வரவேண்

டியவழியைப் பார்த்துக்கொண்டே இருந்தாள். ஒருவேளை அவள் சிறிது முன்னதாக வந்திருக்கலாம்; செல்வராஜன் சற்று—

உடனே அவள் மனதில் என்றுமில்லாதபயம் தோன்றியது. அவள் மார்பு பட பட வென்று அடித்துக்கொண்டது. தனக்கு ஏதாவது கெடுதி சம்பவிக்குமோவென்று அவள் கிலேசமுற்றாள். அவள் ஒரு வேட்டை மிருகத்தைப்போல் மிரண்டு, இருளில் சுற்றிச்சுற்றிப் பார்த்துவிட்டுத் தான் வந்த வழியே திரும்பிப்போய் விடலாமென்று எண்ணி ஒரு அடி எடுத்து வைத்தாள். அப்பொழுது அவள் கையை யாரோ பிடிப்பதாக அவள் உணர்ந்ததும் பயத்தினால் கூச்சலிட ஆரம்பித்தாள்.

செடிகளின் மறைவிலிருந்து திடீரென்று வந்த ஒருவன் அவளருகில் நின்றிருந்தான். அவன் தன்னுருவம் தெரியாமலிருக்கும் பொருட்டு உடம்பு முழுவதையும் ஒரு கறுப்புத் துணியால் மூடிக்கொண்டிருந்தான். அவன் முகமும் அங்ஙனமே மூடப்பட்டிருந்ததால் இரண்டு கண்கள் தவிர வேறொன்றும் தெரியவில்லை. அங்ஙனம் தன் கரத்தைப் பற்றியவன் இன்னானென்று கமலாஸனி உடனே அறிந்துகொண்டாள்.

அவன் போலியான உரத்த குரலுடன் "அம்மா, பயப்படாதே, நீ தானே கமலாஸனி?" என்றான்.

அந்தத் தோற்றத்தைக்கண்டு மதிமயங்கியவளாய்க் கமலாஸனி "உனக்கென்ன வேண்டும், உனக்கென்ன வேண்டும்?" என்று தடிமாற்றத்துடன் கேட்டாள்.

அவன்:—(உக்கிரத்துடன்) சரி, நீ பயப்படாதே. நான் யாரிடத்திலிருந்து வந்திருக்கிறேனென்பது உனக்குத்தெரியுமன்றோ?

கமலா:—உள்ளதை மறையாமல் கூறிவிடு. என்ன சங்கதி?

அவன்:—உனக்குத் தெரியாவிட்டால் சொல்லுகிறேன் கேள். செல்வராஜனிடமிருந்து வந்திருக்கிறேன். அவர் இங்கே வர அசந்தர்ப்பமாயிருக்கிறபடியால் வண்டி வரும் வழியண்டை உன்னை அழைத்துப் போவதற்காகவே இப்பொழுது இங்கே வந்திருக்கிறேன்.

கமலா:—(தடுமாற்றத்துடன்) இங்கே வரமுடியாதா? ஏன்?

அவன்:—அதை அவரே உன்னிடம் தெரிவிப்பார். இங்கே வந்து உன்னைக் கண்டு அவ்விடத்திற்கு அழைத்துவருமாறு எனக்குக் கட்டளையிட்டாரே யொழியவேறொன்றும் பேச உத்தரவளிக்கவில்லை.

கமலாஸனி யாது செய்வதென்று அறியாமல் மயங்கி நின்றனள். அவள் தலை கிறு கிறுத்ததால் அவளால் அமைதியுடன் யோசனைசெய்ய முடியவில்லை. அங்கே வந்திருந்தவன்

"உன்னை அவரிடத்திற்கு அழைத்துப் போகிறேன்" என்று கூறியது அவளுக்கு ஒருவித திகிலை உண்டாக்கியது. தன் காதலனைக்கண்டால் தான் தனக்குத் துன்பம் நேரிடாதென்று அவள் எண்ணினாள்.

அவன்:—அவர் அந்த மூலையிலே தான் இருக்கிறார்.

அதைக்கேட்டதும் கமலாஸனி "சரி, நானங்கே வருகிறேன்" என்று கூறினாள்.

இருவரும் அவ்விடத்தைவிட்டுச்செல்ல ஆரம்பித்தனர். அவன் அவளது கரத்தைவிட்டு விட்டு அவள் பக்கத்திலேயே சென்று கொண்டிருந்தான். அவர்கள் மூலையை யடைந்ததும் கமலாஸனி பிரமித்து "அதென்ன?" என்று கேட்டாள்.

அவன்:—அது ஒரு வண்டி, நீ அதற்குள் ஏறிக்கொண்டு செல்வராஜன் வரும் வரையில் காத்திருக்கவேண்டும். அவர் கூடியசீக்கிரத்தில் வந்து விடுவார்.

கமலாஸனி திகைப்புற்று முன்வைத்த காலைப்பின் வைத்து ஸந்தேகத்துடன் தன்னுடனிருந்தவனை நோக்கி "வண்டி—எதற்காக?—நான்—நான்—என்ன சங்கதி?" என்று கேட்டாள்.

அவள் கொஞ்சங் கொஞ்சமாக மனவமைதியடைந்தாள். திடீரென்று அவள் மனதில் தோன்றிய பயம் போய்விட்டது; ஆனால் அங்கு வண்டி எதற்காக நின்றிருந்ததென்பதை அறியச் சக்தியற்றவளாயிருந்தாள். அவள் பிரமித்து நின்றதைக் கண்டு அவன் "அம்மா, நீ ஒன்றிற்கும் அஞ்சவேண்டாம். வண்டியில் ஏறு, அவர் ஒரு நிமிஷத்தில் இங்கே வந்து விடுவார். இந்நேரம் இங்கு வந்திருப்பாரென்று நினைத்திருந்தேன்" என்றான்.

கமலாஸனியின் மனதில் பற்பல எண்ணங்கள் தோன்றின. வண்டி அங்கு நின்றதன் காரணம் அவளுக்கு ஒருவாறு புலப்படலாயிற்று. அதைக்கண்டதும் அவள் மனதில் ஓர் வித சந்தேகமுண்டாயிற்றெனினும் அவளெண்ணியபடி இருக்கமுடியாதென்று சிந்திக்கலாயினாள். தான் எண்ணியது பிசகென்று அவளுக்குத் தோன்றிற்று. தன் இன்னுயிர்த் தோழனை செல்வராஜன் மீது அவ்வாறு சந்தேகங்கொள்ள அவள் மனம் எங்ஙனம் இடந்தரும்? அதை நினைக்கும்போதே அவள் தலை கிறுகிறுத்தது; கண்கள்மேல் இருள் மூடியது. தன் எதிரிலிருந்த வஸ்துக்களெல்லாம் சுற்றி வருவதுபோல் அவள் கண்ணுக்குத் தென்பட்டன.

சுந்தரம் தங்கள் பங்களாவுக்கு வந்தபோது "செல்வராஜன் என்னும் சிற்றி அயோக்கியன்; நாடோடி; அவனுடன் நீங்கள் யாரும் சகவாசஞ் செய்யக்கூடாது" என்று கூறியதே இப்பொழுது அவளுக்குண்டான சந்தேகத்திற்கும் கலக்கத்திற்கும் காரணமாகும். சுந்தரம் சொல்லியவார்த்தைகளைக்

கேட்டு தன் படுக்கையறைக்குச் சென்று கண்ணீர்பெருக்கித் தன் காதலனைப்பற்றி யார் என்ன சொல்லியபோதிலும் தான் அவன்மேல் கொண்ட அன்பை மாற்றுவதில்லையென்று உறுதி செய்து கொண்டதும் இப்பொழுது அவளுக்கு ஞாபகம்வந்தது. அதை நினைக்க நினைக்க அவள் முகம் சலவைக் கல்போலாயிற்று. அவள் "இல்லை, நான் வரமுடியாது. அவரிடம்—செல்வராஜனிடம்— நான் திரும்பிப்போய்விட்டதாக—" என்று சொல்லிக்கொண்டிருக்கும்போதே அவன் அவளருகில் வந்து "உஸ்! பேசாதே. அவ்வளவு உரக்கப்பேசாதே. நீ சொல்வதை வண்டிக்காரன் கேட்கவேண்டுமோ? வா. நீ கட்டாயம் வரவேண்டும். இவ்வளவு தூரம் வந்து விட்டபடியால் திரும்பிப்போகலாகாது" என்றான்.

அதைக்கேட்டதும் கமலாஸனி அவ்விடம் விட்டு ஓட எண்ணியவளாய் உடையைத்தூக்கிப் பிடித்துக்கொண்டாள். ஆனால் அவளோடிருந்தவன் அதை அறிந்து சப்தமுண்டாகாமல் அவளைத் தூக்கிக்கொண்டு வண்டியண்டைசென்றான். அங்ஙனஞ் சென்றபோது அவன் கமலாஸனியின் வாயைத் துணியால் மூடிக்கொண்டிருந்ததால் அவள் கூவமுடியாமற் போயிற்று. ஆனால் வண்டியை யணுகுவதற்கு முன்னரே கமலாஸனி தன் வாயில் மூடியிருந்த துணியை விலக்கி விட்டுக் கத்த ஆரம்பித்தாள்.

அவள் கூவியதின் எதிரொலி அடங்குமுன்னம் அவ்வழியாகச்சென்று கொண்டிருந்த ஒரு மோட்டார்கார் அங்கே வந்து நின்றது. அதிலிருந்தவன் கீழே இறங்கி அங்கு நிறுத்தப்பட்டிருந்த ஜட்காவண்டியின் அருகில் சென்றான்.

கமலாஸனியைத் தூக்கிக்கொண்டு சென்றவன் மோட்டார்கார் வந்ததைக் கண்டு திகைப்புற்றவன்போல் பாவனை செய்து எந்த வழியே ஓடலாமென்று ஆலோசிப்பவன்போல் விழித்துக் கொண்டிருந்தான். அச்சமயத்தில் ஒருவன் அவன் தோளின்மேல் கையை வைத்து, கமலாஸனிக்கு மிகவும் பழக்கமான குரலுடன் "அடே சண்டாளா! இப்பெண்மணியை என்ன செய்கிறாயடா? நீ யார்?" என்றான்.

அதைக் கண்டதும் கமலாஸனி உடல் நடுங்கியவளாய்க் கீழே விழும் தருணத்திலிருந்தாள். ஆனால் அவள் மெதுவாக மோட்டார்காரண்டைசென்று அதன்மேல் சாய்ந்துகொண்டாள்.

புதிதாய் வந்த மனிதன் கமலாஸனியைத் தூக்கிவந்தவனை அதட்டி அவன் கழுத்தைப்பிடித்துக்கொண்டு "டேய்! என்னேடா. இந்தப் பெண்மணியார்? நீ என்ன செய்து கொண்டிருந்தாய்?" என்றான்.

அவன் அங்ஙனங் கூறியபோது கமலாஸனியை உற்று நோக்கிக்கொண்டே "இங்கிருப்பது கமலாஸனியல்லவா

நினைக்கிறேன்" என்றான்.

கமலா :—ஆம், நான் கமலாஸனி தான். நீங்கள் வந்ததைப்பற்றி நான் மிகவும் சந்தோஷப்படுகிறேன். நான்—நான்—.

தீன :—(வண்டிக்காரனை அழைத்து) "இவனைச் சற்று நேரம் பிடித்துக்கொண்டிரு. அவள் மயங்கி விழுந்து விடுவாள் போலிருக்கிறது.

கமலா:—இல்லை, நான் விழவில்லை இப்பொழுது சௌக்கியமாய்விட்டது. நான்—நான்—போய்விடவேண்டும். தயவுசெய்து இவர்களையெல்லாம் எங்கேயாவது அனுப்பிவிடுங்கள்.

தீன :—கமலா, அதிருக்கட்டும். நீ இங்கு எங்ஙனம் வந்தனை ?

கமலா :—(தன் முகத்தைக் கைகளால் மறைத்துக் கொண்டு) தயவுசெய்து என்னைக் கேளாதீர்கள்.

தீனதயாளு வண்டிக்காரன் பிடித்துக்கொண்டிருந்த மனிதனைப்பார்த்து "இந்தக் கிராதகன் யாரென்று பார்ப்போம்" என்று சொல்லி அவன் தலையில் முக்காடிட்டிருந்த துணியை அப்புறப்படுத்தி அவன் தங்கமணியெனக் கண்டான்.

தீனதயாளு இம்மாதிரி நிகழுமென்று தான் முன்னமே அறிந்திருந்ததாகக் கூறலாயினன். அவன் தங்கமணியைப் பார்த்து "அடே தங்கமணி! நீ இப்பொழுது செல்வராஜனுடைய வேலைக்காரனல்லவா?" என்று கேட்டான்.

அதைக்கேட்டதும் கமலாஸனி நாராசபாணத்தால் துளைக்கப் பட்டவள்போல் ஆனாள்.

தீன :—நல்லது தங்கமணி! என்ன சங்கதி? இந்த அநியாயச் செயலுக்கு யார் மூலகாரணம்? நீ கருவியாயிருப்பாயென்பது எனக்குத் தெரியும்.

அதைக்கேட்டதும் கமலாஸனி பெருமூச்செறிந்துகொண்டு "தயவுசெய்து அவனை ஒன்றும் கேட்கவேண்டாம். நான்—நான்—ஒரு பிழை செய்துவிட்டேன்." என்றாள்.

தீனதயாளு அவளருகில் வந்து "கமலா! நீ சொல்வதை அறிந்துகொண்டேன். அந்த யௌவன புருஷனோடு சகவாசஞ்செய்யக் கூடாதென்று உனக்கு முன்னமே எச்சரிக்கை செய்வதாயிருந்தேன். விஷயங்கள் இம்மாதிரி முடியுமென்று முன்னமே தெரிந்திருந்தால் தகுந்தபடி ஏற்பாடு செய்திருப்பேன். அவனுடைய நடவடிக்கை சென்னையிலுள்ள கனவான்களுக்கெல்லாம் தெரியும். சரி, இன்னும் இங்கே அதிகநேரம் தாமதித்திருக்கக் கூடாது" என்று இரகசியமாய்ச் சொன்னான். கமலாஸனி அவனுடன் "ஆம், ஆம்" என்றனள்.

அச்சமயத்தில் தீனதயாளு நினைத்தவாறே, அங்குண்டான கூச்சலைக்கேட்டு, செல்வராஜன் தன் வீட்டிலிருந்து அவ்விடத்திற்கு வந்தான். இது வரையில் நடந்த சம்பவம் முற்றும் தீனதயாளு எதிர்பார்த்தவாறே நிகழ்ந்தது.

னுடைய தந்திரங்களைப்பற்றி நாங்கள் முன்னமே கேள்வி யுற்றிருக்கிறோம்" என்றான்.

செல்வராஜன் அதைக்கேட்டதும் கோபமுண்டவனாய் தீனதயாளுவின்மேல் பாய்ந்தான். தீனதயாளு கலக்கத்துடன் அவனைப்பார்த்து "சற்றுப்பொறு. ஒரு பெண் கூச்சலிடுவதைக் கேட்டு இங்கு வந்து பார்த்தபோது உன் வேலைக்காரனை தங்கமணி கமலாஸனியைப் பலவந்தமாய் வண்டியிலேற்று வதைக் கண்டேன்" என்றான். செல்வராஜன் கோபத்தோடு தன் வேலைக்காரனை நோக்கி, "தங்கமணி, இவர் சொல்வது சரிதானா?" என்று கேட்டான். தங்கமணி யாதும் பேசாது மரம்போல் நின்றிருந்தான். தீனதயாளு செல்வராஜனை நோக்கி "உன் உடந்தைக்காரன் தன் குற்றத்தை ஒத்துக் கொள்ளுகிறானென்பது இதனாலேயே நன்கு விளங்குகின்றது. கமலாஸனி இங்கே வந்ததும் வண்டி தயாராய்க் காத்துக் கொண்டிருப்பதும் உனக்கன்றி வேறுயாருக்குத் தெரியும்?" என்றான்.

தீனதயாளு அங்ஙனம் கூறிக்கொண்டிருந்தபோது தன்னை நாசப்படுத்துவதற்காக இம்மாதிரி அவதூறான காரியத்தை யாராவது வேண்டுமென்று செய்திருப்பார்களென்று செல்வராஜனுக்குத் தோன்றலாயிற்று. கமலாஸனி அங்கே வந்திருந்ததும் ஜட்காவண்டி காத்துக்கொண்டிருந்ததும் காரணமில்லாமல் தங்கமணி இங்ஙனம் நடந்துகொண்டதும் புதுமையாக இருந்ததேயன்றி அவனால் உண்மையைக் கண்டு பிடிக்க முடியவில்லை. தன்னுடைய விரோதியாயிருந்த தீனதயாளுவே இவைகளுக்கெல்லாம் காரணமாயிருக்கவேண்டு மென்று அவனுக்குத் தோன்றிற்று. ஆனால் சந்தர்ப்பங்கள் தனக்குப் பிரதிகூலமாயிருந்தது பற்றித் தான் அவைகளின் உண்மையைத் தற்சமயம் வெளிப்படுத்துவது அசாத்தியமாகு மென்று நினைக்கலாயினான். ஆகவே அவன் காதலர்களின் சுபாவத்திற்கேற்ப, கமலாஸனியை நோக்கி, "கமலா! நடந்த விஷயம் எனக்கொன்றும் தெரியாது. இதையெல்லாம் பார்க்கும்போதே எனக்கு மிகுந்த ஆச்சரியமுண்டாகிறது. நான் வண்டியை அமர்த்தவேயில்லை" என்றான். அதைக்கேட்டதும் தீனதயாளு கமலாஸனி ஏதேனும் பதில் கூறுவதைச் செல்வராஜன் கேட்கக்கூடாதென்றெண்ணியவனாய் அவனை நோக்கி "வேறு யார் அமர்த்தியது? என்றான்.

செல்வராஜன் உண்மையைத் தெரிந்துகொள்ளவேண்டியவனாய்த் தங்கமணியைப் பிடித்துக்கொண்டிருந்த வண்டிக் காரனை ஜாடையாய்ப் பார்க்கலானான். அந்த வண்டிக்காரன் தங்கமணியைத் தட்டிக்காட்டி "இவன் தான் என்னை அழைத்து வந்தான். கடிதத்தை இவன் தான் கொண்டு வந்து கொடுத்தான்" என்றனன். செல்வராஜன் மர்மத்தையறிய இதுவே

எதுவாகுமென்றெண்ணி, "கடிதமா?" என்றான். உடனே வண்டிக்காரன் தங்கமணியை விட்டுவிட்டுத் தன் சட்டைப் பையில் கையைவிட்டு ஒரு கசங்கிய கடிதத்தை யெடுத்துக் காட்டினான்.

தீனதயாளு உடனே அந்தக் கடிதத்தை வண்டிக்காரனிடமிருந்து வாங்கி அதை யாரெழுதியதென்று தெரிந்து கொள்ளும் வண்ணம் கையெழுத்தைப் பலமுறை பார்க்கலாயினான். அவன் அதைக் கமலாஸனிக்குக் காட்டியதும் அவள் முதல் நாள் தனக்குச் சந்தோஷமுண்டாக்கிய கையெழுத்தே அதுவென்று தெரிந்து கொண்டாள்.

தீனதயாளு அதைச் செல்வராஜனிடம் கொடுத்துவிட்டு "இதைக் கண்ட பிறகாவது ஒன்றுந்தெரியாதவன்போல் நடிக்கமாட்டாயென்று எண்ணுகிறேன். மெயிலுக்குப்போக வேண்டுமென்று நீ இதில் எழுதியிருக்கும் காரணம் நன்கு விளங்குகின்றது" என்றான்.

செல்வராஜன் அக்கடிதத்தைப் பார்த்ததும் அது தான் வழக்கமாய் உபயோகிக்கும் காகிதத்தில் எழுதியிருந்ததென்றும், கையெழுத்து தன்னுடைய தஸ்லாவினும் அதைப் போலவேயிருந்ததென்றும் அறிந்துகொண்டு, கமலாஸனியை நோக்கி, "கமலா! இக்கடிதம் நான் எழுதியதல்ல. இது கள்ளக்கடிதமேயன்றி வேறன்று" என்றான்.

அதைக்கேட்டதும் தீனதயாளு நகைத்துக்கொண்டே "செல்வராஜா, உன்னுடைய நடவடிக்கை எங்களுக்கு நன்றாய்த் தெரியுமென்று நான் முன்னமே கூறவில்லையா? எங்களுக்குவேண்டிய சாக்ஷி இங்கிருக்கையில் நீ என்ன பொய் சொல்லியபோதிலும் அதை நாங்கள் எப்படி நம்புவோம்?" என்றான்.

அவன் அங்ஙனம் கூறியதும் செல்வராஜன் மிக்ககோபங் கொண்டு ஏதோ சொல்லவாயெடுத்தான். அதைக் கண்ட கமலாஸனி "சரி, இனி ஒன்றும் வேண்டாம்" என்றனள். இப்பொழுது நடந்த சம்பவங்களால் உண்டான பயம் அவள் மனதைவிட்டு அறவே நீங்கியது. தீனதயாளு தனக்குச் சமயத்தில் உதவிபுரிய வந்ததை நினைத்து அவள் அவன்மேல் விசுவாசமுடையவளானாள். அவனே தன்னை அவமானத்தி லிருந்து காப்பாற்றினனென்று எண்ணிமகிழ்ந்தாள். செல்வ ராஜனே இவ்வளவுக்குங் காரணமென்றும் அவனே தன்னை ஏமாற்றிவிட்டானென்றும் நினைத்து அவள் அவன்மேல்கொண் டிருந்த காதலையும் நம்பிக்கையையும் உடனே ஒழித்து விட்டாள்.

அவள் செல்வராஜனை நோக்கி "இனி நீங்கள் ஒன்றும் சொல்லவேண்டாம். செல்வராஜரே! இது முதல் நாமிரு வரும் அந்நியர்கள்போலவே நடந்துகொள்ளவேண்டும். நான்

ஏமாந்து போய் விட்டேன்" என்று கூறிவிட்டு தீனதயாளு வை நோக்கி "ஐயா!—தயவுசெய்து—என்னை வீட்டுக்கு அழைத்துப் போகிறீர்களா?" என்றாள்.

செல்வராஜன் அறிவழிந்தவனாய்க் கமலாஸனியை யணுகி அவளைநோக்கி, "கமலா! என்ன சொல்லிக் கொண்டிருக்கிறாய்? நீ சொல்வது ஒன்றும் விளங்கவில்லையே! நீ இங்கே எங்ஙனம் வந்தாய்?—தீனதயாளுவும் இவ்விடத்திற்கு வந்த தெப்படி?" என்றான்.

அதைக்கேட்டதும் கமலாஸனி கோபங்கொண்டவளாய் அவனை நோக்கி "எப்படியா? நீங்கள் எனக்கொரு கடிதம் எழுதவில்லை?" என்று கேட்டாள். செல்வராஜன் தான் கடிதமெழுதியது வாஸ்தவந்தானென்று ஒத்துக்கொண்டான். தீனதயாளு அவனை நோக்கி "ஐயா, போதும். இப்பொழுது மரியாதையாய்க் கமலாஸனியைவிட்டுச் செல்வீர்களென்று நினைக்கிறேன்" என்றான்.

செல்வராஜன் மனவருத்தத்துடன் கமலாஸனியைப் பார்த்து, "கமலா! நீ கூடவா என்னைப்போகச் சொல்லுகிறாய்?" என்று கேட்டான். அவன் கமலாஸனி தன்னை நம்பியிருப்பாளென்று எண்ணியிருந்தான். சுந்தரம் கமலாஸனிக்கு எச்சரிக்கை செய்ததும் தீனதயாளு தானெழுதியது போல் கடிதமெழுதிக் கமலாஸனியை வருத்தியதும், அதனால் அவள் தங்கமணியின் வசம் அகப்பட்டுக் கொண்டதும் செல்வராஜனுக்குத் தெரியாதாகையால் கமலாஸனி தன்னைவெறுத்ததற்காக அவள்மேல் கோபங்கொண்டான். அவன் மறுபடியும் அவளை நோக்கி "நீ கூடவா என்னைப்போகச் சொல்லுகிறாய்?" என்று கேட்டான். கமலாஸனி "ஆம்" என்று சொல்லிக்கொண்டே தீனதயாளுவோடு மோட்டார்காரண்டைசென்றாள். செல்வராஜன் திரும்பவும் அவளை நோக்கி "எப்பொழுதும் என்னைப் பார்க்கமாட்டாயோ?" என்றான். அவள் "என் உயிருள்ளளவும் உங்கள் முகத்தில் விழிக்கமாட்டேன்" என்று சொல்லிப்போய் விட்டனள்.

செல்வராஜன் யாதும் பேசாது கமலாஸனி தீனதயாளுவோடு சென்றதைப் பார்த்துக்கொண்டே நின்றிருந்தான். உடனே மோட்டார்கார் அவ்விடம் விட்டுச்சென்றது. கமலாஸனி ஒரு புறமாக வண்டியில் உட்கார்ந்து கொண்டிருந்தாள். அங்ஙனஞ்சென்று கொண்டிருந்தபொழுது தீனதயாளு தான் ஜயமடைந்ததை யெண்ணிச் சந்தோஷித்தவனாய்ச் செல்வராஜனைப் பார்க்கலாயினான்.

செல்வராஜன் நிகழ்ந்த தனைத்தையும் மறந்தவனாய் அவ்விடத்திலேயே மரம்போல் அசைவற்று நின்றிருந்தான். அங்ஙனமிருக்கையில் ஜட்காவண்டிக்காரன் அவ்விடம் வந்து உரத்த குரலுடன் தனக்குச் சேரவேண்டிய சத்தத்தைக்கேட்

டான். செல்வராஜன் அவன் எப்படியாவது அவ்விடத்தை விட்டுத் தொலைந்தாற் போதுமென்று எண்ணி அவன்கேட்ட பணத்தைக் கொடுத்துவிட்டான். இதற்குள்ளாகத் தங்க மணி எங்கேயோ ஓடிப்போய் விட்டான்.

தீனதயாளு சற்றுநேரம் வரையில் கமலாவேணியுடன் பேசாமலிருந்தான். அவளுடைய வெளுத்த முகத்தையும் மிரண்டபார்வையையுங் கண்டு அவன் பரிதபிக்கலாயினான். அவளுக்கு மிகவும் வியாதி வந்து விடுமோவென்று அவன் பயந்தான். ஆனால், தன் முறையாக இப்பொழுது நடந்ததுபோல் காதலர்கள் பிரியும்படி நேரிட்டால் அவர்களுக்கு இம்மாதிரி வருத்தமுண்டாகுமென்று அவனுக்கு முன்னமே தெரியுமாதலால் அவன் ஒருவாறு தைரியமாயிருந்தான். அவள் ஒருவருக்கும் தெரியாமல் எப்படிப் பங்களாவுக்குச் செல்வாளென்பது மாத்திரம் அவனுக்கு விளங்கவில்லை. ஆகவே அதைப் பற்றி அவளைக்கேட்க வேண்டுமென்று எண்ணியிருந்தான்.

மோட்டார்கார் ஐந்து நிமிஷத்திற்குள் ஸரஸ்வதியின் பங்களாவை யணுகியது. பங்களா சமீபித்ததும் தீனதயாளு மோட்டார்காரின் வேகத்தை மிகவும் மட்டுப்படுத்தினான். அவன் கமலாவேணியை எதோ கேட்பதற்காக அவளை உற்று நோக்கியபொழுது அவள் கன்னங்கள் சிவந்தன. அவள் மனதிலிருந்ததை தீனதயாளு அறிந்துகொண்டான். அவன் அவளைநோக்கி, "கமலா! நீ ஒன்றிற்கும் அஞ்சவேண்டாம். இன்றிரவு நடந்ததொன்றையும் நான் ஒருவரிடமும் வெளியிடுவதில்லையென்று சத்தியமாய்ச் சொல்லுகிறேன்" என்றான்.

கமலாவேணி புன்னகைகொண்டு அவன் தனக்குச் செய்யும் உபகாரத்திற்காக அவனுக்கு வந்தனமளித்தனள்.

அவன் மறுபடியும் அவளைப்பார்த்து "நாளைய காலையில் ஜட்காவண்டிக்காரனைக் கண்டு அவனும் இவ்விஷயத்தை வெளியிடாமலிருக்கும்படி ஏற்பாடு செய்து விடுகிறேன். இதெல்லாம் நான் செய்யவேண்டிய கடமையாதலால் இதற்காக நீ எனக்கு நன்றி செலுத்தவேண்டாம். பெண்கள் இடர்ப்பட்டிருக்கும்பொழுது ஒருவன் இவ்வாறு உதவி செய்வது யுக்தமாகும். நீ பங்களாவுக்குள் எப்படிச் செல்வாய்?" என்றான்.

அவள் ஜன்னல் வழியாய்ப்போகுந் தந்திரத்தை வெளியிட்டதும், அங்ஙனஞ்சென்றால் அவளையாருங் கண்டு பிடிக்க மாட்டார்களாவென்று கேட்டான். அவள் ஒருவர் கண்ணிலும் புலப்படாமல் போகமுடியுமென்று பதிலளித்தனள். முதல் முதல் இப்பொழுது தான் கமலாவேணிக்குத் தீனதயாளுவின்மேல் நல்ல அபிப்பிராயம் உண்டாயிற்று. அவன் நல்ல மாதிரியாக நடந்து கொண்டதும் அவளை அவமானத்தினின்றுந் தப்புவித்ததும் அவளெண்ணங்களை மாற்றிவிட்டன.

கமலாவேணி தீனதயாளுவுக்கு வந்தனமளித்து விட்டு

மோட்டார்காரை விட்டிறங்கிப் பங்களாவுக்குள் சென்றனள். அவன் புன்னகையுடன் அவளையே உற்றுநோக்கிக் கொண்டிருந்தான்.

கமலாஸனி தான் கூறியவாறே ஜன்னல் வழியாகச்சென்றனள். அவள் மெத்தைக்குச்சென்று தன் படுக்கையில் படுத்துக்கொண்டு சூரியோதயமாகும் வரையில் நித்திரைசெய்யாமல் விழித்தபடியே இருந்தாள். நடந்த சம்பவங்களை நினைத்து அவள் வருந்தவுமில்லை, அழவுமில்லை.

செல்வராஜனுக்கு அன்று காலை விசனகரமாகத்தோன்றியதுபோல் எப்பொழுதும் தோன்றியதில்லை. கமலாஸனியைப்போலவே அவனும் படுக்கையில் படுத்தவண்ணம் நித்திரைசெய்யாமல் விழித்துக்கொண்டிருந்தான். அவன் மனதில் பற்பல எண்ணங்கள் தோன்றினவென்றாலும் அவைகளொன்றும் அவனுக்குச் சரியாக விளங்கவில்லை. தினதயாளனைப் பற்றி அவன் எண்ணியபோதெல்லாம் அவன் மனதில் சஞ்சலமும் நம்பிக்கையின்மையும் அதிகரிக்கலாயின.

சூரியன் உதித்துச் சற்றுநேரமானதும் செல்வராஜன் படுக்கையைவிட்டுச் சிலவேலை செய்யும் அறைக்குச்சென்றான். அவன் கமலாஸனியை முதல் முதல் கண்டபொழுது தன் ஷாப்பில் நின்றிருந்த வண்ணம் இப்பொழுதும் பலகையின் மேல் சாய்ந்துகொண்டு நின்றிருந்தான். அவன் கையில் கரிமண்ணை எடுத்து உருட்டிக்கொண்டே பலவாறு சிந்திக்கலாயினன்.

மிகவும் சாமர்த்தியமுள்ள ஒருவன் இம்மாதிரி உபாயம் செய்து அதைச் சாதுர்யமாய் முடித்திருக்கிறனென்பது இவனுக்கு உள்ளங்கைநெல்லிக்கனிபோல் விளங்குதலாயிற்று. அப்படிப்பட்ட துரோகச்செயலைச் செய்யக்கூடியவன் செல்வராஜனுக்குத் தெரிந்தவர்களில் ஒருவன் தானிருந்தான்; அவனே செல்வராஜனுக்கும் கமலாஸனிக்கும் விரோதமுண்டாக்கி அதனால் தான் லாபமடையக் கருதியவன்; அவன் தான்—தினதயாளு. அவன் கமலாஸனியை முன்னமே விவாகஞ்செய்துகொள்ள விரும்பவில்லையா? தங்கமணியின் சங்கதி என்ன? அவனைப்பற்றி நினைக்கும்போது செல்வராஜனுக்குக் கோபம் பொங்கியெழும்பியது. தங்கமணியைப்போன்ற நம்பிக்கைத் துரோகி வேறு யாரேனுமிருப்பானே? தினதயாளுசெய்த தந்திரம் இப்பொழுது தான் செல்வராஜனுக்குத் தெரியலாயிற்று. தினதயாளு தங்கமணியை வேலையினின்றும் நீக்கியதாகப் பாசாங்குசெய்ததும், தங்கமணி தன்னிடம் வந்து வேலை செய்வதாகக் கேட்டுக்கொண்டதும் இந்தக் காரணத்திற்காகவே என்று இப்பொழுது அவனுக்குத் தோன்றிற்று. தினதயாளுவிடமிருந்து வந்த மனிதனைத் தன்னிடம் அமர்த்திக்கொண்டது முட்டாள் தனமென்று

இப்பொழுது அவன் உணரலானான்.

தங்கமணி செல்வராஜனிடம் வந்து சேர்ந்ததனாலேயே தீனதயாளுவின் தந்திரம் முற்றும் பலித்துவிட்டது. செல்வ ராஜன் மிகவும் வருந்திக் கமலாஸனிக்கு எழுதிய கடிதம் என்ன வாயிற்று? அது தீனதயாளுவின் மேஜையிலிருந்ததா, அல்லது நெருப்புக் கிரையாய்விட்டதா? அந்த ராத்திரியில் கமலாஸனியை அவ்விடத்திற்கு என்ன சாக்குச்சொல்லி யழைத்து வந்தார்கள்? முன்னே தான் பார்த்த கடிதத்தைப் போலவே ஒரு கள்ளக்கடிதமெழுதி தீனதயாளு அவளை அங்கே வரவழைத்திருப்பானோ?

அவன் இங்ஙனம் பலவாறாகச் சிந்தித்துக் கொண்டிருக் கையில் அவன் கையிலிருந்த களிமண் பலவித உருவங்களாக மாறிக்கொண்டே வந்தது. தங்கமணி கமலாஸனியைப் பல வந்தமாய் வண்டியிலேற்ற முயன்றதால், தான் அவளை அப கரித்துப்போகக் கருதியதாக அவள் நினைத்திருப்பாளென்று அவன் வருத்தமுற்றான். தீனதயாளு அச்சமயத்தில் அவ்வி டம் வந்து கமலாஸனியை எப்படி வசப்படுத்திக் கொண்டா னென்பதை நினைக்க நினைக்க அவனுக்கு மிக்க வருத்தமும் பொறாமையும் உண்டாயின.

கமலாஸனி தன்னை நம்பாதது அவள் பிசகல்லவென்று அவனுக்குத் தோன்றிற்று. அவன் யோசித்துப் பாராமல் அவள்மேல் கொண்ட கெட்ட அபிப்பிராயம் இப்பொழுது மாறிவிட்டது. முன்னாளிரவு நடந்த விஷயத்தினால் தனக்குக் கெட்ட பெயருண்டாகி விடுமென்றும் தன்னைப்பற்றித் தீன தயாளு இழிவாய்ப்பேசிக் கொண்டிருப்பானென்றும் அவன் கலங்குவானாயினான்.

அவன் என்ன செய்யலாம்? உண்மையை எங்ஙனம் வெ ளிப்படுத்தமுடியும்? இம்மாதிரி நடந்திருக்குமென்று அவனுக் குத்தோன்றியதேயன்றி அதை நிரூபிக்கக்கூடிய அத்தாக்ஷி யாதொன்றும் கிடைக்கவில்லை. நடந்தது யாதென்று நிச்சய மாய்க்கூறக் கூடியவன் தங்கமணி ஒருவனே. ஆனால் அவனை எங்கே கண்டு பிடிப்பது? அப்படி அவனைக் கண்டு பிடித்த போதிலும் மிகுந்த செல்வமுடைய தீனதயாளுவை விரோ தித்துக்கொண்டு அவன் எளிய செல்வராஜனுக்கு அனுகூல மாகப் பேசுவானோ?

ஆகையால் தன்னால்யாதொன்றும் செய்யமுடியாதென்று செல்வராஜன்கலங்கினான். அவன்எண்ணங்கள் தான் கமலாஸனி யைத்திருவல்லிக்கேணியில் முதல் முதல் கண்டது தொடங்கி அவள் தீனதயாளுவோடு மோட்டார்காரில் சென்றதோடு முடிந்தன.

இனிமேல் தான் தனியாய்க் கழிக்கவேண்டிய சந்தோஷ மற்ற நாட்களை எண்ணி யெண்ணி அவன் துக்க சாகரத்தில்

முழுகினான். அவன் கையிலிருந்த களிமண் கீழே விழுந்து விட்டது. விசனமேலீட்டினால் அவன் சிரசு தோளின்மேல் சாய்ந்து கிடந்தது. வெகு நேரமாயும் அவன் அதேமாதிரி நின்றிருந்தான். முன்னே சென்னையில் தன் ஷாப்பில் நின்றிருந்தபொழுது கமலாஸனியின் முகம் அவனெதிரில் தோன்றியதுபோல் இப்பொழுதும் தோன்ற ஆரம்பித்தது. நேரஞ் செல்லச்செல்ல அவள் முகமும் துலக்கமாய்க் காணப்பட்டது. அவள் புன்னகையுடன் தன்னை வரவேற்பதுபோல் அவன் எண்ணிக்கொண்டான். அவன் தன் வயமழிந்தவனாய்த் தன் காதலியைத் தழுவவேண்டுமென்று கரங்களை நீட்டினான். ஆனால் தன் முன் ஒருவருமில்லாதிருந்தது கண்டு அவன் "ஹா! எனக்குப் பைத்தியம் பிடித்து விடும்போலிருக்கிறதே" என்று சொல்லிக்கொண்டான்.

செல்வராஜன் இனித்தான் வீணே காலம் போக்குதல் தவறாகுமென்று எண்ணி என்ன செய்யலாமென்று ஆலோசிக்கலாயினான். அவனுக்குப் பல்லாவரத்திலிருக்கப் பிடிக்கவில்லை. அந்த வீடு தன் காதலை நினைப்பூட்டுவதாயிருந்தபடியால் அதை அவன் வெறுக்கலாயினான். இடிந்து பாழடைந்திருக்கும் வீடு மனதிற்கு இன்பஞ்செய்யாதென்று அப்பொழுது தான் அவனுக்கு முதல் முதல் தோன்றலாயிற்று. அதை அவன் முதலில் கண்டபொழுது அதுவே தன் வேலைக்குத் தகுதியான இடமென்று எண்ணினான். பிறகு கமலாஸனி அவ்விடத்திற்கு வந்து தன் அழகாலும் இனிய வசனங்களினாலும் அதை அலங்கரித்துக்கொண்டிருந்தாள். இப்பொழுது கமலாஸனி அவனைவிட்டுப் பிரிந்துவிட்டபடியால் அவ்வீட்டில் இருப்பதில் என்ன பயன்?.

சென்னைக்குத் திரும்பிப்போய் முன்போல் வேலைசெய்து கொண்டிருந்தால் இவ்வித எண்ணங்கள் தன்னை வருத்தாவென்று எண்ணி அங்கே போகத் தீர்மானித்தான். அன்று பகல் முழுவதும் அவன் சாமான்களைப் பெட்டிகளில் வைத்துக் கொண்டிருந்தான். மறுநாள் அவன் பட்டணத்திற்குப் புறப்படத் தயாராயிருந்தபொழுது அவன் செய்த "நன்கொடை" என்னுஞ் சிலை சென்னையிலிருந்து அங்கு கொண்டுவரப்பட்டது. அதை எங்கே வைப்பதென்று வண்டிக்காரன் செல்வராஜனைக் கேட்டதற்கு அவன் அதைத் தோட்டத்தில் வைக்கும்படி கட்டளையிட்டான். அந்தச் சிலை தோட்டத்தின் நடுவில் ஓரிடத்தில் நிறுத்தப்பட்டது. உடனே செல்வராஜனும் சென்னைக்குப் பிரயாணமானான். அவன் சென்னையிலிருந்து வந்தபொழுது சந்தோஷமும் நம்பிக்கையுமுடையவனாயிருந்தான். இப்பொழுது ஆசாபங்கத்தினால் அறிவழிந்தவனானான்.

## 22. ஸரஸ்வதி ஸந்தோஷமுற்றாள்.

ஸரஸ்வதி பல்லாவரத்திலுள்ள பங்களாவை எப்பொழுதும்போல் ஒரு காவற்காரன்வசம் ஒப்புவித்துவிட்டுச் சென்னைக்குத்திரும்பிவந்தாள். அவள் பட்டணத்திற்குவந்ததினாலேயே அவள் மனக்குறை நீங்கிவிட்டது. முன்போலவே திருவல்லிக்கேணியில் தன் மகளுடன் ஸுகமாய்க் காலங்கழிக்கலானாள்.

வஸந்தகாலம் வந்து விட்டபடியால் பங்களாத்தோட்டத்திலுள்ள பலவிதப் புஷ்பச்செடிகளும் கனிதரும் விருக்ஷங்களும் பூக்களுடனும் கனிகளுடனும் குலுங்கிக்கொண்டிருந்தன. ரோஜா, சம்பங்கி, மனோரஞ்சிதம் முதலிய புஷ்பங்களைப்பார்க்கக் கமலாஸனிக்கு மிக்க களிப்புண்டாயிற்று.

பிரதி தினமும் காலைவேளையில் ஸரஸ்வதி தன் மகளுடன் சிங்காரத்தோட்டத்தில் உட்கார்ந்து இனிமையாய்ப் பேசிக்கொண்டு காலம் போக்குவது வழக்கம். அவள் டாம்பீகம் மிகுந்தவளாதலால் மனம்போனபடி தன்னை அலங்கரித்துக் கொள்வாள். மேலும் தன் மகளை அடிக்கடி கடைகளுக்கு அழைத்துப்போய் விதவிதமான நூதன உடைகளை வாங்கிக் கொடுத்து அவளை அணிந்துகொள்ளச் சொல்வாள்.

கமலாஸனி சந்தோஷத்துடன் இல்லாதது கண்டு ஸரஸ்வதி மனம் வருந்தினாள். பல்லாவரத்திலிருந்து சென்னைக்கு வந்ததும் கமலாஸனி சௌக்கியமாகவும் சந்தோஷமாகவும் இருப்பாளென்று அவள் எண்ணியிருந்தும் கமலாஸனி விசனத்தோடு கூடியவளாகவேயிருந்தாள். அவள் தன் தாயுடன் அநேக கச்சேரிகளுக்கும் நாடகங்களுக்கும் போய்க்கொண்டிருந்தாளெனினும் பால பருவமுள்ள பெண்ணுக்கு இருக்க வேண்டிய உற்சாகமும் தெம்பும் அவளிடமில்லாமற்போயின. வெளியே சென்று நல்ல காற்றைச் சுவாசித்தால் தன் மகள் சுகமடைவாளென்றெண்ணி, ஸரஸ்வதி அவளைச் சமுத்திரக் கரைக்கும் சிங்காரவனத்திற்கும் அழைத்துப்போனாள்; அதனாலும் குணமடையவில்லை. நாளுக்கு நாள் கமலாஸனியின் தேகம் ஒடுங்கிக்கொண்டே வந்தது. ஸரஸ்வதி தன் மகளை உற்சாகப்படுத்தப் பலவாறு முயன்றும் பயன் படாமற்போயிற்று.

தீனதயாளு அடிக்கடி ஸரஸ்வதியின் பங்களாவுக்கு வந்து கொண்டிருந்தான். அவனும் பல்லாவரத்தைவிட்டு நுங்கம்பாக்கத்திற்கு வந்து விட்டான். அவனுக்கும் கருணாகரர் குடும்பத்திற்கும் உண்டான சிநேகம் எப்பொழுதும் நீங்காமலிருக்கவேண்டுமென்பது அவனுடைய முக்கிய கருத்து. அவன் எப்பொழுது வந்தபோதிலும் ஸரஸ்வதி அவனை

மகிழ்ச்சியுடன் வரவேற்று உபசரித்து வந்தனள். அவன் கமலாஸனியிடம் வெகு வினயமாய் நடந்துகொண்டான். அவன் கமலாஸனியைக் காணும்போதெல்லாம் சில நாளைக்கு முன் பல்லாவரத்தில் நிகழ்ந்த ஓர் சம்பவம் ஞாபகத்திற்கு வந்ததெனினும் அவன் பேச்சினுலாவது பார்வையினுலாவது கமலாஸனியை இழிவுபடுத்தினுனல்லன். அவன் எவ்விதத்திலும் அவளுடைய நண்பன்போலவே நடந்து வந்தான்.

கமலாஸனி அவனை விரும்பவில்லை—அவளுக்கு அவன் மீது அன்புண்டாயிருக்குமென்பது சந்தேகந்தான்—ஆனுலும் அவள் அவனை முன்னே வெறுத்ததுபோல் இப்பொழுது வெறுக்கவில்லை. அவள் கொண்ட வெறுப்பு நாளுக்கு நாள் குறைந்து கொண்டுவர ஆரம்பித்தது.

தீனதயாளு முன்னிலும் இப்பொழுது மிக்க சந்தோஷமுடையவனுயிருந்தான். அவன் எண்ணியவாறே இதுவரையில் எல்லாம் திருப்திகரமாய் முடிந்துவிட்டன. பல்லாவரத்தில் அவன் செய்த உபாயம் சரியாய்ப் பலித்துவிட்டது; செல்வராஜன் எங்கேயோ ஓடிப்போய் விட்டான்; அவனைப் பற்றி விசாரிக்கத் தீனதயாளு கவலையெடுத்துக் கொள்ளவேயில்லை. வேண்டும்போது கமலாஸனியின் செல்வம் கிடைப்பதாயிருந்தது—அதைச் சீக்கிரமே வாங்கிக்கொள்ளவேண்டுமென்று எண்ணியிருந்தான். செம்பு வியாபாரமும் திருப்திகரமாக இருந்தது. அடுத்த முறை தான் கமலாஸனியின் அபிப்பிராயத்தைக்கேட்டால் அவள் யாதும் தடைசொல்ல மாட்டாளென்று அவன் நிச்சயமாய் எண்ணியிருந்தான். அவள் அவனைக் காதலிக்கவில்லையென்பது நிச்சயம்—அவன் உலக அனுபவமுடையவனுதலால் அதை நன்ருய் அறிந்துகொண்டான்; ஆனுல் அதைப்பற்றி ஆவதென்ன? ஒரு விஷயந்தான் அவன் கோரியவாறு முடியாமற்போயிற்று; ஆனுல் அது மிகவும் சொற்ப விஷயமாக விருந்தது—தங்கமணி சென்னையைவிட்டுப் போகவில்லை. அவன் தான் செய்த உபாயத்திற்கு உடந்தைக் காரனுயிருந்ததற்காக, தீனதயாளு அவனுக்குப் பெருந்தொகை கொடுத்துச் சென்னையைவிட்டுப் போய் விடும்படி கேட்டுக்கொண்டான். தங்கமணி பணந்தை மாத்திரம் பெற்றுக்கொண்டானேயொழிய சென்னையைவிட்டுச்செல்ல உடன் பட்டானல்லன். அவனை வற்புறுத்தினுல் யாது சம்பவிக்குமோ வெனப்பயந்தவனுய்த் தீனதயாளு சும்மா இருந்துவிட்டான். தங்கமணி தீனதயாளுவின் வசத்தில எப்படிச் சிக்கியிருந்தானே அங்ஙனமே அவன் குடுமியும் தங்கமணியின் கையில் அகப்பட்டுக் கொண்டிருந்தது.

மேகநாதனும் மிக்க நம்பிக்கையோடு கூடினவனுயிருந்தான்; தனக்குத் தெரிந்த வரையில் தீனதயாளு அண்டு கம்பெனி செய்த வியாபாரங்களில் இப்பொழுது செய்யும்

செப்பு வியாபாரமே அதிகலாபம் தரத்தக்கதென்று எண்ணினான். செம்பின் விலை முன்னமே அதிகரித்துவிட்டது. இவர்களுக்குப் போட்டியாக இதரர்கள் வாங்கியதினாலேயே விலை ஏறிவிட்டது. ஆனால் அவர்கள் தக்ககாலத்தில் வாங்கவில்லை. தீனதயாளு அண்டு கம்பெனியார் இரண்டு மாதங்களுக்கு முன்னமே வாங்கிவிட்டபடியால் குறைந்தவிலைக்குக் கிடைத்துவிட்டது. இவர்களுக்குப் போட்டியாக வாங்கியவர்கள் பொறுத்து வாங்கியதால் அதிக விலை கொடுத்து வாங்கும்படி நேரிட்டது; ஆகையால் அவர்களுக்கு அதிக லாபம் கிடைப்பது கஷ்டமாக இருந்தது. மேகநாதன் ஒரு முறை தன் எஜமானனைக் கண்டு பேசியபொழுது "அதிகலாபஞ் சம்பாதிக்கவேண்டுமானால் எந்த வஸ்துவையும் அதிக விலை கொடுத்து வாங்கலாகாது" என்று சொல்லியிருந்தான். அதனுண்மையை அங்கீகரித்தவனாய்த் தீனதயாளு தலையை அசைத்தான். செப்பு வியாபாரம் இங்ஙனமாயிற்று. தீனதயாளு செம்பை என்ன விலைக்கு விற்கவேண்டுமென்று முன்னமே நிர்மானித்திருந்தானெனினும் அதைத் தன் கம்பெனி மானேஜரிடம் கூறினானல்லன்.

ஸரஸ்வதி சென்னைக்குத் திரும்பிவந்த ஒரு வாரத்திற்குப் பிறகு தான் தீனதயாளுவும் அவன் குமாஸ்தாவும் மேற்கூறியபடி ஸம்பாஷிக்கலாயினர். மேகநாதன் யூகத்துடன் கவனிப்பவனாயிருந்தால் தன் எஜமானன் முன்னைவிட நேர்த்தியான உடைதரித்துக் கொண்டிருந்தானென்பதை அறிந்து கொண்டிருப்பான். அவன் தரித்திருந்த உடை புதியதாயும் விலையுயர்ந்ததாயுமிருந்தது. அவனைப் பார்க்கும்போதே அவன் ஏதோ புதிய ஏற்பாடு செய்துகொண்டிருந்தானென்று யாவருக்கும் விளங்கும்.

தான் ஆடிக்கொண்டிருந்த ஆட்டத்தின் தோல்வியையாவது கெலிப்பையாவது சீக்கிரமே கண்டறிய வேண்டுமென்று தீனதயாளு நிர்மானிக்கலாயினான். கூடியசீக்கிரத்தில் கமலாஸனியின் அபிப்பிராயத்தைக் கேட்பதே லக்ஷ்யமென்றெண்ணி ஒரு நாள் சாயங்காலம் திருவல்லிக்கேணிக்குப் புறப்பட்டான்.

இங்ஙனமாக அவன் சென்றுகொண்டிருந்த சமயத்தில் கமலாஸனி தன் படுக்கை யறையில் புஸ்தகமுங் கையுமாய்ப் படித்திருந்தாள். ஸரஸ்வதி தன் மகளுக்குத் தனிமை இதம் பண்ணுமெனக் கருதியவளாய் அவளைப் பிரதி தினமும் இரண்டு மணி நேரம் தனியாயிருக்கும்படி செய்துவந்தாள். ஆனால் அதனாற் கமலாஸனிக்கு எவ்விதத்திலும் சுகமுண்டாக வில்லை. அவள் மனதிற் பற்பல எண்ணங்கள் தோன்றிக் கொண்டிருக்கும். அவள் தன் மனதை எவ்வளவு தான் வசப்படுத்த முயன்றும் அவ்வெண்ணங்கள் மனதைவிட்டு நீங்க

வில்லை. ஆகவே நாளுக்கு நாள் அவள் மனவமைதி குறைந்து கொண்டே வந்தது.

செல்வராஜனைப்பற்றிய எண்ணங்களே அவள் மனதில் எந்நேரமும் குடிகொண்டிருந்தன. நாளாக ஆக அவள் அவன் மேற்கொண்ட கோபமுங்குறைய ஆரம்பித்தது. அவன் தன்னிடம் உண்மையாகவே நடந்து கொண்டிருப்பானென்று அவளுக்கு இப்பொழுது தோன்றியது. தான் அவன்மேல் பிசகான அபிப்பிராயங் கொண்டிருக்கலாமென்று அவள் எண்ணினாள்—அதற்குமேல் அவளால் ஒன்றும் யோசிக்க முடியவில்லை. அவள் இப்பொழுது எண்ணியது சரியாயிருந்தால் அவள் என்ன தீங்கிழைத்தவளாவாள்! இனி அதைப்பற்றி நினைப்பதால் யாது பயன்? அவன் எங்கேயோ சென்றுவிட்டான். ஆகவே அவள் அவனை மறந்துவிடவேண்டும்—அவள் அவனோடு ஒரு காலும் பழகாதவள் போலவே தன் வாழ்நாளைக் கழிக்கவேண்டும்.

இரண்டு வாரங்களாகச் செய்ததுபோலவே இப்பொழுதும் அவள் அம்மாதிரி தீர்மானஞ்செய்து முடிக்கலானாள். அச்சமயம் ஸரஸ்வதி அவளிடம் வந்து "கமலா, வெளியே போகலாமென்று நினைக்கிறேன். நீயும் வருகிறாயா? மோட்டார்காரில் உட்கார்ந்துகொண்டு வருவதால் உனக்கு யாதொரு கஷ்டமும் உண்டாகாதென்று நினைக்கிறேன்" என்றாள்.

கமலாஸனி ஏதோ யோசனைசெய்து கொண்டே "நான் கூடவா வெளியே வரவேண்டும்?" என்றனள்.

ஸரஸ்:—ஆம், நீ அதற்குத் தடைசொல்ல மாட்டாயென்று எண்ணுகிறேன். நான் எதைச்சொல்லியபோதிலும் உனக்குச் சம்மதமிருப்பதில்லை.

கமலா:—(இஷ்டமில்லாமல்) எனக்கு யாதொரு தடையுமில்லை. ஆனால் எனக்கு இப்பொழுது வெளியே வரச்சம்மதமில்லை; எனினும் நீ போவதை வேண்டாமென்று தடுக்கிறேன்.

ஸரஸ்:—நான் சொல்வதும் அது தான். உனக்கு எதைப் பற்றியும் அவசியமில்லை. நீ பைத்தியக் காரியைப்போல் இங்கு மங்கும் திரிகிறாய்; தீனதயாளு நம்மைப் பெங்களூருக்கு அழைத்துப் போவதாகக் கூறியபோது நீ அதைக் காதில் போட்டுக்கொள்ளவேயில்லை. அவர் அவ்வளவு பக்ஷமாயிருந்தும் நீ அவரை அலக்ஷியஞ்செய்வது தகுதியோ?

கமலா:—பெங்களூருக்குப்போவதற்கு நான் யாதொரு தடையுஞ்சொல்லவில்லை. அவர் அதைப்பற்றி என்னிடமா கூறினார்?

ஸரஸ்:—உனக்கு இஷ்டமில்லையென்பதைத் தெரிந்து கொண்டு அவர் அவ்விஷயத்தைப்பற்றிப் பேசுவதை நிறுத்திவிட்டார்.

அவள் இங்ஙனஞ்சொல்லி முடித்ததும் ஒரு வேலைக்

சாரன் அவ்விடம் வந்து தீனதயாளு வந்திருப்பதாகத் தெரிவித்தான். ஸரஸ்வதி மிக்க சந்தோஷத்துடன் சென்று அவனை வரவேற்றனள். அவ்விருவரும் உரத்த குரலுடன் சந்தோஷமாய்ப்பேசியது கமலாஸனியின் காதில் விழுந்தது. அவன் வந்தது தனக்கு மிக்க களிப்பை யுண்டுபண்ணியதென்றும், அவனைக் கண்டால் தன் மகளும் சந்தோஷமடைவாளென்றும் ஸரஸ்வதி தீனதயாளு விடம் சொன்னாள். பிறகு அவ்விருவரும் சற்றுநேரம் வரையில் இரகசியமாய்ப் பேசிக்கொண்டிருந்தனர். அவர்கள் எதற்காக அங்ஙனம் பேசினார்களென்று கமலாஸனி சந்தேகமுற்றாள்.

ஐந்து நிமிஷநேரம் கமலாஸனி ஜன்னலின் வழியாய்ப் பார்த்துக்கொண்டு நின்றாள். உடனே தீனதயாளு கதவைத் திறந்துகொண்டு அவளிடம் வந்தனன். அவன் அவளைநோக்கி "கமலாஸனி! உத்தரவில்லாமல் வந்ததற்காக என்னை மன்னிக்கவேண்டும்" என்று கூறினான்.

கமலாஸனி தானெதிர்பார்த்தது—தீனதயாளு தன்னை மணந்து கொள்ளும்படி கேட்பானென்பது—கூடியசீக்கிரத்தில் நடந்தேறுமென்று எண்ணியவளாய் அவனை நோக்கி "இல்லை, நான் மன்னிக்கவேண்டுவதில்லை. தயவுசெய்து உட்காருங்கள்" என்றனள்.

தீனதயாளு "அப்படியானால் நான் மிகுந்த பாக்கியசாலி" என்று சொல்லிக்கொண்டே உள்ளே வந்தான்.

கமலாஸனி கட்டிலின்மேல் சாய்ந்தவண்ணம் நின்றிருந்தாள். அவள் என்ன செய்வதென்று இது வரையில் தீர்மானிக்கவில்லை. பல்லாவரத்தில் அன்றைய இரவு நடந்த சம்பவத்திற்குப் பிறகு, தீனதயாளு தன்னை மணஞ்செய்து கொள்ளும்படி கேட்பானென்பதை நிச்சயமாயறிந்திருந்தும் அவனுக்கு என்ன பதில் சொல்வதென்று இது வரையில் ஆலோசித்து முடிக்கவில்லை. தன் தாயார் தீனதயாளுவின் விஷயத்தில் என்ன அபிப்பிராயம் கொண்டிருந்தாளென்பது அவளுக்கு நன்றாய்த் தெரியுமாதலால் தான் அவன் வேண்டுகோளை இம்முறையும் மறுத்துவிட்டால் தன் தாயார் மிகவும் கோபிப்பாளென்று எண்ணலாயினாள். அவள் தீனதயாளுவின் வேண்டுகோளுக்கு ஏன் சம்மதிக்கக்கூடாது? இன்னும் யாரையேனும் விவாகஞ்செய்து கொள்வதைவிட அவனை ஏன் தன் கணவனாகப் பெறக்கூடாது?

தீனதயாளு ஒரு நாற்காலியில் அமர்ந்ததும் கமலாஸனியையும் உட்காரச்சொன்னான். அவள் புன்னகையுடன் "இல்லை, இன்று பகலெல்லாம் படுத்துக் கொண்டிருந்தேனாகையால் இப்பொழுது நின்றிருக்கிறேன்" என்றனள்.

தீனதயாளு ஏதேனுமொரு விஷயத்தைப்பற்றிப் பேசவேண்டுமானால் இருமிக்கொண்டே ஆரம்பிப்பது வழக்கம்.

ஆகவே இப்பொழுதும் அவன் இருமிக்கொண்டு கமலாஸனியை நோக்கி "கமலாஸனி! உன்னைக் கண்டு பேசவேண்டுமென்றே இப்பொழுது இங்கு வந்தேன். உன் தாயார் பல்லாவரத்தில் விவாக விஷயமாக உன்னைக் கேட்டதை மறந்திருக்க மாட்டாயென்றே நினைக்கிறேன். இம்முறை உன் தாயாரின் வேண்டுகோளின்படி நானே உன் அபிப்பிராயத்தைக்கேட்க நேரில் வந்திருக்கிறேன். கமலா—நான் உன்னை அங்ஙனம் அழைக்கலாமன்றோ?—அன்றைய தினம் உன் தாயார் சொல்லியதையெல்லாம் மறுபடியுஞ்சொல்ல எனக்கு இஷ்டமில்லை. அதையெல்லாம் நீ ஞாபகத்தில் வைத்திருப்பாயென்று நம்புகிறேன். நான் உன்மேல் கொண்ட காதல்—குறையாமலிருக்கிறது. மனப்பூர்வமாய் உன்னைக் காதலித்து என்னெண்ணத்தை உன்னிடம் வெளியிடச்சொல்லி இது வரையில் பொறுமையுடன் காத்திருந்தேன். நீ முதலில் என் வேண்டுகோளுக்குச் சம்மதிக்காததற்குத் தகுந்த காரணமிருந்தது. அக்காரணம் இப்பொழுதும் இருந்திருக்குமானால் உன்னிடம் வந்திருக்கவேமாட்டேன். கமலா, அந்தக் காரணம் இப்பொழுது நீங்கிவிட்டது—அது இனி எப்பொழுதும் இருக்கமுடியாது" என்று கூறிவிட்டு அவள் மறுமொழியை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான்.

கமலாஸனி ஜன்னலைப்பார்த்த வண்ணம் நின்றுகொண்டு ஏதோ யோசனை செய்யலாயினள். அவள் யாதும் பேசாது பெருமூச்செறிந்து கொண்டிருந்தாள்.

தீனதயாளு மறுபடியும் அவளை நோக்கி, "கமலா, இம்முறையும் என் வேண்டுகோளை மறுக்கமாட்டாயே? என்னை மறுபடியும் நீக்கிவிட மாட்டாயே? நான் எங்ஙனம் உனக்காகக் காத்திருந்தேனென்பதையும் உனக்கு எப்படி உதவி புரிந்திருக்கிறேனென்பதையும் நினைத்துப்பார். எனக்குரியனயாவும் உன்னுடையனவே. என்னையும் எனக்குச் சொந்தமானவைகளையும் உன் பாதங்களில் வைத்து விடுகிறேன்! கமலா! என்மேல் பக்ஷமிருக்குமா? என் வேண்டுகோளுக்கு இணங்குகிறாயா?" என்றான்.

கமலாஸனி தன்னைத் தைரியப்படுத்திக் கொண்டாள். அவள் ஒத்துக்கொள்ளவாவதுவேண்டும், மறுத்துவிடவாவது வேண்டும். தான் மறுத்துவிட்டால் தன் தாயார் மிகவும் கோபங்கொள்வாளென்று பயந்தவளாய் அவள் தன் அபிப்பிராயத்தைமாற்ற ஆரம்பித்தனள். அவள் தீனதயாளுவை நோக்கி "ஐயா! நான்—உங்களை—உங்களைக் காதலிக்கவில்லையென்று சொல்லவேண்டியவளாயிருக்கிறேன். ஆனால்—" என்று கூறிவிட்டு மயங்கினாள்.

தீன:—ஆனால் என்னைக் காதலிக்கும்படி உனக்குக் கற்பிக்கிறேன், நாளடைவில் எல்லாம் சரியாய் விடும்.

கமலா :—நான் உங்களைக் காதலிக்கவில்லை; ஆனால்—ஆனால்—நீங்கள் ஒரு முறை என்னிடம் மிகுந்த அன்பு பாராட்டியிருக்கிறீர்களே! நான் செய்யும் மரியாதையோடு நீங்கள் திருப்தி யடைந்தால்—

தீன :—இனி ஒன்றுங் கூறவேண்டாம். உன்னைப் பெறுவதே பெரும்பாக்கியம்! என்னை விவாகஞ்செய்து கொள்ளுகிறாயா? சொல். கமலாஸனி "ஆகட்டும்" என்று மெதுவாகக் கூறினாள்.

தீனதயாளு வெகு சந்தோஷத்துடன் ஸரஸ்வதியிடஞ் சென்று நிகழ்ந்ததை வெளியிட்டான். அதைக் கேட்டதும் ஸரஸ்வதி ஸந்தோஷமுற்றாள்.

## 23 சுந்தரம் சந்தேகமுற்றான்.

தீனதயாளு அன்று சாயந்திரம் நுங்கம்பாக்கத்திற்குச் சென்றதும் தன் தனியறையில் உட்கார்ந்துகொண்டு சுந்தரத்துக்கு ஒரு கடிதமெழுதினான். அதில் "என்னருமை மித்திரனை சுந்தரம்! நாளைய காலையில் என்னைக் கம்பெனியில் வந்து பார்க்க முடியுமா? நான் 12 மணி வரையில் அங்கே தான் இருப்பேன். கமலாஸனியின் செல்வத்தைப்பற்றித் தகுந்தபடி ஏற்பாடு செய்திருப்பதால் அதை உடனே பெற்றுக் கொள்ளவேண்டுமென்று இருக்கிறேன்" என்று எழுதி அதைப் பல முறை படித்துக் கடைசியாக அதில் கையெழுத்துப் போட்டான். ஐந்து நிமிஷத்துக்கெல்லாம் அது தபாற் பெட்டியிற் போடப்பட்டது.

தீனதயாளு தானெடுத்துக்கொண்ட காரியத்தில் ஜயமடைந்ததை எண்ணி மகிழ்ச்சி யடையலானான். கமலாஸனி தன்னை மணம்புரிந்து கொள்வாளென்று நிச்சயமாய்த் தெரியும் வரையில் அவள் பணத்தைக் கைப்பற்றுவது கூடாதென்று எண்ணியிருந்தான். இப்பொழுது கமலாஸனி தன் வேண்டுகோளுக்கு இணங்கிவிட்டபடியால் யாதொரு இடையூறும் சம்பவிப்பதற்கு முன்னரே அவள் செல்வத்தைக் கைப்பற்றவேண்டுமென்று அவாவுற்றான்.

அவன் மேஜையின்மேலிருந்த விளக்கின் ஒளியை மட்டுப்படுத்தி விட்டு நாற்காலியில் படுத்துக்கொண்டு பெருமூச்செறிந்தான். அநேக வாரங்களாக அவன் மனதில் குடிகொண்டிருந்த கவலைகளெல்லாம் இப்பொழுது தான் அவனை விட்டு நீங்க ஆரம்பித்தன. தான் சுகமடைந்து விட்டதாகத் தானே சொல்லிக்கொண்டான்: கமலாஸனிக்குச் சொந்தமான நாற்பதினாயிரம் ரூபாயும் செப்பு வியாபாரத்திற்கிடைக்கும் லாபமும் தன்னைக் கரையேற்றி விடுமென்று அவன் நம்பியிருந்தான்.

இரண்டு மாதங்களாகத் தான் அனுபவித்த கஷ்டங்களை யெல்லாம் இப்பொழுது சிந்தித்துப் பார்க்கலானான். அவன் அப்பொழுது நித்திரையில்லாததினாலும் காலபோஜனம் இல்லாததினாலும் உடல் மெலிந்திருந்தான். அவன் முகத்தில் எந்நேரமும் கவலையாலுண்டான வரிகள் இப்பொழுது அதிகரித்திருந்தன. அவனைக் கண்ட கனவான்களெல்லாம் அவன் அளவுக்கு மிஞ்சி வேலைசெய்து வருகிறானென்றும் அவன் தேக சௌக்கியத்தைக் கவனியாமலிருந்தால் கூடிய சீக்கிரத்தில் இறந்து விடுவானென்றும் பேசிக்கொண்டனர். தினதயாளு அதைக்கேட்டு நகைப்பது வழக்கம்.

செல்வராஜன் விஷயத்தில் தான் செய்த சதியோசனை அவனுக்கு இப்பொழுது ஞாபகம் வரவேயில்லை. அவன் வியாபார சம்பந்தமாய் சில கம்பெனிகளை இங்ஙனம் நாசப்படுத்தியிருக்கிறான்; ஆகவே செல்வராஜன் விஷயத்தில் தான்செய்த தந்திரம் மிகவும் சொற்பமானதெனக் கருதலானான். பத்மாவதியைப் பற்றியும் அவன் நினைத்தானில்லை. அவளைப்பற்றி நினைக்கக்கூடாதென்று அவன் தீர்மானித்துவிட்டான். அவன் ஏதாவது வேலைசெய்து கொண்டிருக்கும்பொழுது அவள் அவன் மனதில் தோன்றுவதில்லை—கனவிலேனும் தனியாய் உட்கார்ந்து கொண்டிருக்கும் பொழுதேனும் அவள் ஞாபகம் வரும். அவன் அன்றிரவு கவலையற்று நன்றாய் நித்திரைசெய்தானாகையால் மறுநாட்காலையில் அவன் மிக்க சந்தோஷத்துடன் இருந்தான். மேகநாதன் தன் எஜமானன் முகத்திலிருந்த சந்தோஷக்குறியைக் கண்டு அவனுக்கு ஏதோ நல்ல காலம் வந்து விட்டதென்று அனுமானித்தான். அவ்விருவரும் செப்பு வியாபாரத்தைப் பற்றியே பேசலாயினர். எல்லா விஷயங்களும் திருப்திகரமாக நடந்து வந்தன. செம்பின் விலை மிகவும் அதிகரித்து விட்டது. மேகநாதன் டிராம்வே கம்பெனியார் முன்னமே செம்பு வாங்க ஆரம்பித்துவிட்டார்களென்றும் அவர்கள் கூடியசீக்கிரத்தில் அதிக விலைக்கு வாங்குவார்களென்றும் தன் எஜமானனிடந் தெரிவித்தான். தினதயாளு இவ்விஷயத்தில் பேராசை கொண்டு தனக்குக் கிடைக்கும் லாபத்தை இழந்துவிடக் கூடாதென்றெண்ணியிருந்ததால் கூடியசீக்கிரத்தில் சரக்கை விற்றுவிட வேண்டுமென்று தீர்மானிக்கலானான். இதற்கு முன் கம்பெனிக்குண்டான நஷ்டங்களையெல்லாம் இப்பொழுது லாபமாக மாற்றிவிடலாமென்று மேகநாதன் எண்ணியிருந்தான்.

தினதயாளு மேகநாதனை அனுப்பிய பிறகு, சுந்தரம் வருமளவும் உல்லாசமாய்ப் பொழுதுபோக்க எண்ணியவனாய் ஒரு சிகரெட்டைப் பற்றவைத்துக் கொண்டு இங்கு மங்கும் உலாவிக்கொண்டிருந்தான். சிகரெட் பாதியளவு ஆகுமுன்னரே சுந்தரம் அங்கே வந்து விட்டான். அவன் எப்பொ

ழுதும் போலவே சந்தோஷமுள்ளவனாகவும் சிறு பிள்ளைத் தனமுள்ளவனாகவும் காணப்பட்டான். அவன் மகிழ்ச்சியுடன் தீனதயாளுவின் கையைக் குலுக்கி "நண்பா, உன் ஜயத்திற் காக நான் மிகவும் சந்தோஷப் படுகிறேன்" என்றான்.

தீன :—என்ன—என்ன சொன்னாய்?

சுந் :—உனக்குச் சுபவார்த்தை சொல்லுகிறேன்.

தீன :—ஓ, வாஸ்தவந்தான். உனக்கு அவ்விஷயம் முன்னமே தெரியுமோ?

சுந்:—ஆம், தெரியும். ஸரஸ்வதி நேற்றைய இரவே தெரிவித்து விட்டாள். தீனதயாளு! நீ மிகுந்த பாக்கியசாலியென நினைக்கிறேன்.

தீன :—(சிரித்துக்கொண்டே) ஆம், அப்படித் தான் நினைக்கவேண்டியிருக்கிறது. எங்கள் குடும்பத்தின் அதிர்ஷ்டம் யாவருக்கும் தெரியும். ஏன் நிற்கிறாய்? உட்காரு.

சுந்:—(ஓர் நாற்காலியிலுட்கார்ந்து) ஆம், நான் அதைப் பற்றிக்கேள்வி யுற்றிருக்கிறேன். உன்னை விட்டுப்போனதும் கமலாஸனியிடஞ் சென்று அவளையும் விசாரிக்கவேண்டுமென்றிருக்கிறேன். சரி, அந்த சிற்பிப் பையன் சங்கதி என்னவாயிற்று?

தீன :—அவன் நல்ல தந்திரஞ்செய்தான்! நீ எச்சரிக்கை செய்திராவிடில் கமலாஸனியின் கதை வேறு மாதிரியாக இருந்திருக்கும். ஆனால் அவளை ஏமாற்ற ஒருவராலுமாகாது.

சுந் :—வாஸ்தவந்தான். அவள் மிகுந்த புத்திசாலியாயிற்றே.

தீன :—அவன் சங்கதி ஒன்றும் தெரியவில்லை. தன் ஜபம் சாயாதென்று கண்டு கொண்ட மாத்திரத்தில் அவன் எங்கேயோ ஓடிப்போய்விட்டான். அந்தப் பாழடைந்த வீடு காலியாக இருக்கிறது. அது இனி அம்மாதிரி தானிருக்கும்.

சுந் :—(பரிகாசமாய்) அவன் மிகுந்த புத்திசாலி! என் வீட்டிலுள்ள சமுத்திர கன்னிகையே அவன் செய்துள்ள சிலைகளுள் சிரேஷ்டமானது. அவன் அதற்குக் கமலாஸனியின் முகத்தை அமைத்தது மிகவும் விநோதமானது. கூடிய சீக்கிரத்தில் கமலாஸனிக்கு அந்தச் சிலையைப் பரிசளிக்கலாமென்றிருக்கிறேன்.

தீன :—(கோபங்கொண்டு) மிகவும் நல்ல காரியந்தான்! அம்மாதிரி செய்வது தகுதியா?

சுந் :—ஏன் தகுதியாகாது?

தீன :—அவள் அதை விரும்புவாளா? அது அவளுக்கு அடிக்கடி ஒரு விஷயத்தைப்பற்றி ஞாபகமூட்டி அவளை வருத்தாதா?

சுந் ;—ஓ, நீ சொல்வது சரிதான்.

தீன :—சரி, நம்முடைய வேலையைப் பார்ப்போமா?

சுந் :—ஆஹா, தயாராயிருக்கிறேன்.

தீன :—கமலாஸனியின் பணத்தைப்பெற்றுக் கொள்வதற்காகவே இப்பொழுது உன்னை இங்கே வரவழைத்தேன்.

சுந் :—சரி, அப்படியே ஆகட்டும். இப்பொழுது உனக்கு ஒரு செக் தருகிறேன்.

தீன :—அந்தப் பணம் உன் பேரில் பாங்கில் இருக்கிறதோ?

சுந் :—ஆம், பாங்கில்தான் போட்டு வைத்திருக்கிறேன்.

தீன :—சரி, அதனால் உனக்கு யாதொரு கஷ்டமுமுண்டாகாமலிருக்கும் பக்ஷத்தில் பணம் முழுவதையும் நோட்டுகளாக மாற்றிக்கொடுத்தால் நலமாயிருக்குமென்று நினைக்கிறேன்.

சுந் :—இல்லை, அதனால் எனக்கென்ன கஷ்டம்? நான் உடனே இதை முடித்து விடுகிறேன்.

தீன :—வேண்டியதில்லை. சரி, இன்றையதினம் செவ்வாய்க் கிழமையோ? வெள்ளிக்கிழமை பணத்தைவாங்கிக் கொள்ளலாம். அன்றையபகல் 11 மணிக்கு நீ இங்கே வரமுடியுமா?

சுந் :—(தீனதயாளுவின் உள்ளக்கருத்தையறியாதவனாய்) ஆகட்டும், வருகிறேன்.

தீன :—நல்லது, அப்படியானால் நான் உன்னோடு பாங்கிற்கு ஒரு குமாஸ்தாவை அனுப்புகிறேன். நான் சொல்வதைக்கேட்டு ஆச்சரியப்படாதே. ஒருவன் நாற்பதினாயிரம் ரூபாயைச் சட்டைப்பையில் வைத்துக்கொண்டு ஜாக்கிரதையில்லாமல் செல்லலாமா? இது வியாபார சம்பந்தமான முன் ஜாக்கிரதையேயன்றி வேறன்று.

சுந் :—(சிரித்துக்கொண்டே) பரிகாசஞ் செய்கிறாயா என்ன? என்னைக் கொள்ளையடித்து விடுவார்களென்று நினைக்கிறாயோ?

தீன :—நீ பாங்கில் நின்றுகொண்டு நோட்டுகளைச் சட்டைப்பையில் அடைத்துக் கொள்வதைக் கை வித்தையில் தேர்ந்த சனவான்கள் காண்பார்களாகில் அவர்கள் எப்படியாவது பணத்தை அபகரித்துக்கொண்டுபோய் விடுவார்களென்பதில் ஐயமேதுமில்லை.

சுந்தரம் தீனதயாளுவிடங் கூறியதுபோலவே வெள்ளிக்கிழமை பகல் 11 மணிக்குக் கம்பெனிக்கு வந்து சேர்ந்தான். தீனதயாளு அவனுடன் ஒரு குமாஸ்தாவைக் கூட்டி அனுப்பச்சித்தமாயிருந்தான். அந்தக் குமாஸ்தா கையில் ஒரு தோற்பெட்டியை வைத்திருந்தான். அது ஓர் வெள்ளிச்சங்கிலியால் அவன் கையில் கட்டப்பட்டிருந்தது. தீனதயாளுவின் மோட்டார்கார் கம்பெனி வாசலில் வந்துநின்றது. தீனதயாளு சுந்தரத்தையும் குமாஸ்தாவையும் அதிலேற்றிவிட்டுச் சற்று

நேரம் அவர்கள் சென்றதைப்பார்த்துக் கொண்டிருந்தான். இரண்டு நிமிஷத்திற்கெல்லாம் அவன் தன் அறையில் வந்து வாயில் ஒரு சிகரெட்டை வைத்துக்கொண்டு சுந்தரத்தின் வருகையை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். அவனுக்கு தற்சமயம் மிக்க சந்தோஷமுண்டாயிற்று. இரண்டு மாத காலமாய் மிகுந்த துன்பத்தை அனுபவித்து வந்தானாதலால் இப்பொழுது சுகமுண்டாவது சகஜமென்றே அவன் எண்ண லானான். ஆனால் அவன் தன் மனதிற்குள் பொங்கி யெழும்பிய ஆனந்தத்தை வெளிச்சுக் காட்டாமல் அமைதியுடனிருந்ததுபோல் வேறெவரும் இருக்கமுடியாது.

மேகநாதன் தன்னைக் கண்டு பேச விரும்பியதாகத் தெரிந்துகொண்டு தீனதயாளு அவனை அங்ஙனமே வரும்படி பதில் தெரிவித்தான்.

மோட்டார்காரில் சென்ற சுந்தரம் என்று மில்லாமல் தீனதயாளு அவசரமாய் நடந்துகொண்டதின் காரணம் யாதாயிருக்கலாமென்று யோசிக்கலாயினான். எவ்வளவு நேரம் யோசித்துப்பார்த்தும் ஒன்றும் விளங்கவில்லையாதலால் அதில் ஏதோ மர்மமிருக்கவேண்டுமென்று சுந்தரம் சந்தேகமுற்றான்.

## 24. கமலாஸனியை உடனே மணக்கவேண்டும்.

மேகநாதன் உள்ளே வந்ததும் தீனதயாளு அவனைக் கவனத்துடன் பார்த்தான்; அவன் முகத்தைக் கண்டவுடனே ஏதோ துன்பம் நேரிட்டிருக்க வேண்டுமென்றறிந்து கொண்டான். மேகநாதனுடைய முகம் வெளுத்திருந்தது; அவன் நெற்றியில் வியர்வைத் துளிகள் நிறைந்திருந்தன. அவன் கதவை மூடியபொழுது அவன் கை நடுங்கியது. தீனதயாளு சிகரெட்டைக் கீழே எறிந்துவிட்டுச் சமாசாரத்தைக் கேட்கச் சித்தமாயிருந்தான். அவன் தன் குமாஸ்தாவை நோக்கி "மேகநாதா, என்ன சங்கதி?" என்று அமைதியுடன் கேட்டான்.

மேகநாதன் கதவை மூடிக்கொண்டு உள்ளே வந்து ஒரு நாற்காலியண்டைசென்று நின்றான். சற்று நேரம் அவன் யாதும் பேசாது நின்றுவிட்டுப் பிறகு பேசவாயெடுத்தான். தீனதயாளு உடனே அவனை நோக்கி "மேகநாதா, என் மயங்குகிறாய்? உட்காரு. சொல்லவேண்டியதைச் சற்றுப்பொறுத்துச் சொல்லலாம்" என்று கூறிவிட்டு அவனிடம் ஒரு டம்ளர் ஸோடா கொடுத்தான்.

மேகநாதன் என்ன சொல்வானோவென்று தீனதயாளு மேஜையின் மேற்சாய்ந்தவண்ணம் ஆவலோடு எதிர்பார்த்து

கொண்டிருந்தபோது தன் முகம் வெளுத்திருந்ததைக் கண்ணாடியில் பலமுறை பார்க்கலாயினன். பிறகு தனக்கு என்ன நிலைமை நேரிட்டிருக்கலாமென்று ஆலோசித்துக்கொண்டேயிருந்தான்.

மேகநாதன் ஸோடாவைக் குடித்தானதும் அவன் முகம் சிவக்க ஆரம்பித்தது. தீனதயாளு தன் முகத்தைக் கைக்குட்டையால் துடைத்துக்கொண்டே அவனை ஜாடையாய்ப் பார்த்தான்.

தீன :—சரி, என்ன சங்கதி?

மேக :—ஐயா, நானெங்ஙனம்—சொல்லப்போகிறேன்—நான்—

தீன :—பயப்படவேண்டாம். சொல் சீக்கிரம்.

மேக :—டிராம்வே கம்பெனியார்—

தீன :—சரி, அதற்குமேல்—

மேக:—செம்பு வாங்குவதை நிறு—நிறுத்திவிட்டார்கள்.

தீன :—ஐயையோ!

அதைக்கேட்டதும் தீனதயாளு மிகவும் திகிலடைந்தான்; மேகநாதனும் மிக்க கலக்கமுற்றான். டிராம்வே கம்பெனியார் சரக்கு வாங்குவதை நிறுத்தி விடுவாரகளென்று முன்னமே தெரிந்திருந்தால் தீனதயாளு தான் வாங்கி வைத்திருந்த சரக்கை முன்னமே விற்று விட்டிருப்பான்.

தீனதயாளு மேஜையின்மேல் சாய்ந்தவண்ணம் முகத்தைக் கைகளால் மறைத்துக்கொண்டு அசைவற்று உட்கார்ந்திருந்தான். அவன் ஐந்து நிமிஷம் வரையில் யாதும் பேசாமலிருந்துவிட்டுப் பிறகு மேகநாதனை நோக்கி "அது நிச்சயந்தானு? ஒன்றும் சந்தேகமில்லையே?" என்று கேட்டான்.

மேகநாதன் தலையை யசைத்துக்கொண்டே "இல்லை, நான் கம்பெனிக்குச் சென்று மானேஜரிடமிருந்து நேரில் தெரிந்துகொண்டு வந்தேன்" என்றான்.

தீனதயாளு நாற்காலியை விட்டெழுந்து சாய்ந்த தலையோடும் தெரித்த புருவங்களோடும் இங்கு மங்கும் நடந்துகொண்டே ஏதோ சிந்திக்கலாயினன். அவன் இனி நடக்க வேண்டிய சங்கதியைப்பற்றி ஓர் விதமாய் யோசனைசெய்து முடித்தான்.

பிறகு அவன் மேகநாதனைப்பார்த்து, "சரி, அப்படியானல் செம்பு விலை குறைந்து விடும். முன்னே வாங்கியவர்களெல்லாம் இப்பொழுது விற்று விடுவார்களாதலால் நாமும் அங்ஙனமே செய்வது நலம். இனி நாம் தாமதிக்கலாகாது. மேகநாதா, இதனல் நமக்கெவ்வளவு நஷ்டமுண்டாகும்." மேகநாதன் சற்றுநேரம் மனதினலேயே கணக்குப்பார்த்துவிட்டுப் பிறகு "நாலாயிரம் ரூபாய் நஷ்டம் வரும்; அதற்கு மேலிராதென்று நினைக்கிறேன்" என்றான். உடனே தீனதயாளு தன்

சட்டைப் பையிலிருந்த குறிப்புப் புத்தகத்தை யெடுத்து அதிலுள்ள சில விஷயங்களை அதிக கவனத்துடன் பார்த்துக் கொண்டிருந்தான். அப்புத்தகத்திலேயே கம்பெனியின் இரகசியங்களடங்கியிருந்தன; அதைப் பார்க்கவேண்டுமென்று மேகநாதன் பல முறை முயன்றும் பயன் படாமற்போயிற்று. இவ்வளவு நஷ்டமுண்டாயும் தீனதயாளு மிகவும் அமைதி யுடையவன்போல் நடித்து வந்தானாதலால் அதைக் கண்டு மேகநாதன் ஆச்சரியப்படலானான். சற்று நேரமானதும் தீனதயாளு குறிப்புப் புத்தகத்தை மூடிச்சட்டைப்பைக்குள் வைத்துக்கொண்டான்.

தீனதயாளு தன் குமாஸ்தாவை நோக்கி "மேகநாதா, நமக்கு மிகுந்த நஷ்டமுண்டாய் விட்டது. இருந்தாலும் சகித்துக்கொள்ளலாமென்று நினைக்கிறேன்" என்றான். அதைக்கேட்டதும் மேகநாதன் சந்தோஷமுற்றவனாய் "ஐயா நீங்கள் இங்ஙனங் கூறுவது எனக்கு மிக்க தைரியத்தையுண்டு பண்ணுகிறது" என்று சொன்னான்.

தீன :—நாம் அதைச் சகித்துக்கொள்ளலாமென்றே நினைக்கிறேன். ஆனால் என் சொத்துக்களை விற்றால் தான் வியாபாரம் தடைப்படாமல் நடக்கும்.

மே:—ஆம், அப்படித் தான் செய்யவேண்டும். இப்பொழுது நஷ்டமுண்டாயிற்றென்று கம்பெனியை மூடிவிடுகிறதா? கூடாது.

பிறகு இருவரும் இனி நடக்கவேண்டிய விஷயங்களைப் பற்றிப் பலவாறு பேசிக்கொண்டிருந்தனர். தீனதயாளு நாற்பதினாயிரம் ரூபாயோடு சுந்தரத்தின் வரவை எதிர்பார்த்திருந்தால் சீக்கிரமே சம்பாஷணையை முடித்துவிட்டுத் தனியாக இருந்தான். அப்பொழுது அவன் முகக்குறி மாறியது; மேகநாதன் இருக்கும்போது தோன்றிய நம்பிக்கை அவன் முகத்தை விட்டு விலகியதால் துக்கக்குறி குடிகொண்டது. அவன் வெளிப்பார்வைக்கு மாத்திரம் தைரியமாயிருப்பதாக நடித்து வந்தானே யொழிய, கம்பெனி அதோ கதியாய்ப் போய்விடுமெனபதை அவன் நன்றாக அறிந்திருந்தான்.

டிராம்வே கம்பெனியார் செம்பு வாங்குவதை நிறுத்தி விட்டார்களென்று மேகநாதன் கூறியதே தீனதயாளுவை வருத்தியது. அதனால் தனக்குண்டான நஷ்டத்தை எண்ணி யெண்ணி அவன் மனங்கலங்கினான். அவன் நாற்காலியை விட்டெழுந்து இங்கு மங்கும் நடந்து கொண்டிருந்தான். அப்பொழுது தான் இனி என்ன செய்யவேண்டுமென்று தீர்மானித்து விட்டான். சாதாரணமான ஒருவன் அம்மாதிரி தீர்மானிக்கிருக்கமாட்டான். அவன் இந்நாட்டைவிட்டு ஓடிப் போய்விட வேண்டுமென்று உறுதி செய்துகொண்டான். அவன்கிடைக்கக்கூடிய பணத்தையெல்லாம் எடுத்துக்கொண்டு

கமலாஸனியை மணஞ்செய்து கொண்டவுடன் எங்கேயாவது தூரதேசத்திற்குப் போய்விடவேண்டுமென்று தீர்மானிக்கலாயினன். ஆகையால் மூன்று மாதம் வரையில் கம்பெனியை நடத்தி வருவதுபோல் பாசாங்கு செய்யவேண்டுமென்று எண்ணினன்.

மேகநாதன் அவனோடு சம்பாஷித்திருந்தபொழுது தீனதயாளுவின் மனதில் இவ்வித எண்ணங்கள் தோன்றலாயின. அவன் தன் குமாஸ்தாவுக்குத் தெரியாமலே மேற்கூறிய விஷயங்களை முடித்து விடவேண்டுமென்று எண்ணியிருந்தான். தீனதயாளுவின் ஸ்திதி முற்றும்—நுங்கம்பாக்கத்திலும் கோடம்பாக்கத்திலுமுள்ள பங்களாக்களும் அவனுடைய மிட்டாவும் மற்றுமுள்ள சாமான்களும் கடன்காரர்களுக்கு ஈடுவைக்கப்பட்டிருந்த சங்கதி மேகநாதனுக்குத் தெரியாது. அங்ஙனங் கிடைத்த பொருளைக்கொண்டே இதுவரையில் கம்பெனியை நடத்திவந்தான். இப்பொழுது செம்புவாங்கியதும் அப்பணத்தைக்கொண்டு தான்.

ஒரு மணிநேரத்திற்கெல்லாம் சுந்தரம் அங்கே வந்தான். அவனோடு சென்றிருந்த தீனதயாளுவின் குமாஸ்தா தன் கையில் கட்டி இருந்த சங்கிலியை அவிழ்த்துத் தோற்பெட்டியை மேஜையின்மேல் வைத்துவிட்டு அவ்வறையைவிட்டுப் போனான்.

சுந் :—நண்பா, நாங்கள் சுகமாகவே வந்து விட்டோம்.

தீன :—(தோற்பெட்டியைத் திறந்துகொண்டே) நான் எச்சரிக்கை செய்ததால் தப்பித்துக்கொண்டு வந்தீர்கள். நாம் முன் ஜாக்கிரதையாக இருந்தால் எப்பொழுதும் ஏமாறாமலிருக்கலாம்.

அவன் பெட்டியைத் திறந்து அதிலிருந்த புதியநோட்டுக்கட்டை எடுத்து அதைக் கவனத்துடன் பார்க்கலாயினன். அவன் பணத்தைக் கண்டதும் பெருமகிழ்ச்சியுற்றவனாய்ச் சுந்தரத்தை நோக்கி "ஓ, எல்லாம் ஆயிரம் ரூபாய் நோட்டும் ஐந்நூறு ரூபாய் நோட்டுமாக இருக்கிறதே! மிகவும் நல்லது" என்றான்.

சுந் :—நீ, அம்மாதிரி இருக்கவேண்டுமென்று தெரிவித்தபடியால் உன்னிஷ்டம்போல் வாங்கி வந்தேன்.

தீனதயாளு நோட்டுகளை யெல்லாமெடுத்துக் கையில் அடுக்கிவைத்துக் கொண்டு அவைகளை வெகு துரிதமாய் எண்ணலாயினன். அவன் எண்ணிய மாதிரியைப் பார்க்கும்போது அவன் பணத்தினிடத்தில் அலக்ஷியமாயிருப்பானென்றும் அவன் அடிக்கடி இம்மாதிரி நோட்டுகளை எண்ணிப் பழகியவனென்றும் எளிதில் அறிந்து கொள்ளலாம். ஆகையால் சுந்தரமும் அவ்வாறு நினைத்தானென்பது வியக்கத்தக்கதன்று. தீனதயாளு நோட்டுகளை எண்ணி முடித்ததும். "இருபது

ஆயிரம் ரூபாய் நோட்டுகளும் நாற்பது ஐந்நூறு ரூபாய் நோட்டுகளும் இருக்கின்றன. ஆக மொத்தம் நாற்பதினாயிரம் ரூபாய் ஆகிறது. மிகவும் சரி" என்றான்.

சுந் :—இது மிகவும் பெரிய தொகை.

தீன :—நம்பிக்கையும் அதிகமாகத்தா னிருக்கிறது.

சுந் :—ஆம், ஆனால் சீக்கிரத்தில் கமலாஸனியின் புருஷனாகப் போகிறாயல்லவா? உன்னை இவ்வளவு நம்பக் கூடாதா?

தீனதயாளு ஆனந்தமேலீட்டினால் நகைத்துக்கொண்டே பணத்தைப்பெற்றுக் கொண்டதற்காக ஓர் ரசீது எழுதிச் சுந்தரத்தினிடங் கொடுத்தான். சுந்தரம் அதைப்பெற்றுக் கொண்டு அவ்விடம் விட்டகன்றான். அவன் சென்றதும் தீனதயாளு நோட்டுகளை ஜாக்கிரதையாய் மடித்து அவைகளை ஓர் நாடாவினாற் கட்டி ஓர் இருப்புப்பெட்டிக்குள் வைத்துப்பூட்டினான். அன்று மாலை தீனதயாளு மோட்டார்காரில் ஏறிக்கொண்டு நுங்கம்பாக்கத்திற்குச் சென்றான். அவன் அநேக விஷயங்களைப் பற்றி யோசிக்கவேண்டியவனாயிருந்தான். அச்சமயத்தில் பைசிக்கல்களும் மோட்டார்களும் வரிசை வரிசையாய்ச் சாலையில் சென்று கொண்டிருந்தன. அவைகளில் சென்ற ஆடவர்களின் முகங்களில் கவலைக் குறியே தோன்றவில்லை. அவர்கள் கஷ்டஜீவனத்தைக் கனவிலுங் கண்டதில்லை; வறுமையைப்பற்றிப் புத்தகங்களிலும் பத்திரிகைகளிலும் படித்திருக்கிறார்களேயன்றி அநுபவத்தில் அறிந்ததில்லை. தீனதயாளு அவ்வழியே சென்ற சிலமோட்டார்கார்களிலிருந்த கனவான்களைக் கண்டதும் தானும் அவர்களைப்போலவே ஒரு காலத்தில் கவலையற்றவனாய்க் காலங் கழித்து வந்தது ஞாபகத்திற்கு வந்தது. இப்பொழுது அவன் மிக்க அநுபவசாலியா யிருந்தபடியால், தன்னைப்போலவே அவர்களும் இந்த நிலைமையை எப்போதாவது அடைவார்களென்று எண்ணினான்.

அவன் பங்களாவை அடைந்ததும் ஓரறைக்குள் சென்று தனியாய் உட்கார்ந்திருந்தான். அவன் முகத்தில் சந்தோஷக்குறியென்பதே தோன்றவில்லை; புருவங்கள் நெரிந்திருந்தன. கண்கள் உள்ளடங்கியிருந்தன. அப்பொழுது அவனை யாரேனும் கண்டிருந்தால் அவனை இன்னானென்று தெரிந்து கொண்டிருப்பார்களோவென்பது சந்தேகந்தான்.

அவன் எழுந்து உலாவிக்கொண்டே யோசனைசெய்யலானான். அவன் எங்கேயாவது அயல் தேசத்திற்குப்போய் விடவேண்டுமென்று முன்னமே எண்ணி இருந்தானெனினும், அதைப்பற்றித் தீர்க்காலோசனை செய்ய வேண்டுமென்று எண்ணியிருந்தான்.

கமலாஸனியின் செல்வமே அவனை இங்ஙனம் யோசனை

செய்யத் தூண்டியது. அந்த நாற்பதினாயிரம் ரூபாய் இராமலிருந்தாலும், அல்லது சுந்தரம் அதைப்பற்றிப் பேசாமலிருந்தாலும், தீனதயாளுவின் தீர்மானம் வேறு மாதிரியாக இருந்திருக்கும். இப்பொழுது அது கிடைத்து விட்டபடியால் அதை ஆதாரமாக வைத்துக்கொண்டு வேலை செய்யவேண்டுமென்று எண்ணலாயினான். கம்பெனி பாழாய்ப்போனாலும் கமலாஸனியின் செல்வத்தை வைத்துக்கொண்டு, கௌரவத்தை இழந்து விட்டாவது, வேறு தேசம் சென்று ஏதாவது வியாபாரம் செய்யலாமன்றோ?

பணத்தைப் பத்திரப்படுத்துவதே பெரிய காரியமென்று அவனுக்குத் தோன்றிற்று. தனக்குச் சொந்தமான எல்லாப் பொருள்களும்—பாங்கிலிருக்கும் பணம் முதலாகத் தரையின்மேல் விரித்துள்ள ரத்நக்கம்பளம் வரையிலடங்கிய எல்லாப் பொருள்களும்—கூடியசீக்கிரத்தில் தன் கடன்காரர்களுக்குச்சேர்ந்து விடுமென்பது தீனதயாளுவுக்குத் தெரிந்த விஷயமே. ஆகவே கமலாஸனியின் செல்வத்தையும் இன்னும் தனக்குக் கிடைக்கக்கூடிய பணத்தையும்—சுமார் பதினாயிரம் ரூபாயையும்—பத்திரமான இடத்தில் வைக்கவேண்டுமென்று அவனுக்குத் தோன்றிற்று.

எங்கே வைப்பது? இம்மாதிரியான சந்தர்ப்பத்தில்மேற்கூறிய பணத்தை இன்னொருவன் பேரால் பாங்கில் போட்டு வைப்பது நலமென்று அவனுக்குத் தோன்றிற்று. ஆனால் சற்றுநேரம் யோசித்துப் பார்த்து அது சரியல்லவென்று கருதி அந்த யோசனையை விட்டு விட்டான். அம்மாதிரி செய்தால் அநேக கஷ்டங்கள் உண்டாகுமென்று எண்ணினான். அவ்விஷயத்தை மர்மமாய் வைத்திருப்பது கூடாதகாரியமென்று அவனுக்குத் தோன்றிற்று. மேலும், அநேகர் அம்மாதிரிபாங்கில் பணங் கட்டுவது வழக்கமாதலால் தான் புதிய மாதிரியாகச் செய்யவேண்டுமென்பது அவனுடைய முக்கிய கருத்து. தான் கடன்காரனாயிருந்தால் பணத்தை எங்கெந்த மாதிரி வைத்திருந்தால் எவ்வெவ்விதமாய்க்கைப்பற்ற முயற்சி எடுப்பானென்று ஆலோசித்துப் பார்க்கலானான்.

பணத்தை பாங்கில் போடுவதைவிடப் புதைத்து வைப்பதே மேலென்று அவன் எண்ணினான். ஆனால் எங்கே புதைத்து வைப்பதென்று அவனுக்கு எளிதில் தோன்றவில்லை. அவன் பங்களாக்களும் கம்பெனியும் கடன்காரர்கள் வசமாய் விடும். பூமியின் கீழே புதைத்து வைத்தால் தான் தனக்குப் பிரயோசனமுண்டென்று எண்ணலாயினான். ஆகவே கல்யாணச் செலவிற்குப் போதுமான பணத்தைக் கையில் வைத்துக்கொண்டு மீதிப்பணத்தை எங்கேயாவது மறைத்துவிட வேண்டுமென்று தீர்மானித்து விட்டான்.

எங்கே புதைத்து வைப்பது? பல்லாவரத்தில் தான்

வாடகைக்கு எடுத்துக் கொண்டிருந்த பங்களாவில் வைக்கலாமாவென்று ஆலோசித்துப் பிறகு அங்ஙனஞ் செய்யக்கூடாதென்று எண்ணினான். அந்தப் பங்களாவுக்கு இன்னும் யாராவது குடி வந்து விட்டால் தன் பணம் கைக்கெட்டாதென்று பயந்தான். செல்வராஜனுக்குச் சொந்தமான "குடிசை" யில் வைக்கலாமென்றெண்ணியபோது அவனுக்குத் தைரியமுண்டாயிற்று. அங்கு யாரும் வரமாட்டார்களென்று அவன் எண்ணியிருந்தான்.

இப்பொழுதிருக்கும் நோட்டுகளை இன்னும் சிறிய நோட்டுகளாக மாற்றவேண்டுமென்றும், ஒருவருமறியாமல் பல்லாவரத்துக்குச் சென்று அவைகளைப் புதைத்து விட்டு வரவேண்டுமென்றும், அது முடிந்ததும் கமலாஸனியை விவாகஞ்செய்து கொள்ளவேண்டுமென்றும், எங்கேயாவது தூரதேசஞ்சென்ற பிறகு சில ஏற்பாடுகள் செய்யுமாறு மேகநாதனுக்குக் கடிதமெழுதவேண்டுமென்றும் அவன் எண்ணினான்.

கமலாஸனியைச் சீக்கிரத்தில் மணம்புரிந்து கொள்வதற்கு ஸரஸ்வதி சம்மதிப்பாளென்றும் கமலாஸனியும் தன் தாயாரின் இஷ்டப்படியே நடப்பாளென்றும் தீனதயாளு எண்ணினான். ஆனால் அவள் தன்மேல் காதல்கொண்டு தன்னை மணக்கச் சம்மதிக்கவில்லை யென்பது அவனுக்கு நன்றாய்த் தெரியும்.—செல்வராஜன் விஷயத்தில் அவள் வெறுப்புக் கொண்டாளாதலால் இன்னும் யாரையாவது மணம்புரிந்து கொள்வதைவிடத் தீனதயாளுவையே கணவனாய்ப் பெறலாமென்று அவளுக்குத்தோன்றிற்று. கூடியசீக்கிரத்தில் தேசாந்தரம் போய்விடவேண்டுமென்றெண்ணியதால் தீனதயாளு கமலாஸனியை உடனே மணக்கவேண்டும் என்று தீர்மானிக்கலாயினான்.

## 25. ஆனந்தம் அழுகையாக மாறியது.

கமலாஸனி தீனதயாளுவை விவாகஞ்செய்து கொள்வதாக வாக்களித்த இருபத்து நான்கு மணிநேரத்திற்கெல்லாம் அச்செய்தி ஊர் முழுவதும் பரவியது. ஸரஸ்வதி அந்த விஷயத்தை உடனே தன் பந்துமித்திரர்களுக்கெல்லாம் தெரியப்படுத்தலானாள். அச்செய்தி மறுநாள் "இந்து," "சுதேசமித்திரன்" முதலிய சமாசாரப் பத்திரிகைகளில் பிரசுரஞ்செய்யப்பட்டது.

ஆகவே சென்னை வாசிகள் அனைவரும் அவ்விஷயத்தைத் தெரிந்துகொள்ளலாயினர். ஸரஸ்வதியின் பங்களாவுக்கு வந்தவர்களெல்லாம் மங்களங்கூறினார்கள். தீனதயாளுவைக்

கண்ட அவன் சிநேகிதர்களெல்லாம் அவனைச் சந்தோஷத்துடன் விசாரித்தனர். ஆனால் சில நாட்களாகத் தீனதயாளு ஒருவர் கண்ணிலும் புலப்படவில்லை; ஏனெனில், அவன் முக்கியமான சில வேலைகளைச் செய்துகொண்டிருந்தான். மேற்கூறிய வேலைகள் அவன் கையாலேயே செய்யவேண்டியிருந்தன. முழுகிப்போகும் கம்பெனியினின்றும் கிடைக்கக்கூடிய பணத்தையெல்லாஞ் சேகரம் பண்ணுவதே அவனுடைய முக்கிய வேலையாக இருந்தது. ஆகையால் அவ்விஷயத்தில் அவன் வேறு யாரையாவது நம்பி விடுவானா?

கமலாஸனி தன்னை மணந்து கொள்வதாக வாக்களித்த மூன்றும் நாள் தீனதயாளு நுங்கம்பாக்கத்திலுள்ள பங்களாவின் ஓரறையில் உட்கார்ந்துகொண்டு மேஜையின்மேல் வைக்கப்பட்டிருந்த தோற்பெட்டியொன்றைப் பார்த்தவண்ணம் ஏதோ யோசிக்கலாயினன். மேற்கூறிய பெட்டியிலேயே கமலாஸனியின் செல்வம் வைக்கப்பட்டிருந்தது. நாற்பதினாயிரம் ரூபாயையும் சிறு சிறு நோட்டுகளாகமாற்றி அதில் வைத்திருந்தான்.

மறுநாளிரவு ஒருவருக்குந் தெரியாமல் பல்லாவரத்திற்குச்செல்ல வேண்டுமென்று அவன் தீர்மானித்தான். அவன் இரண்டு நாட்களாகச் சரியான நித்திரையில்லாமலும் வேளையில் போஜனஞ்செய்யாமலும் இருந்தான். தன் மனதிலுள்ள கவலை ஒழிந்து சந்தோஷமுண்டாகுங் காலம் எப்பொழுது வருமோவென்று அவன் கலங்கினன். அப்படியன்றி அவனுக்குநித்திரை வருவது போலிருந்தாலும் பத்மாவதி அவன் மனக்கண்ணெதிரில் வந்து நிற்பாள். அவள் உயிரோடிருந்தபொழுது கடைசி முறையாகக்குழந்தையை ஏந்திய வண்ணம் அவன் முன் நின்ற பாவனை இப்பொழுது அவன் ஞாபகத்திற்கு வந்தது.

கோடை காலம் வந்து விட்டபடியால் வெயில் அதிக உக்கிரமாக இருந்தது. ரஸ்தாக்களில் எத்தனை முறை தண்ணீர் ஊற்றியபோதிலும் நடந்து செல்பவர்களெல்லாம் உஷ்ணமிகுதியால் மிகவும் வருந்தினர். கடைக்காரர்களெல்லாம் நடுப்பகல் வேளையில் தூக்கத்தால் ஆடி விழுந்தனர். பறவைகள் கூட வெளியே செல்லாமல் தங்கள் கூடுகளிலேயே பதுங்கியிருந்தன.

அம்பலவாணன் தான் வளர்த்து வந்த குழந்தையின் மேல் மிக்க வாஞ்சையுள்ளவனாகி தக்க பருவத்தில் அது பொலிவுபெற்று விளங்குமென்று அவன் எண்ணிக்கொண்டிருந்தான். அந்தக் குள்ளனுடைய முகம் முன்போல் கரடு முரடாக இருக்கவில்லை. அவனது உரத்த குரலும் இப்பொழுது மெல்லியதாய்விட்டது. அவனிடமிருந்த குழந்தையைக் கண்டு எல்லோரும் ஆச்சரியமுற்றனர்; ஆனால் அவனிருக்கும்

போது அதை யாரும் பார்க்கமாட்டார்கள். ஏனெனில் யாராவது தன் குழந்தையைக் கண்டால் அதற்குத் திருஷ்டிதோஷம் வந்து விடுமென்று அந்தக் குள்ளன் எண்ணியிருந்தான். ஆகவே குழந்தை நித்திரைசெய்யுந் தருணத்தில் அவன் வெளியே செல்லும்போது தான் அண்டை அயலிலுள்ளவர்கள் குழந்தையைப்பார்க்கப் போவார்கள். அக்குழந்தை அம்பலவாணனோடு விளையாடிக் கொண்டிருந்ததை அவர்கள் பார்த்திருப்பார்களாகில் அவர்களும் தங்கள் குழந்தைகளிடத்தில் மிக்க ஆசையோடிருப்பார்கள். அக்குழந்தையின் மழலைச் சொற்களைக் கேட்பதே அம்பலவாணனுக்குப் பேரானந்தத்தை விளைவித்தது.

அக்குழந்தையை எடுத்து வந்தது முதல் அம்பலவாணன் சுகமாய்க் காலங்கழிக்கலானான். அவனுக்கு எவ்விஷயத்திலும் கவலையில்லாமலிருந்தது. அக்குழந்தை தன்னோடு விளையாடிக் கொண்டிருக்கும்போழுது அவன் தனக்குள் "நான் இறந்து விட்டால் இவன் கதி என்னவாகும்!" என்று கூறிக்கண்ணீர் பெருக்கி அக்குழந்தையைத் தன் மார்போடணைத்து முத்தந் தருவான்.

குழந்தையும் அவனை அதிகமாய் நேசித்து வந்தது. தன் குழந்தைக்கு விளையாட்டுத் தோழர்வேண்டுமென்று அம்பலவாணன் சில சமயங்களில் எண்ணிக் கொள்வான். அவன் குழந்தையை நோக்கி, "சந்திரா, உனக்கு இரண்டொரு விளையாட்டுத் துணைவர் இருக்கவேண்டுமென்று எனக்குத்தோன்றுகிறது. எங்கிருந்தாவது அழைத்து வரவேண்டுமென்றிருக்கிறேன்" என்றான். உடனே குழந்தை குள்ளனுடைய மடியில் உட்கார்ந்துகொண்டு அவன் முகத்தை உற்று நோக்கியது. அதைக் கண்ட வாமனன் "சரி, உனக்குத் தோழர்வேண்டுமோ கண்ணே? இரண்டு மூன்று பிள்ளைகளை அழைத்து வருகிறேன். இந்தத் தெருவில் அநேக பிள்ளைகளிருக்கிறார்கள். அவர்களில் அழகானவர்களாயிருப்பவர்களைப் பார்த்து அழைத்து வருகிறேன். நீ எந்த விளையாட்டு வேண்டுமானாலும் விளையாடலாம். சந்திரா, என்ன சொல்லுகிறாய்?" என்பான்.

அதைக் கேட்டதும் குழந்தை தடுமாற்றத்துடன் "துள்ளப்பா ஆமாம், வெள்ளாடணும்" என்று கூறிற்று. மறுநாள் அம்பலவாணன் குழந்தையைத் தெருவில் எடுத்துக்கொண்டு போய் அங்கே விளையாடிக்கொண்டிருந்த பிள்ளைகளுடன்விட்டு விட்டு வீட்டினுள் வந்து ஜன்னலின் வழியாய்ப் பார்த்துக் கொண்டிருந்தான். குழந்தை முதலில் கூச்சத்துடன் விளையாடிற்று; பிறகு சந்தோஷத்துடன் குதித்து விளையாட ஆரம்பித்தது. ஜன்னலண்டை குள்ளன் நின்றிருந்ததைக் கண்டதும் அது உடனே வீட்டிற்கு வந்து விட்டது.

மறுநாளும் அம்பலவாணன் குழந்தையை அங்ஙனமே

விளையாடவிட்டான். ஆனால் அது அவனை விட்டுப் பிரிந்திருக்க மனமில்லாததாய் அவனைப் பிடித்துக்கொண்டது. ஆகவே குள்ளன் அதை வீட்டிற்கு எடுத்துக் கொண்டுபோய் விட்டான்.

சூரிய வெப்பம் மிகுதியாக இருந்ததால் குழந்தை களைத்திருந்தது. ஒரு நாள் அது பேச்சு மூச்சற்றுக் கிடந்ததைக் கண்டு அம்பலவாணன் மிகவும் மனங்கலங்கினான். உடனே அவன் அதைத் தன் சட்டையால் மூடிக்கொண்டு எங்கேயோ வேகமாய்ச் சென்றான். அங்ஙனஞ் செல்லும்போது அவன் குழந்தையை விளித்து, "சண்மணி! சந்திரா! என்ன சங்கதி? உனக்கு யாதொரு நோயுமில்லையே? கண்ணைத் திறந்து குள்ளப்பனைப் பார். ஏதோ—"என்று சொன்னான்.

குழந்தை தலையை யசைத்துக்கொண்டே "குள்ளப்பா! நான் ரொம்ப எளப்பா இக்குது" என்றது. அதைக்கேட்ட அம்பலவாணன் "களைத்துப்போய் விட்டாயோ? சரி தான். வயதானவர்களெல்லாம் இந்த வெயிலில் அலுத்துப்போகிறார்களென்றால், குழந்தையாகிய நீ என்ன செய்வாய், பாவம்!" என்று சொன்னான். குழந்தைக்கு ஏதேனும் கெடுதி சம்பவித்தால் தானென்ன செய்வதென்று கலங்கியவனாய் அவன் ஒரு டாக்டரிடஞ் சென்றான். டாக்டர் குழந்தையை உற்று நோக்கிக் கொண்டிருந்தார்.

அம்ப:—என்ன ஐயா இது? பேசமாட்டீர்களோ? குழந்தையைப்பார்ப்பதுதானா டாக்டர்களின் வேலை? நான் ஒன்றுமறியாத கிழவனாதலால் உங்களிடம் வந்தேன். அவனுக்கு ஏதாவது கொடுங்கள். நான் பணங்கொடுத்து விடுகிறேன். அவனுக்காக எவ்வளவு வேலை வேண்டுமானாலும் செய்வேன். நான் எவ்வளவு பலசாலியாக இருக்கிறேன்—என்னைப் பாருங்கள். முதலில் அவனுக்கு ஏதாவது கொடுங்கள்.

டாக்:—அப்பா, அதிகமாய் வருந்தாதே. குழந்தை அசௌக்கியமாகத் தான் இருக்கிறது—ஆனால் ஒரு கெடுதியும் தெரியாது. மருந்தினால் குணமுண்டாகாது. அவனுக்கு நல்ல காற்றிருக்கவேண்டும். நாட்டுப்புறம், நல்ல பால் இவ்விரண்டுந் தான் வேண்டும்.

அம்ப:—ஓஹோ! அப்படியா! சரி, அப்படியே அழைத்துப் போகிறேன். அவனுக்காகக் கடல்களைக்கூடக் கடந்து செல்வேன். ஐயா, அவன் இறந்துபோவானோ?.

டாக்:—இல்லை, அவனை உடனே எங்கேயாவது நாட்டுப்புறத்திற்கு அழைத்துக்கொண்டு போ. இக்குழந்தை உன் மகளுடையதா? அவளும் அழகாகத் தானிருப்பாள். அலைப்பினால் தேகம் மெலிந்திருப்பாளோ?

அம்ப:—ஆம், அவள் அழகாகத் தானிருந்தாள். அவள் அலைந்து திரிந்து தேகத்தைக்கெடுத்துக் கொண்டாள்.

அவன் டாக்டருக்கு இரண்டு ரூபாய் கொடுத்துவிட்டுக் குழந்தையை எடுத்துக்கொண்டு வீட்டிற்குச் சென்றான். அவன் வீடு போய்ச்சேர்ந்ததும் "ஆம், ஆம். சந்திரா! உனக்கு இப்பொழுது கிராமவாசந்தான் தகுந்தது. எவ்வளவு பணங் கொடுத்தபோதிலும் இங்கே கலப்பற்ற பால் கிடைப்பது அருமை. நல்ல பாலும் அழகிய புஷ்பங்களும் உனக்குவேண்டும்". என்று சொல்லிக்கொண்டே எங்கே செல்லலாமென்று யோசிக்கலாயினான்.

அவனுக்கு உடனே செல்வராஜனுடைய ஞாபகம் வந்தது. அவன் தன்னிடத்திலும் தன் குழந்தையினிடத்திலும் மிக்க பக்ஷமுள்ளவனாயிருந்தபடியால் அவனிடஞ் செல்வதே உத்தமமென்று அவனுக்குத் தோன்றுதலாயிற்று. மேலும் அவன் சிலையைப் பார்ப்பதற்காகக் குழந்தையையெடுத்துக் கொண்டு பல்லாவரத்திற்கு வரும்படி வேண்டிக்கொண்டானல்லவா? அவனுடைய விலாசமும் அம்பலவாணனிடமிருந்தது.

குள்ளன் உடனே குழந்தையைப் படுக்கையின் மேல் விட்டு விட்டு அந்த விலாசத்தைத் தேடினான். அவன் அதைக் கண்டெடுத்ததும், அதில் எழுதியிருந்ததை ஒவ்வொரு எழுத்தாகக்கூட்டிப் படித்தான். பிறகு அதை ஜாக்கிரதையாக மடித்துச் சட்டைப்பைக்குள் வைத்துக்கொண்டு நடுக்குற்ற கையுடன் பிரயாணத்திற்குவேண்டிய சாமான்களை எடுத்துக் கட்டிக்கொண்டான். பத்மாவதியுடனிருந்த காகிதமூட்டையையும் அவன் மறவாமல் எடுத்து வைத்துக்கொண்டான். சற்றுநேரத்திற்கெல்லாம் அவன் குழந்தையைப் பத்திரமாகச் சட்டையால் மூடிக்கொண்டு கதவைப்பூட்டிவிட்டு வெளியே சென்றான்.

அவன் ஒரு போலீஸ் சேவகனைக் கண்டதும் அவனிடம் செல்வராஜனுடைய விலாசத்தைக் காண்பித்து அவ்விடத்திற்கு எப்படிச் செல்வதென்று அவனைக் கேட்டான். சேவகன் தெரிவித்ததைக்கேட்டுக் கொண்டதும் அவன் சேத்துப்பட்டு ஸ்டேஷனுக்கு விரைந்து சென்று பல்லாவரத்திற்கு டிக்கெட் வாங்கிக்கொண்டான்.

அன்றிரவு ஸரஸ்வதியின் பங்களாவிலிருக்கும் காவற்காரன் கதவைப்பூட்டிக்கொண்டு வெளியே புறப்பட்டபோது இங்கு மங்கும் பார்த்துக்கொண்டே சென்ற ஒரு குள்ளனைக் கண்டு அவன் பங்களாவுக்கு வருபவனோவென்று சந்தேகித்தான். அம்பலவாணன் பங்களாவினருகில் மயங்கி நின்று, காவற்காரனைக் கண்டு, அவனிடம் ஒரு காகிதத்தைக் காட்டி, "ஐயா, அந்த வீடு எங்கிருக்கிறது? சீக்கிரம் சொல்லுங்கள்" என்றான்.

காவற்காரன் "ஐயா, நல்ல வேளையாய் எனக்குக்கஷ்டங்

கொடாமற் போனீர்கள். அதோ இருக்கிறதே, ஒருபழைய வீடு—அது தான் செல்வராஜனுடையது. யாரைத்தேடிக் கொண்டு வந்தீர்கள்?" என்று சொன்னான்.

அம்பலவாணன் "அது என்னுடைய வேலை நீ அதைப் பற்றிக் கேட்கவேண்டாம்" என்று சொல்லிக்கொண்டே அவ் விடம் விட்டகன்றான். அப்பொழுது நிலா பால்போலப் பிர காசித்துக் கொண்டிருந்தது. அவன் குனிந்துகொண்டே "வீடு சமீபித்து விட்டது. சந்திரா, வந்து விட்டோம். என் கண்மணி! வருத்தப்படாதே. நாம் கூடியசீக்கிரத்தில் அந்தப் பக்ஷமுள்ள கனவானைக் காண்போம். அவன் உன்னைப் பாது காப்பான். கண்ணே! என்னோடு ஒரு வார்த்தை பேசு—ஏதோ—ஒரு வார்த்தை" யென்றான்.

குழந்தை "குள்ளப்பா" என்றது.

அம்பலவாணன் பெருமூச்செறிந்துகொண்டே முன்னி லும் துரிதமாகச் சென்றான். சற்றுநேரத்திற்கெல்லாம் அவன் செல்வராஜனுடைய தோட்டத்தை யடைந்தான். அந்த வீட்டை யடைந்ததும் அங்கே ஒருவருமில்லாதது கண்டு வருத்தமுற்றான். அருகிலிருந்தயாவும் நிசப்தமாயிருந்தன. அவன் விசனமேலீட்டினால் "ஐயோ! சந்திரா, வீடு காலி யாயிருக்கிறதே! அவன் எங்கேயோ போய்விட்டான்." என்று கதறினான்.

யாதும்தோன்றாமல் அவன் அவ்வீட்டைச்சுற்றிச் சுற்றி வந்தான். காண்பது முற்றும் சனவோவென்று சந்தேகித் தான். குழந்தை சட்டையை நீக்கிக்கொண்டு சந்திரிகையைப் பார்த்தவண்ணம் "குள்ளப்பா! அயவாயிக்குது! அயவாயிக் குது!" என்று சொல்லியது.

இரவு சுகத்தைத்தரும் வண்ணமாக இருந்தது. வேறெங் கே செல்வதென்று அவனுக்குத் தோன்றவில்லை யாதலால் அம்பலவாணன் இரவு முழுவதும் அலைந்து திரிந்தாலும் தங்கு மிடம் கிடைக்காதென்று கலங்கினான். அவன் சுற்று முற்றும் பார்த்துக்கொண்டிருந்தபொழுது தோட்டத்திலிருந்த ஒரு சிறு வீடு அவன் கண்ணிற்குத் தென்பட்டது. அவன் நடை யால் அலுப்புற்றிருந்ததால் இளைப்பாற எண்ணி அங்கே சென்றான். அவன் குழந்தையை வெளியே யெடுத்து ஒரு புட்டியிலிருந்த பாலைக்குடிப்பித்தான். பிறகு அவன் குழந் தையை மறுபடியும் மூடிக்கொண்டு அங்கே உட்கார்ந்திருந் தான்.

அவன் அங்ஙனம் உட்கார்ந்து குழந்தை சௌக்கியமாயி ருக்கவேண்டுமென்று கடவுளைப் பிரார்த்தித்துக் கொண்டிருந் தபொழுது அவன் சமீபத்தில் ஒரு சப்தம் உண்டானதைச் செவியுற்றான். அது எங்கிருந்து வந்ததென்று பார்த்த பொழுது ஒருருவம் இருளில் மறைந்து தோட்டத்தைநோக்

கிச்சென்றதைக் கண்ணுற்றான். அம்பலவாணன் குழந்தை அசௌக்கியமாயிருந்ததற்காகவும் செல்வராஜன் அங்கில்லாததற்காகவும் மிக்க வருத்தமுற்றுக் குழந்தைக்கு என்ன சம்பவிக்குமோவென்று அஞ்சிக் கண்ணீர் பெருக்கினான். குழந்தையால் அவனுக்கு உண்டான ஆனந்தம் அழுகையாக மாறியது.

## 26. மர்மம் வெளியாய்விட்டது.

தெய்வகதியோ—ஊழ்வினையோ—தீனதயாளு பணத்தைப் புதைப்பதற்காகச் சென்ற அன்றையதினமே அம்பலவாணனையும் பல்லாவரத்திற்குக் கொண்டு வந்து விட்டது. தெய்வச் செயலோ—அல்லது ஊழ்வினைதானோ—பத்மாவதியின் குழந்தையைப் பார்க்கவேண்டுமென்று தங்கமணிக்கு அன்றையதினம் ஆவலையுண்டுபண்ணியது. அவன் அம்பலவாணன் வெளியே சென்றிருந்தபொழுது தெருவில்மறைந்து கொண்டு குழந்தையைப் பார்த்த பிறகு மறுபடியும் அதைப் பார்க்கவில்லையாதலால் இப்பொழுது பார்க்கவேண்டுமென்று ஆவல் கொண்டான். குள்ளன் குழந்தையை நன்றாய்ப் பாதுகாத்து வந்தானென்பது அவனுக்கு நிச்சயமாய்த் தெரிந்தது. ஆகவே அவன் இது வரையில் குழந்தையைப்பற்றி யாதொரு கவலையும் எடுத்துக் கொள்ளவில்லை. அப்பொழுது அவனுக்குப் போதுமான பணமில்லாததால் அதைக் காப்பாற்றச் சக்தியற்றவனுமிருந்தான்.

சந்தர்ப்பங்கள் இப்பொழுது மாறிவிட்டன. குள்ளனையும் குழந்தையையும் உடனேசென்று பார்க்கவேண்டுமென்று அவன் எண்ணினான். அவன் அம்பலவாணன் வீட்டிற்குச் சென்று பார்த்தபோது கதவு பூட்டப்பட்டிருந்தபடியால் அவன் எங்கே சென்றிருப்பானென்று அக்கம் பக்கத்திலிருந்தவர்களை விசாரித்தான். ஆனால் அவர்களுக்கு அவ்விஷயம் தெரியாதென்று கூறிவிட்டதால் அருகாமையிலிருந்த போலீஸ் சேவகனை விசாரித்தான். குள்ளன் குழந்தையை எடுத்துக் கொண்டு பல்லாவரத்திற்குப் போய்விட்டானென்று அவன் கூறியதைக்கேட்ட தங்கமணி, அவன் எதற்காகப் பல்லாவரத்திற்குப் போயிருப்பானென்று ஆச்சரியமடைந்து தானும் அங்கே செல்லவேண்டுமென்று தீர்மானித்தான்.

தீனதயாளு அன்று பகலெல்லாம் யாதொரு வேலையுமின்றி உட்கார்ந்திருந்தான். அன்று காலையில் அவன் தன் சிநேகிதர்களிடம்போய் விவாக விஷயத்தைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தான்; பிறகு ஸரஸ்வதியின் பங்களாவுக்குச் சென்று சற்று நேரம் அவளோடு வார்த்தையாடினான். அவனைக் கண்டவர்கள் அவன் மனதிலிருந்த கவலையை யறிந்துகொண்டார்களில்லை.

அன்றையதினம் தீனதயாளு சற்றுநேரம் தன் கம்பெனியில் தங்கியிருந்தான். அவன் மேகநாதனுடன் பேசிக்கொண்டிருந்தபொழுது சந்தோஷமுள்ளவனாகப் பாசாங்குசெய்தான். அதைக் கண்டதும் கம்பெனி மானேஜருக்கு மிகுந்த திருப்தியுண்டாயிற்று. தீனதயாளு பிறகு நுங்கம்பாக்கத்திற்குத் திரும்பி வந்து ஓரறையில் உட்கார்ந்து கொண்டிருந்தான்.

அன்று மாலை ஆறுமணிக்கு அவன் கறுப்பான உடை தரித்துக் கொண்டு கையில் ஒரு தோற்பெட்டியை ஏந்தியவனாய் ரெயில்வே ஸ்டேஷனுக்குச் சென்றான். அவன் எடுத்துப்போன பெட்டியில் கமலாஸனியின் செல்வம்—நாற்பதினாயிரம் ரூபாய்—இருந்தது.

அவன் சேத்துப்பட்டு ஸ்டேஷனை அடைந்ததும் பல்லாவரத்திற்கு ஒரு முதல் வகுப்பு டிக்கெட் வாங்கிக்கொண்டு வண்டியிலேறினான். வண்டி சென்று கொண்டிருக்கும்பொழுது இரவும் சமீபிக்கலாயிற்று. வெளிப்புறத்திலிருந்த பொருள்கள் யாவும் மங்கலாய்த் தோன்றின. வண்டி பல்லாவரம் போவதற்குள் இருள் வந்து மூடியது.

ஸ்டேஷனிலிருந்து செல்வராஜன் வீடு இரண்டு மைல் தூரத்திலிருந்ததென்றாலும் தீனதயாளு நடந்து செல்வதே உத்தமமென்று எண்ணி அங்ஙனமே புறப்பட்டான். ரஸ்தாவின் இருபுறங்களிலும் ஓங்கி வளர்ந்த மரங்கள் நெருங்கியிருந்தபடியால் எங்கே பார்த்தாலும் இருள் மயமாகஇருந்தது. சற்றுநேரத்திற்கெல்லாம் சந்திரோதயமாயிற்று; மரங்களில்லாத இடத்தில் மாத்திரம் நிலவு பிரகாசித்துக்கொண்டிருந்தது.

அநேக விஷயங்கள் தீனதயாளுவுக்குக் கலக்கத்தை உண்டுபண்ணின. எங்கும் நிசப்தமாயிருந்ததும், அவன் சென்றவழி இருள் மூடியிருந்ததும், அவன் செய்யவேண்டிய வேலையும், அவனது குற்றமுள்ள மனமும் அவனை வருத்தலாயின. அவன் ரோட்டில் சென்றபொழுது இருளில் திரும்பிப்பார்த்துக் கொண்டே தன் கையிலிருந்த பெட்டியை இறுகப்பிடித்துக் கொண்டான். காற்று உஷ்ணமானதாக இருந்ததாலும் அவன் கனத்த சொக்காயை அணிந்திருந்ததாலும் அவன் தேகம் வியர்த்தது.

அவன் ஒரு மைல் தூரஞ்சென்றதும் இருளில் காலடி சப்தங்கேட்பதாக அவனுக்குத் தோன்றிற்று. அவன் மிகுந்த அச்சத்துடன் ஓரிடத்தில் நின்று கவனத்துடன் காதுகொடுத்துக்கேட்டான்; ஆனால் எங்கும் நிசப்தங் குடிகொண்டிருந்தது. அவன் மறுபடியும் வேகமாய்ச்செல்ல ஆரம்பித்தான்—மறுபடியும் காலடி சப்தங்கேட்டது. அது அவன் காலடி சப்தத்தின் பிரதித்த்வனியாக இருக்கலாமோ? அந்தச் சப்தம் தன்னைப் பின்பற்றி வருகிறதோவென்று தெரிந்துகொள்ளும்வண்ணம் அவன் கவனமாய்க் கேட்டுக்கொண்டே சென்றான்.

கடைசியாக அவன் அந்தச் சந்தடி தன் காலடி சப்தத்தைவிட அதிகமாக இருந்ததென்று உணர்ந்து கொண்டான்.

அவன் சற்றுநேரம் சும்மா இருந்துவிட்டுப் பிறகு பெரு வாய்ச் சிரித்துக்கொண்டான்; தன்னுடைய கவலையே தன்னைப் பயமுறுத்தியதென்று தனக்குள் சொல்லிக்கொண்டான். அவனைப் போலவே இன்னொருவன் ஏன் அவ்வழியேசென்று கொண்டிருக்கக்கூடாது? அவனுக்கு ஏது பயத்தை உண்டு பண்ணியதென்று இப்பொழுது நன்றாய் அறிந்துகொண்டான். அவன் நுங்கம்பாக்கத்தில் தன் பங்களாவினருகில் பத்மாவதியின் காலடி சப்தத்தைக்கேட்டது முதல், இருளில் தனியாக யாராவது நடந்துசெல்லுஞ் சந்தடியைக்கேட்டால் அவனுக்குப் பத்மாவதியின் ஞாபகம் வந்து விடும். ஆகவே இப்பொழுதுண்டான சப்தத்தைக் காதுகொடுத்துக்கேட்பதில் வெறுப்புள்ளவனானான். அதனால் அவனுக்குப் பெரும்பயமுண்டாயிற்று. பழைய ஞாபகம் வரும்போதெல்லாம் அவன் மனதைத் தன் வசப்படுத்தி வேறு விஷயங்களைப்பற்றி நினைக்கத் தொடங்குவான். ஆனால் இன்றிரவு இருளில் நிசப்தமான வழியில் நடந்து கொண்டிருந்தபொழுது அவனுக்குண்டான பத்மாவதியின் ஞாபகம் அவன் மனதைவிட்டு விலகாமல் வருத்தியது.

அவன் செல்வராஜனுடைய வீட்டின் சமீபத்தில் வரும்போதும் அவன் பின்னே காலடி சப்தங்கேட்டது. அவனுக்கும் சப்தமுண்டாகுமிடத்திற்குமுள்ள தூரம் எப்பொழுதும் வித்தியாசப் படாமலிருந்தது. சற்றுநேரம் அந்தக் காலடி சப்தம் நின்று பிறகு கேட்கலாயிற்று. அங்ஙனம் நடந்து வந்தவன் இருளடைந்த புல் தரையின் மேலேயே வந்து கொண்டிருந்தான்.

தீனதயாளு பற்களைக்கடித்துக்கொண்டே நடந்துசென்றான். அவன் மிக்க தைரியசாலியாதலால் இது வரையில் இம்மாதிரி திகில் அடைந்ததில்லை. அவன் எடுத்துக்கொண்ட வேலை திருட்டுவேலை யாதலால் அவன் பார்ப்பதெல்லாம் பயத்தை யுண்டுபண்ணுவதாக இருந்தது. தன் திருட்டுத் தனத்தை யாரேனும் மறைந்திருந்து கண்டு பிடிப்பார்களோ வென்று அவன் பயந்தான். தன் மனதிலுள்ள பயமே தன்னைக் கலவரப்படுத்தியதென்று அவன் சொல்லிக்கொண்டான். அவன் பல்லாவரத்தில் தங்கியிருந்தபொழுது இரவில் எத்தனை முறை உலாவச்சென்றிருக்கிறான்! அப்பொழுது ரோட்டிலுண்டான காலடி சப்தம் இம்மாதிரி அவனைப் பயமுறுத்தியதோ? அதை நினைக்க நினைக்க அவன் தனக்குள் கலங்கிக் கொண்டான்.

கடைசியாக அவன் "குடிசை" யினருகில் வந்து நின்றான். அவன் ஓரிடத்தில் நின்ற எண்ணம் அங்கு வதாலு

சந்தடி யுண்டாகிறதாவென்று காது கொடுத்துக்கேட்டான். ஒன்றுங் கேட்கவில்லை—முன்னே உண்டான காலடி சப்தமும் நின்று விட்டது. எங்கே பார்த்தாலும் சந்தடியில்லாமலிருந்தது. அவ்வழியே யாராவது வருவார்களோவென்று அங்கேயே சற்றுநேரம் நின்று பார்த்தான். ஒருவரும் வரவில்லை. உடனே அவன் குடிசைக்குச்சென்று விட்டான்.

அவன் இருளில் மறைந்துகொண்டே தோட்டத்தின் வழியாய்ச்சென்றான். அப்பொழுதுதான் அம்பலவாணன் அவனைப் பார்த்தான்.

தீனதயாளு தோட்டத்தின் ஒரு புறத்தில் வந்து நின்று யாராவது வருகிறார்களாவென்று சுற்று முற்றும் பார்த்து ஏதாவது சந்தடி யுண்டாகிறதாவென்று உற்றுக்கேட்டான். அவன் அங்கே ஒருவரும் வரவில்லையென்பதை நிச்சயமாய் அறிந்துகொள்ள விரும்பினான். ரோட்டில் அவனைப் பின்பற்றி வந்த காலடி சப்தம் இப்பொழுதும் அவனை வருத்தியது. அவன் தன் அறிவீனத்தை நினைந்துத் தானே நகைத்துக்கொண்டானெனினும், தன் மனதில் அம்மாதிரி யுணர்ச்சி யுண்டாயிற்றேயன்றி அது யதார்த்தமானதல்லவென்று தானேசொல்லிக் கொண்டானெனினும், தன்னை யாரோ பின்பற்றி வந்திருக்கிறார்களென்று அவனுக்கு நிஷ்காரணமாய்த் தோன்றுதலாயிற்று. தீனதயாளு குற்றமுள்ள மனதுடன் இப்பொழுது இருளில் பார்த்துக்கொண்டும் உற்றுக்கேட்டுக்கொண்டும் நின்றதுபோல் எப்படிப்பட்ட குற்றஞ்செய்தவனும் நின்றிருக்கமாட்டான்!

ஆனால் அவன் கவனித்ததெல்லாம் வீணாயிற்று. அவன் கண்ணுக்குப் புலப்படாமல் ஓருருவம் இருளில் மறைந்துகொண்டே சென்று சற்றுத்தூரத்தில் நின்றது.

தீனதயாளு தன் பின்னே மறைந்திருந்த உருவத்தைக் கவனியாதவனாய்ப் பணத்தை எந்த இடத்தில் புதைக்கலாமென்று யோசித்துக்கொண்டிருந்தான். அவன் அந்த உருவத்தைக் கண்டிருந்தாலும் காரணமில்லாமல் முன்னே பயந்தது போல் பயந்திருக்கமாட்டான். பத்மாவதியின் உருவம் தன்னைப் பின்பற்றி வந்ததாக அவன் எண்ணிக்கொண்டதே அவனுக்குப் பெரும்பயத்தை உண்டு பண்ணியது.

அவன் பணத்தைப் புதைக்குமிடம் இன்னொரு சமயம் வந்து சுலபமாய் எடுக்கக்கூடியதாயிருக்கவேண்டுமென்று எண்ணினான். அவன் அங்கிருந்த மாமரத்திலிருந்து குடிசையின் பின் வாசற்படிக்கு ஒரு கோடு கிழித்தான்; பிறகு தோட்டத்தின் வாசற்படியிலிருந்து ஒரு தென்னை மரத்திற்கு மற்றொரு கோடு கிழித்தான்; மேற்கூறிய இரண்டு கோடுகளையுங்காலால் அளந்தான். அதெல்லாம் எப்பொழுதும் ஞாபகமிருக்குமென்றெண்ணி, இரண்டு கோடுகளும் சந்திக்குமிடத்தில் ஓரடை

யாளம் வைத்துக்கொண்டு சட்டைப் பையிலிருந்த ஓர் இருப்புக்காரையெடுத்து அங்கே குழிபறிக்க ஆரம்பித்தான்.

அவன் சற்றுநேரம் வரையில் நிற்காமல் வேலைசெய்துகொண்டிருந்தான்; அவன் நெற்றியில் வியர்வைத் துளிகள் நிறைந்திருந்தன; அவன் சுவாசித்தது அருகாமையில் மறைந்திருந்தவனுக்குங்கேட்டிருக்கும். ஒருமுறை ஏதோ சப்தமுண்டானதைக்கேட்டுப் பிரமித்துவிட்டான்; அது வௌவாலின் தொனியென்றறிந்து மறுபடியும் வேலைசெய்ய ஆரம்பித்தான்.

சற்றுநேரத்திற்கெல்லாம் அங்கே ஒரு பெரிய குழி தோண்டியாயிற்று. தீனதயாளு தோற்பெட்டியையெடுத்தான். எதையோ செவியுற்றுப் பிரமித்து நின்றான்! செடி மறைவிலிருந்து சப்தமுண்டாயிற்றென்று அவன் எண்ணிக்கொண்டான்.

தனக்குண்டான பயத்தைப்பற்றி நகைத்துக்கொண்டே அந்தப் பெட்டியைக் குழியில் புதைத்தான். அக்குழியை மண்ணால் மூடிவிட்டு நன்றாய் மிதித்தான். பிறகு இருப்புக்காரைச் சட்டைப் பைக்குள் போட்டுக்கொண்டு வந்தவழியே சென்றான். அத்தருணத்தி லுண்டான ஒரு தொனி அவனைக் கலங்கச் செய்தது—ஒரு குழந்தை அழுந்தொனி அவன் காதில் விழுந்தது.

அவ்வழுகைக் குரல் ஓரிருளான இடத்திலிருந்து வருவதாக அவனெண்ணிக் கொண்டான். அவன் முன்வைத்த காலைப் பின்வைத்து நின்றான்; அவனுக்குப் பெரும் பயமுண்டாயிற்று; அவன் கால்கள் நடுங்கின; பத்மாவதியோ—அல்லது அவள் பிசாசோ தன் பக்கத்தில் நிற்பதாக எண்ணிச் சுற்றுமுற்றும் பார்த்தான். அவன் சற்று நேரம் நின்றுவிட்டுப் பிறகு சப்தமுண்டான இடத்தை நோக்கிச் சென்றான்.

அவன் தானெங்கே சென்றுகொண்டிருந்தானென்பதையறியவில்லை; அவன் அதைப்பற்றி நினைக்கவேயில்லை. ஏதோ ஒரு எண்ணம் அவனை இருளில் இழுத்துச் சென்றது. அவன் நிலவில் வந்து நின்றபொழுது செல்வராஜன் செய்து வைத்திருந்த "நன்கொடை" என்னும் சிலை அவனெதிரில் தெரிந்தது. அதைக் கண்டவுடன் தீனதயாளு பயத்தினால் துள்ளிக் குதித்தான்.

அவன் கைவிட்டுவிட்ட பெண்மணியி னுருவம் அவன் முன் நின்றிருந்தது! பத்மாவதி கடைசி முறையாகக் குழந்தையை ஏந்தியவண்ணம் அவனெதிரில் நின்றிருந்த பாவனை இப்பொழுது கண்ட சிலையினிடத்திற் பொருந்தியிருந்தது. அதைக் கண்டதும் அவன் முகம் விகாரமுற்றது; கண்கள் ஒளியை யிழந்தன; நாத் தழதழத்தது; என்று முண்டாகாத பயம் அவன் மனதிற் குடிகொண்டது. சற்றுநேரம் அவன் ஸ்தம்பித்து நின்றுவிட்டுப் பிறகு ஓட ஆரம்பித்தான்.

அவன் தன்னைப் பிசாசுகள் பின்பற்றி வருவதாக எண்ணிக்கொண்டே ஓடினன். அங்ஙனம் ஓடும்பொழுது இருளிலிருந்த ஒருவன்மேல் இடித்துக் கொண்டதால் அவன் மனதிலிருந்த பயம் அதிகரிக்கலாயிற்று.

அவன் கொஞ்சதூரஞ் சென்று நின்றான்; ஒரு குழந்தையின் அழுகைக்குரலைக்கேட்டு ஒன்றுந் தோன்றாதவனாய்ப் பைத்தியக்காரனைப்போல் மறுபடியும் ஓட ஆரம்பித்தான்.

தீனதயாளு பயந்தோடிய கால்மணி நேரத்திற்கெல்லாம் ஒருவன் நிலவு வெளிச்சத்தில் சென்று இருளில் புகுந்தான். அம்மனிதனே தீனதயாளுவைப் பின்பற்றி வந்து அவன் பணத்தைப் புதைத்துக் கொண்டிருந்தபொழுது செடிமறைவில் நின்றுகொண்டிருந்தவன். தீனதயாளு பயந்தோடியதையும் அவன் நன்றாய்ப் பார்த்துக்கொண்டிருந்தான்.

ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து வரும்பொழுதும் இவனுடைய காலடி சப்தமே தீனதயாளுவுக்குக் கேட்டது. அவன் நிலவில் சென்றபொழுது அவனுடைய வளைந்த தோள், அவன் அணிந்திருந்த சட்டை, தரித்திருந்த வஸ்திரம் முதலியனவெல்லாம் அங்ஙனஞ் சென்றது தங்கமணி யென்று தெரிவிக்கலாயின.

அவன் தீனதயாளுவுக்குப் பின் புறத்தில் ஒளித்துக் கொண்டு நடந்ததனைத்தையும் நன்றாய்ப் பார்த்துக்கொண்டிருந்தான். பிறகு அவன் தோட்டத்திலிருந்த சிறுவீட்டையணுகி அதிலிருந்தவர்களைக் கண்ணுற்றான். அம்பலவாணன் குழந்தையை வைத்துக்கொண்டு அங்கே உட்கார்ந்திருந்தானென்று முன்னமே கூறவில்லையா?

தங்கமணி நிலவு வெளிச்சத்தில் குழந்தையைக் கண்டதும் அது மரணமடையுந் தருவாயில் இருந்ததென்று அறிந்து கொண்டான். அவன் மறைவாய் நின்றிருந்தபொழுது குழந்தை குள்ளனை நோக்கி "குள்ளப்பா! நாம்ப யெப்ப மரங்களையும் பூக்களையும பாப்பம்? எனக்கு ஒடம்பு நோவுது" என்றது.

அம்பலவாணன் கண்ணீருடன் "குழந்தாய்! கூடிய சீக்கிரத்தில் காண்போம்" என்றான்.

குழந்தை:—"சீக்கிரமா? நிஜமாவா, குள்ளப்பா? எக்கு ரொம்ப சந்தோசம்! குள்ளப்பா! என்னை உட்டோதே. அந்தக் கெட்ட மனசன் மறுபடியும் வந்து இடிச்சித்தள்ளுவான்" என்றது.

அம்ப:—"கண்மணி! உன்னை விடமாட்டேன். சந்திரா, தூங்கிவிடு. என்மேற் சாய்ந்துகொண்டு கண்ணை மூடிக்கொள். உனக்கு மிகவும் அலுப்பாயிருக்கிறதோ?" என்றான்.

குழந்தை:—"ஆமாம்" என்று சொல்லிவிட்டு அவன் மேற் சாய்ந்துகொண்டது.

பிறகு அங்கே நிசப்தமாயிருந்தது. அருகாமையில் மறைந்திருந்த தங்கமணி இருமிக்கொண்டே அங்கு வந்தான். அம்பலவாணன் பேசாமலிருக்கும்படி அவனுக்குச் சைகை காட்டினன். தங்கமணி அவனையணுகிச் சற்றுநேரம் குழந்தையை உற்று நோக்கினன். அரைமணி நேரமாயிற்று. குழந்தை அசைவற்றுப் படுத்திருந்தது. அம்பலவாணன் அதையே பார்த்துக்கொண்டிருந்தான். பிறகு அவன் "ஆஹா! எவ்வளவு சுகமாய் நித்திரைசெய்கிறான். புரளாமற் படுத்திருக்கிறான். அவன் எழுந்திருக்கும்போது உடம்பு சொஸ்தமாய்விடும்—சொஸ்தமாய்விடும்" என்றான்.

தங்கமணி விசனத்துடன் "ஆம் அவன் எழுந்திருக்கும்போது எல்லாம் குணமாய்விடும்" என்றான்.

தங்கமணி இவ்வாறு பேசியதைக் கேட்டதும் அம்பலவாணனுக்கு ஏதோ ஒரு எண்ணம் தோன்றியது. அவன் சற்றுநேரம் தங்கமணியைச் சந்தேகத்துடன் பார்த்துவிட்டுப் பிறகு குழந்தையைத் தட்டிக்கொண்டிருந்தான். அரைமணி நேரமானதும் தங்கமணி குள்ளனுடைய தோளின்மேற் கையைவைத்து "ஐயா, குழந்தை வெகுநேர்த்தியாகத் தூங்குகிறான்! ஆஹா! மிகவும் சுகமாய்த் தூங்குகிறான்" என்று விசனத்துடன் சொன்னன்.

அம்ப:—இல்லை, இல்லை. நன்றாய்த்தூங்குகிறான். அவனைத் தொந்தரவு செய்யாதே, விழித்துக்கொண்டதும் சௌக்கியமாய்விடும்.

தங்க:—அவனை ஒருவருந்தொந்தரவு செய்யமுடியாது. பைத்தியக்கார மனிதனே! குழந்தையைப்பார்!

அதைக்கேட்டதும் அம்பலவாணன் திகிலடைந்தவனாய்க் குழந்தையை உற்று நோக்கி விட்டுப்பிறகு அதைத்தட்டிக் கொண்டிருந்தான். தங்கமணி உடனே குழந்தையின் மேல் போர்த்திருந்த சட்டையை நீக்கிவிட்டு "இதோபார்த்தாயா?" என்றான்.

அம்பலவாணன் குழந்தையைப் பார்த்துக் கொண்டே "இல்லை, இல்லை. அவன் இறந்துபோகவில்லை! இறந்துபோகவில்லை! ஐயா, அவன் மிகவுஞ்சிறியவனாயிற்றே! இவ்வளவு சீக்கிரத்திலா இறந்துபோவான்! என்னைப்பார். நான் கிழவன், அவன் சிறுவன்; குழந்தையாயிற்றே! சந்திரா, சந்திரா, விழித்துக்கொள். நாம் நாட்டுப்புறத்திலிருக்கிறோம். கண்மணி! எழுந்திரு! குள்ளப்பனைப்பார்! இதோபார்! பக்ஷிகளும் மாங்களுமிருக்கின்றன! ஐயோ! எழுந்திருக்கவில்லையே! குழந்தை களைத்துப்போய்விட்டது. அவன் அவன்-—" என்று சொல்லி மயங்கி, குழந்தைக்கு முத்தந்தந்தான். அதனுடல் குளிர்ந்திருந்ததைக்கண்டு அவன் பிரமிக்கலானன்.

தங்கமணி "அவன் இறந்துவிட்டான். வா, இறந்ததே

மேல். கிழவா! அவனுக்கு இப்பொழுதுதான் சுகம்! அவனை விட மேலானவர்களெல்லாம் இறந்துவிட்டதைக் கண்டும் நான் சந்தோஷமாயிருக்கிறேன்! குழந்தையைக் கொடு" என்றான்.

அம்பலவாணன் குழந்தையை மார்போடணைத்து அதைச் சட்டையால் மூடிவிட்டான். அதைக் கண்ட தங்கமணி 'சீ, நான் உன்னை விட்டுப்போகமாட்டேன். வேண்டுமானால் நீயே அவனை எடுத்துக்கொண்டு என்னோடுவா. இங்கே தங்கக்கூடாது" என்றான்.

அம்பலவாணன் அழுதவண்ணம் "இல்லை, வீட்டிற்குப் போகவேண்டும். அவனை அங்கே அழைத்துப் போவதாகக் கூறினேன். ஆகையால் அவன் போகவிரும்புவான்" என்றான்.

தங்கமணி "வீடு எங்கிருக்கிறது?" என்று கேட்டான். அப்பொழுதே சென்னைக்குப்போக அவனுக்கிஷ்டமில்லை. அவன் என்ன சொல்லியும் பயன்படாமற்போயிற்று. அம்பலவாணன் குழந்தை இறந்துவிட்டதென்று உணர்ந்ததும் அறிவழிந்தவனாய் "வீட்டுக்குப் போகவேண்டும். அவனை அழைத்துப்போவதாகச் சொல்லியிருந்தேன்" என்று பிதற்ற ஆரம்பித்தான்.

தான் என்ன சொல்லியபோதிலும் குள்ளன் கேட்கமாட்டானென்றெண்ணி, தங்கமணி அவனை ரெயில்வே ஸ்டேஷனுக்கு அழைத்துச்சென்றான். குள்ளன் குழந்தையையெடுத்துக்கொண்டு தங்கமணியிடம் ஒரு மூட்டையைக் கொடுத்தான். இறந்துபோன குழந்தை பத்மாவதியின் பிள்ளையென்று அவனுக்குத் தெரிந்திருந்தும் தங்கமணி அதை வெளிக்குக் காண்பிக்கவில்லை அவன் கூறியவாறே அக்குழந்தை இறந்ததே மேலென்று கருதலானான்.

பத்மாவதியின் இரகசியவாழ்க்கையை வெளிப்படுத்துமாறு அக்குழந்தையினிடத்தில் யாதேனுமொரு பொருளிருக்குமோவென்று அவன் சிந்திப்பானாயினன். அம்பலவாணனுக்கு ஏதேனுந்தெரிந்திருந்தாலும் அவன் அதை இப்பொழுது சொல்லுவானோவென்று சந்தேகித்தான்.

தானெடுத்துச்சென்ற மூட்டையில் ஏதாவது இருக்கலாமென்று யூகித்து அவன் அதை உயரப்பிடித்துக்கொண்டே கவனத்துடன் பார்த்தான். அந்த மூட்டையில் ஒரு காகிதக் கட்டு இருந்ததைக் கண்டு அதை வெளியிலெடுத்தான்.

பல்லாவரம் ஸ்டேஷனை யடைந்ததும், தங்கமணி ஓர் விளக்கண்டைசென்று அக்கடிதங்களைப் பரிசோதிக்கலானான். அவைகளில் 'தபாலு' என்று கையெழுத்துப் போட்டிருந்தது. அவைகளைப் படித்துப்பார்த்ததால் யாதொரு விஷயமுந்தெளிவாய் விளங்கவில்லையெனினும் பத்மாவதி ஒருவனை மணம் புரிந்துகொண்டாளென்பது அவனுக்கு இப்பொழுது நன்றாய் விளங்கிற்று.

பிறகு அவன் ஒரு காகித உறையைப்பிரித்துப்பார்த்தான். அதிலொரு பொன் மோதிரமிருந்தது. அதை வெளியிலெடுத்துப்பார்த்ததும் அதன்மேல் தீனதயாளுவின் முத்திரையிருக்கக் கண்டு அவன் ஆச்சர்யப்படலானான். பத்மாவதியை வஞ்சித்துக்கொன்ற பாதகனைப்பழிக்குப் பழிவாங்கவேண்டுமென்று முன்னமே அவன் சபதஞ்செய்துகொண்டானல்லவா? உடனே தீனதயாளுவின்மேல் அவன் மிக்ககோபங்கொள்ளலானான். அவனிடம் அகப்பட்ட கடிதங்களினாலும் மோதிரத்தினாலுமே இது வரையில் தெரியாதிருந்த மர்மம் வெளியாய்விட்டது.

## 27. தங்கமணியின் சபதம்.

தீனதயாளு பல்லாவரம் ஸ்டேஷனையடைந்ததும் அவன் மனதிலுண்டான பயம் அகல ஆரம்பித்தது. அவன் முகம் மாத்திரம் வெளுத்திருந்தது. சென்னைக்கு வந்துசேர்ந்ததும் அவன் எப்பொழுதும் போலிருந்தான். அவன் தான் பயந்ததை நினைத்துத் தனக்குள்ளேயே நகைத்துக்கொண்டான். சதாகாலமும் ஆரவாரமுள்ள சென்னைக்கு வந்ததும், பல்லாவரத்தில் தன்னைப் பயமுறுத்தியது தன் மனதில்தோன்றிய எண்ணங்களேயென்று நினைக்கலானான். ஆனால் அவன் மிகவும் பயந்துவிட்டபடியால் யாராவது ஒரு டாக்டரிடஞ் செல்லவேண்டுமென்று தீர்மானித்தான்.

அடுத்த இரண்டு நாட்களும் கம்பெனியில் தங்கியிருந்தபோது கமலாஸனியை எப்பொழுது மணம்புரிந்துகொள்ளலாமென்று தீனதயாளு யோசித்தான். கம்பெனி முழுகிப்போகும் வரையில் கலியாணத்தை நிறுத்தி வைக்கலாமென்று அவனுக்குத் தோன்றிற்று. கம்பெனியை இன்னும் மூன்று மாதகாலம் நடத்தி வரவேண்டுமென்றும் மூன்றுமாதக் கடைசியில் விவாகம் முடிந்துவிட வேண்டுமென்றும் தீர்மானித்துவிட்டான். ஸரஸ்வதி வற்புறுத்தினால் கமலாஸனியும் அதற்கு இணங்கிவிடுவாளென்று அவன் நிச்சயமாய் நம்பியிருந்தான்.

தீனதயாளு அதிகமாய் உழைத்து வந்ததால் அவன் தேகம் கேவலமான ஸ்திதியிலிருந்ததென்றும் தேகசௌக்கியத்திற்காக அவன் எங்கேயாவது வெளியூருக்குச் செல்லவேண்டுமென்றும் டாக்டர்கள் கூறியதாக அவனுக்குத்தெரிந்தவர்கள் பேசிக்கொள்ளலாயினர்.

அது முற்றும் உண்மை தான். அவ்விஷயம் தீனதயாளுவுக்கே நன்றாய்த் தெரிந்திருந்தது. பல்லாவரத்தில் அன்றிரவு பயந்ததே அவன் தேகவலிமையைக் குறைத்தது; அவன் மனம் கலங்கிவிட்டது. அவன் சிலகாலம் யாதொருவேலையுஞ் செய்யாமலிருக்கவேண்டுமென்று கருதினான். தீனதயாளு

திருவல்லிக்கேணிக்குச்சென்று விவாகத்தை எப்பொழுது நடத்தலாமென்று ஸரஸ்வதியைக் கேட்டான். கல்யாணமான தும் தானெங்கேயாவது வெளியே செல்லவேண்டுமென்றும் அவளிடந் தெரிவித்தான்.

அதைக் கேட்டதும் கமலாஸனி இடியுண்ட அரவம் போல் நடுங்கினாள். அவள் ஒரு வருஷம் வரையிலாவது விவாகத்தைப் பற்றி நினைக்கக்கூடாதென்று எண்ணியிருந்தாள். தீனதயாளுவுக்கும் தனக்கும் நடந்தேறும் மணத்தை அவள் மரணச்சடங்கென்றே கருதினாள். ஆனால் ஸரஸ்வதி ஆறுவாரங்களுக்குள் முகூர்த்தம் நடக்கவேண்டுமென்று கூறினாள். அதற்குள் கலியாண வேலைகள் முடிந்து விடுமென்று அவள் எண்ணினாள். கமலாஸனியும் அதற்குச் சம்மதித்தே தீரவேண்டியிருந்தது.

கோர்ட்டுகளிலும் கம்பெனிகளிலும், சிங்காரத்தோட்டங்களிலும் சித்திர வீதிகளிலும், வீடுகளிலும் பங்களாக்களிலும், தீனதயாளுவின் விவாகப்பேச்சே குடிகொண்டிருந்தது. ஸரஸ்வதி ஜவுளிக்கடைகளுக்குச்சென்று விலையுயர்ந்த ஆடைகளை வாங்கி வந்தனள். அவள் பங்களாவில் தையற்காரர்கள் விடாது வேலை செய்துகொண்டிருந்தார்கள். விவாக விஷயம் எல்லாப் பத்திரிகைகளிலும் பிரசுரஞ் செய்யப்பட்டது. அதைப் பார்க்கும்போதெல்லாம் கமலாஸனிக்கு அவளை யறியாமலே விசனமுண்டாயிற்று.

ஒவ்வொரு நாளும் அஸ்தமனம் முதல் சூர்யோதயம் வரையில் தீனதயாளுவைப் போலவே கமலாஸனியும் கவலையுறலானாள். ஆனால் அதைப் பிறர் அறிந்தார்களல்லர். காலையில் அவள் முகம் வெளுத்திருக்கக் கண்டால் தலை வலியால் தன் மகள் வருந்திக்கொண்டிருந்தாளென்று ஸரஸ்வதி நினைப்பது வழக்கம். அவள் இரவு முழுவதும் தூக்கமின்றிக் கண்ணீர்பெருக்கிக் கொண்டிருந்தாளென்பதை அவள் அறிந்துகொள்ளவில்லை.

கமலாஸனியின் மனதிலிருந்ததை ஒருவன் நன்றாய் அறிந்திருந்தான். தான் அங்கே வரும்போதெல்லாம் கமலாஸனி சந்தோஷமற்றிருந்ததைக் கண்ணுற்றிருந்த சுந்தரம் அவள் எதையோ நினைந்து வருந்துகிறாளென்று அறிந்து கொண்டான். விவாகத்தைப்பற்றிப் பேசும்போதெல்லாம் அவள் முகம் மாறுபட்டிருந்ததையும் அவன் கவனித்திருந்தான்.

ஒருநாள் அவன் திடீரென்று கமலாஸனியின் அறைக்கு வந்தபோது அவள் கண்ணீருடனிருந்ததைக் கண்டான். ஆனால் அவள் அப்பொழுது அழுது கொண்டிருக்கவில்லை.

அவன் அப்பொழுது அவளை நோக்கி "கமலாஸனி, நான் உன்னிடம் ஒரு சங்கதி பேசவேண்டும். நான் மிகவும்

சிறியவனுயிருந்தும் உன் கார்ட்டியனுக நியமிக்கப்பட்டிருக்கிறேனென்பது உனக்குத் தெரிந்த விஷயமே. இப்பொழுது உண்மையைச் சொல். இந்த விவாகத்தை நிறுத்தி வைப்பதில் உனக்குச் சம்மதந்தானு?" என்றான்.

அதைக் கேட்டதும் அவள் முகத்தில் கோபத்தோடு கலந்த ஒரு களை தோன்றியது. அவள் தன் மனதிலிருந்ததையெல்லாம் அவனிடந் தெரிவித்து விடுபவள்போல் காணப்பட்டாளெனினும் யாதும் பேசாது மௌனமாயிருந்தாள்.

அவன் மறுபடியும் அவளைப் பார்த்து, "கமலா! நீ சந்தோஷமாயிருக்கவில்லையென்பது உனக்கே தெரியும். உனக்கு இந்த விவாகம் சம்மதமில்லையென்று எனக்குத் தோன்றுகிறது. ஆனல் உன் தாயாரின் இஷ்டத்திற்குமாருக நாமென்ன செய்யக்கூடும்? வேண்டுமானல் விவாகத்தைக் கொஞ்ச நாளைக்கு நிறுத்திவைக்கலாம். அது என்னல் செய்யக்கூடும். உனக்கிஷ்டமானல் அப்படியே செய்கிறேன்" என்றான்.

சற்றுநேரம் வரையில் யாது சொல்வதென்று அறியாமல் கமலாஸனி மயங்கிக்கொண்டிருந்தாள். அச்சமயத்தில் விருந்தினராய் வந்த சிலரை வரவேற்கும் ஸரஸ்வதியின் உரத்த குரல் அவள் காதில் விழுந்தது. உடனே கமலாஸனி சுந்தரத்தைநோக்கி "வேண்டாம், விவாகத்தை நிறுத்தி வைக்கவேண்டாம். நீங்கள் இவ்வளவு சிரமமெடுத்துக் கொண்டதற்காக உங்களுக்கு மனமாரவந்தன மளிக்கிறேன்" என்று கூறினுள்.

சுந்தரம் அவளைவிட்டுச் சென்றதும் அவள் மறுபடியும் விசனத்தோடிருந்தாள். அவள் முகத்தில சந்தோஷம், நம்பிக்கை, ஆசை முதலியவைகளின் குறிதோன்றவேயில்லை. அவசியம் செய்யவேண்டிய காரியத்தை நிறுத்திவைப்பதனுல் யாது பயன்? செல்வராஜன் எங்கேயோசென்று விட்டான். அவனுடன் பழகியதையே அவள் மறந்துவிடவேண்டியவளாயிருந்தாள். அவன் மேற்கொண்ட காதலையும் அறவே ஒழிக்க முயன்றனள். இப்பொழுதும் அவனை அவள் அடிக்கடி பார்க்கும்படி நேரிட்டால் அவனை விலக்கிவிட அவள் மனம் இடந்தருமோ? அவள் அவனேடுபேசிய இனியவசனங்களை மறந்துவிடுவாளோ? இதையெல்லாம் நினைக்கும்போது அவன் மீது கொண்ட விசுவாசம் திரும்பி வரலாயிற்று. அவளுடைய இயற்கை யறிவு—பெண்களின் விசித்திரமான இயற்கையறிவு—அவளைத் தன் வசப்படுத்தலாயிற்று. பல்லாவரத்தில் அன்றிரவு நிகழ்ந்த சம்பவம் இப்பொழுது அவள் மனதைவிட்டுக் கொஞ்சங் கொஞ்சமாக நீங்க ஆரம்பித்தது. ஒரு வேலைக்காரன் அவ்விடம் வரவே அவள் மனேராஜ்யம் செய்வதைவிட்டுத் திடுக்கிட்டெழுந்தாள். அவ்வேலைக் காரன் கதவை பிடித்ததுகூட அவளுக்குக் கேட்கவில்லை. அவன் அவளெதிரில் வந்து நின்றபொழுது தான் அவனைக்கண்டாள்.

வேலைக்காரன் :— அம்மா, உங்களைப் பார்க்கவேண்டு மென்று ஒருவன் வந்திருக்கிறான்.

கமலா:—என்னைப்பார்க்கவா ?

வேலைக்காரன்:—ஆம் அம்மா, உங்களை அவசியம்பார்க்க வேண்டு மென்கிறான்.

கமலா:—ஆமாம், அவன்யார்? அவன் பெயரென்ன ?

வேலைக்காரன்:—அம்மா அவன் பெயரைச்சொல்லமாட் டேனென்கிறான். அவன் பல்லாவரத்திலிருந்து வந்திருப்பதாகக் கூறுகிறான். குதிரைமேலிருந்து விழுந்தவன் இவன்தான் என்று நினைக்கிறேன்.

வந்தவன் தங்கமணியென்று கமலாஸனி அறிந்துகொண் டாள். அவன் அவளை எதற்காகத் தேடிவந்தான்? அவனைப் பற்றி நினைக்கும்போது கமலாஸனிக்கு மிக்ககோபமுண்டா யிற்று. பல்லாவரத்தில் அன்றிரவு அவன் கமலாஸனியை மானபங்கஞ்செய்யவில்லையா? அவனைப்பார்க்க முடியாதென்று தெரிவித்து விடுவதாக முதலில் தீர்மானித்தாள்; ஆனால் அவன் செல்வராஜனைப்பற்றி ஏதேனுந்தெரிவிக்க வந்திருப்பானென் றெண்ணியவளாய் அவனைத்தன்னிடம் அழைத்துவரும்படி வேலைக்காரனுக்குக் கட்டளையிட்டாள். அவள் நாற்காலியை விட்டெழுந்து தங்கமணியின் வரவை எதிர்பார்த்தவளாய்க் கட்டிலின்மேல் சாய்ந்துகொண்டு நின்றிருந்தாள்.

சற்றுநேரத்திற்கெல்லாம் தங்கமணி கதவைத்திறந்து கொண்டு அங்கேவந்துநின்றான். அவன் கமலாஸனியைப் பார்க்க வெட்கியவனாய்த்தலைகுனிந்தவண்ணம் நின்றிருந்தான்.

கமலா :—தங்கமணி, நீ ஏதோ ஒரு முக்கியமான விஷ யத்தை முன்னிட்டு இங்குவந்திருக்கிறு யென்று எண்ணுகி றேன். என்ன சங்கதி ?

தங்க :—ஆம் அம்மா, மிகவும் முக்கியமான விஷயத்தைக் கூறவே இப்பொழுது வந்திருக்கிறேன். தீனதயாளுவைப் பற்றி ஒரு விஷயம் தெரிவிக்கப் போகிறேன்.

"தீனதயாளு" என்னும் பெயரைக் கேட்டவுடன் கம லாஸனியின் உடல் நடுங்கிற்று. அவனைப்பற்றி வேலைக்காரர் கள் அவதூறாகப் பேசிக்கொண் டிருப்பார்களென்றும், அம் மாதிரி பேச்சையே தங்கமணி இப்பொழுது பேசுவானென் றும் எண்ணி, அவனை நோக்கி "தங்கமணி நீ சொல்லும் விஷ யம் சரியானதாக இருக்கவேண்டும். அவதூறான பேச்சுகளை நான் கேட்கமாட்டேன். எனக்குச் சம்பந்தமில்லாத விஷயத் தைப்பற்றியும் இங்கே பேசவேண்டாம்" என்று சொன்னாள்.

தங்க :—"அம்மா, அது உங்களைப்பற்றிய விஷயமே. நீங் கள் அவசியந் தெரிந்துகொள்ளவேண்டும். அது செல்வ ராஜனைப் பற்றியதாகவு மிருக்கிறது." என்றான்.

செல்வராஜனது பெயரைக்கேட்டதும் அவள் இருதயம்

துடித்தது. தங்களிருவருக்கும் சம்பந்தமுள்ள விஷயம் ஏது வாயிருக்கலாமென்று யோசித்தாள். ஏதோ புதிதான விஷயத்தைத் தங்கமணி கூறப்போகிறானென் றெண்ணிய மாத்திரத்தில் அவளுக்குப் பெருமகிழ்ச்சி யுண்டாயிற்று. அவள் தனக்குண்டான ஆச்சரியத்தை அடக்கிக்கொண்டு தங்கமணியைப்பார்த்து 'சரி, தெரிவி பார்ப்போம்.' என்று சொன்னாள்.

தங்க:—"பல்லாவரத்தில்—அன்றிரவு நிகழ்ந்த—சம்பவத்தைப் பற்றிச் சொல்லப்போகிறேன். அப்பொழுது நீங்கள்—" என்று மயங்கினான்.

கமலா :—சரி, அறிந்துகொண்டேன் — அதைப்பற்றி என்ன?

தங்க :—அம்மா, அது முற்றும் தீனதயாளுசெய்த சதியோசனையேயன்றி வேறன்று. செல்வராஜனுக்கு நடந்த தொன்றுந் தெரியாது.

அதைக் கேட்டதும் கமலாஸனியின் தலை கிறுகிறுத்தது. அவ்வறை சுழன்று வருவதுபோல் அவளுக்குத் தோன்றிற்று. உடனே கட்டிலைக் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு "சதியோசனையா? எனக்கொன்றும் விளங்கவில்லையே!" என்றாள்.

தங்க :—ஆம், அம்மா. அது தீனதயாளு செய்தகாரியந்தான். அவன்தான் அம்மாதிரி யோசித்து முடித்தான். அவன் என்னைச் செல்வராஜனிடம் வேவுகாரனாக அனுப்பித்திருந்தான். நான் அன்று காலையில் உங்களிடங் கொடுத்த கடிதமுங் கள்ளக்கடிதமே. அவன்தான் வண்டியை அங்கே வரவழைத்திருந்தான். பாவம்! செல்வராஜனுக்கு ஒன்றுந் தெரியாது.

கமலா :—போதும், நிறுத்து. இதை நம்பமுடியாது. தீனதயாளு அம்மாதிரி இழிந்த தொழிலைச் செய்வாரா? முடியாது—முடியாது.

தங்க :—இல்லை, அம்மா. நான் சொல்வது முற்றும் உண்மையே. நான் இவ்விஷயத்தை வக்கீலின் முன்பாக வேண்டுமானாலும் சொல்லுவேன். இப்பொழுது எல்லா மர்மங்களையும் தெரிவித்து அவைகள் எப்படி முடிந்தனென்று கூறுகிறேன்.

கமலாஸனி ஆச்சர்ய முற்றவளாய் உட்கார்ந்திருந்த பொழுது அவள்மார்பு படபடவென்று அடித்துக்கொண்டது; கண்கள் சுழன்றன. அவள் சற்று நேரம் பேசாமலிருக்கும்படி தங்கமணிக்குச் சைகை செய்தாள். சற்று நேரமானதும் தங்கமணியை நோக்கி "என்ன சங்கதி?" என்று கேட்டாள்.

தங்கமணி சில மாதங்களாக நடந்து வந்த சதையைத் தெரிவிக்கலானான்: அவன்தான் செல்வராஜனிடம் வேலையிலமர்ந்ததையும், அங்கு நடந்த விஷயங்களைத் தான் தீனதயாளுவுக்குத் தெரிவித்துக்கொண் டிருந்ததையும், தன்னிடங்

கொடுக்கப்பட்ட கடிதங்களை அவனிடங்கொண்டுபோய்க்கொடுத்ததையும், செல்வராஜன் அவளுக்கெழுதிய கடிதத்தைத் தீனதயாளு நெருப்பிலெறிந்துவிட்டு ஓர் கள்ளக் கடிதமெழுதியதையும் அவளிடங் கூறினான். பிறகு, கமலாஸனியை அன்றிரவு செல்வராஜன் வீட்டண்டை வரவழைத்ததும், அங்கே வண்டிவந்து நின்றிருந்ததும், சமயத்தில் தீனதயாளு மோட்டார்காரில் வந்ததும் தீனதயாளுவின் ஏற்பாடுகளே யென்று தெரிவிக்கலாயினான்.

கமலா :—இப்பொழுது இவ்விஷயங்களை எதற்காக என்னிடந் தெரிவிக்கிறாய்? வேவுகாரனா யிருந்தது போதாதென்று நம்பிக்கைத் துரோகியாகவு மிருக்கவேண்டுமென்றெண்ணுகிறாயோ?

தங்க :—அம்மா! நான் வேவுகாரனாக இருந்தது என் குற்றமன்று; நம்பிக்கைத் துரோகி யென்று கூறுகிறீர்கள்? ஆம்—தீனதயாளுவுக்கு நான் நம்பிக்கைத் துரோகிதான்; வேவுகாரனும் தான் சிக்கியிருந்த வலையினின்றுந் தன்னை விடுவித்துக்கொள்ளலாமல்லவா? பாவிகளும் தாங்கள் செய்த கெட்ட காரியங்களைக் கூறி நன்னெறியில் திரும்பலாமல்லவா?

கமலா :—நீ என்னிடம் இதையெல்லாங் கூறுவதற்கு அதுதான் காரணமோ?

தங்க :—இல்லை, அம்மா. இப்பொழுது தெரிந்த ஓர் விஷயம் முன்னமே தெரிந்திருந்தால் நான் வேவுகாரனாக இருந்திருக்கமாட்டேன்.

கமலா :—இப்பொழுது உனக்குத் தெரிந்துள்ள சங்கதி என்ன? நீ சொல்லிய விஷயம் முற்றும் ஆச்சரியத்தை விளைவிப்பதாக இருப்பதால் இன்னும் ஏதாவதிருந்தால் தெரிந்து கொள்ள விரும்புகிறேன். நீ இப்படிப்பட்டவனென்று நானிதுவரையில் நினைக்கவேயில்லை.

தங்க:-அம்மா, சொல்லுகிறேன் கேளுங்கள். அது மிகவும் பெரியகதை; ஆயினும் நானதைச் சுருக்கிச் சொல்லுகிறேன். நான் தீனதயாளுவை முதல்முதல் காண்பதற்குமுன் அவன் கம்பெனித் துறையில் மேஸ்திரியாக இருந்தேன். சுமார் ஆறுமாதத்திற்குமுன் நானிருந்த வீட்டண்டை கையிலோர் குழந்தையை வைத்துக்கொண்டு ஒருஸ்திரீ நின்றிருந்ததைக் கண்டேன். அவள் என் சிறியதகப்பன் மகள்; அவள் பெயர் பத்மாவதி. அவள் நாலைந்து வருஷங்களாக எங்கேயோசென்றிருந்தாள். அவள் ஒரு மனிதனோடிருந்தாளென்று நான் கேள்வியுற்றிருந்தேன்-ஆனால் அவள் அவனை விவாகஞ்செய்துகொண்டதும் கொள்ளாததும் அப்பொழுது எனக்குத் தெரியாது. அந்த மனிதனைக் கண்டுபிடிப்பதற்காகவே அவள் சென்னைக்கு வந்திருந்தாள். நான் அவளைக் கண்டபொழுது அவள் மிகவும் அசௌக்கியமாயிருந்தாள். உடனே அவளை என் வீட்டிற்கு

அழைத்துச்சென்று அவளுக்குவேண்டிய சிகிச்சைசெய்து வந்தேன். டாக்டர்களுக்குக் கொடுக்கவும் மருந்து வாங்கவும் என்னிடம் அப்பொழுது மிக்க பணமில்லையாதலால் கம்பெனிப்பணத்தில் கொஞ்சம் எடுத்துக்கொண்டேன்—ஆனால் நான் அதைத் திருடவில்லை. என் சம்பளத்திற்கொடுத்து விடலாமென்றே எடுத்துக்கொண்டேன். அது முதல் நான் அவன் கையில் சிக்கிக்கொண்டேன்.

கமலாஸனி அவனை அனுதாபத்துடன் பார்த்துக்கொண்டிருந்தாள். அவனுடைய குணங்கள் யாவும் இப்பொழுது தான் அவளுக்குத் தெரியலாயின. அவனுக்கு ஏதோ துன்பம் நேரிட்டிருக்கவேண்டுமென்று செல்வராஜன் கூறியது உண்மையாய் விட்டது.

தங்கமணி மறுபடியும் அவளைநோக்கி "பத்மாவதியின் உடம்பு கொஞ்சம் சொஸ்தமானதும் அவள் என்னை விட்டு எங்கேயோ சென்றாள். சில நாளைக்கெல்லாம் அவள் தீனதயாளுவின் பங்களாவினருகில் இறந்து கிடந்தாளென்று கேள்வியுற்றேன்" என்றான்.

கமலா:—இறந்து விட்டாளா!

தங்:—ஆம், தீனதயாளுவின் பங்களாவண்டை இறந்து விட்டாள். அவள் குழந்தையை நுங்கம்பாக்கத்திலுள்ள ஒரு குள்ளன் வளர்த்து வந்தான். செல்வராஜன் ஒரு முறை அக்குழந்தையைக் கண்டு அது சௌக்கியமாயிருக்கிறதென்று என்னிடந்தெரிவித்தார். இப்பொழுது நான் சொல்லப்போகும் விஷயந்தான் கதையின் விநோதமானபாகம். சிலநாளைக்கு முன் குழந்தையைப் பார்க்கவேண்டுமென்றெண்ணி அக்குள்ளனுடைய வீட்டுக்குச் சென்று பார்த்தேன் அவன் குழந்தையையெடுத்துக்கொண்டு அப்பொழுது தான் பல்லாவரத்துக்குப் போய்விட்டானென்று கேள்வியுற்றதும், நானும் அங்கேசெல்லத் தீர்மானித்தேன். செல்வராஜன் அக்குழந்தையைப்போல் சிலைசெய்ய எண்ணியிருந்ததால் அதை வந்து பார்க்குமாறு குள்ளனை வேண்டிக்கொண்டு தன் விலாஸத்தையுங்கொடுத்து வந்திருப்பாரென்று எனக்குத் தோன்றியது. உடனே சேத்துப்பட்டு ஸ்டேஷனுக்குச் சென்றேன். அங்கே தீனதயாளு வேஷத்துடன் நின்றதைக் கண்ணுற்று அவனைப் பின்பற்றிச் சென்றேன். அவனும் பல்லாவரத்துக்கேசென்றான். பல்லாவரம் ஸ்டேஷனில் இறங்கி அவன் செல்வராஜனுடைய வீட்டண்டைசென்று அங்குள்ள தோட்டத்தில் எதையோ புதைத்து விட்டு வந்தான். அது இன்னதென்று எனக்குத் தெரியாது. ஆனால் புதைத்த இடத்தை அடையாளமாய்ப் பார்த்து வந்திருக்கிறேன். அவன் அதைப் புதைத்துக் கொண்டிருந்தபொழுது அங்குள்ள சிறு வீட்டில் குழந்தையின் அழுகைக் குரல்கேட்டது. அவன் வேலையைமுடித்

துக்கொண்டு சென்றதும் நான் குழந்தையினிடஞ்சென்றேன். அப்பொழுது அது மரணமடையுந் தருவாயிலிருந்தது. குழந்தை அசௌக்கியமாயிருந்ததால் அதை நாட்டுப்புறத்துக்கு எடுத்துச் செல்லுமாறு டாக்டர்கூறியதன்மேல் குள்ளன் அதைப் பல்லாவரத்துக்கு எடுத்துச்சென்றான். செல்வராஜன் அங்கில்லாத சங்கதி அவனுக்குத்தெரியாது. குழந்தை சற்று நேரத்திற்கெல்லாம் இறந்துவிட்டது. பிறகு நாங்களிருவரும் பல்லாவரம் ஸ்டேஷனுக்கு வந்தோம். வரும்போது குள்ளன் என்னிடம் ஒரு மூட்டையைக்கொடுத்து எடுத்து வரச்சொன்னான். அதிலிருந்த கடிதங்களைப் பரிசோதித்துப் பார்த்ததில் பத்மாவதி தீனதயாளுவை மணம்புரிந்து கொண்டிருந்த விஷயம் தெரிந்துவிட்டது. மேலும் அவன் அவளுக்குக் கொடுத்திருந்த மோதிரமும் அந்தக் கடிதங்களோடு இருந்தது. தீனதயாளுவே பத்மாவதியைக் கொலைசெய்து விட்டான்! அவனே நம்பிக்கைத் துரோகஞ்செய்த கிராதகன்!

அதைக்கேட்டதும் கமலாஸனி திகைத்துவிட்டனள். தீனதயாளு இப்படிப்பட்ட பாதகனென்று அவளுக்கு இதுவரையில் தெரியாதாகையால் இப்பொழுது தங்கமணி கூறியதைக்கேட்ட மாத்திரத்தில் அவள் பெருந்திகிலடைந்தாள்.

தங்கமணி:—(விசனத்துடன்) அவன் எதற்காகப் பத்மாவதியைக் கைவிட்டு விட்டானோதெரியவில்லை. அவள் உங்களைக்கண்ட பிறகு அவன் மனம்மாறுபட்டிருக்கலாம். ஏழையாயிருந்தாளென்றும் அங்ஙனஞ் செய்திருக்கலாம்—அல்லது

கமலாஸனி வெட்கியவளாய் முகத்தைக் கரங்களால் மூடிக்கொண்டு "இல்லை, இல்லை. அதனாலன்று" என்றனள்.

சற்றுநேரம் வரையில் அவ்வறையில் யாதொரு சந்தடியுமில்லாமலிருந்தது. கமலாஸனி இன்னும் முகத்தைமூடிக்கொண்டிருந்தாள். அவள் அழுது கொண்டிருந்தாளென்று தங்கமணி அறிந்துகொண்டான். கடைசியாக அவள் அவனை நோக்கி "நீ ஏன் செல்வராஜனிடம் போகவில்லை?" என்று கேட்டாள்.

தங்க:—அம்மா, அவர் இருக்குமிடந் தெரியவில்லை. உங்களுக்காவது தெரியுமென்று எண்ணியிருந்தேன். பத்மாவதியை வஞ்சித்தவன் இன்னானென்று தெரிந்தவுடன் அவரிடஞ்செல்லவேண்டுமென்றிருந்தேன். அவரை எங்கே தேடியுங் காணாமையால் இப்பொழுது உங்களிடம் வந்தேன். தீனதயாளுசெய்யத் துணிந்த மோசவேலையை உடனே அழிக்கவேண்டுமென்று எனக்குத் தோன்றிற்று.

கமலா:—இன்னும் ஏதாவது விசேஷமுண்டா?

தங்க:—ஒன்றுமில்லை, அம்மா.

தங்கமணி கூறியதெல்லாஞ் சரியானதென்றே அவளுக்குத் தோன்றிற்று. அவள் என்ன செய்யலாம்? இவ்விஷயங்

களைத் தன் தாயாரிடம் சொல்லப்பயந்தாள். அவள் எங்ஙனம் நடப்பது? அப்பொழுது அவள் மனதில் ஓரெண்ணம் தோன்றியது. அவள் தங்கமணியை நோக்கி "நீ இப்பொழுது என்னிடந் தெரிவித்த விஷயங்களையெல்லாம் சுந்தரத்தினிடந்தெரிவி. இரு, அவருக்கு ஒரு கடிதங்கொடுக்கிறேன்" என்று சொல்லிவிட்டு ஓர் கடிதமெழுதிக் கொடுத்தனள். அதில், தங்கமணியைத் தனியாயழைத்துப் பேசுமாறு சுந்தரத்துக்கு எழுதியிருந்தாள். அவன் கூறுவது முற்றும் உண்மையென்று தான் நம்புவதாகவும் அதில் தெரிவித்திருந்தாள். பிறகு அவள் தங்கமணியை அழைத்து "இக்கடிதத்தைக் காண்பித்தால் அவர் உன்னை அழைத்துப் போவார். இங்கே கூறிய சங்கதிகளையெல்லாம் ஒன்றுகூடவிடாமற்சொல்லிவிடு. நீ சொல்வது முற்றும் நிஜமென்று நான் நம்புகிறேன. உன் முகம் யோக்கியனுக் குரியதென்று செல்வராஜன் முன்னமே கூறியிருக்கிறார். ஆனால் உனக்கு நேரிட்ட துன்பத்தைப் பற்றி நான் மிகவும் விசனிக்கிறேன்" என்றாள்.

அவள் அன்புடன் பேசியதால் தங்கமணிக்கு அவளிடம் அதிக பக்ஷமுண்டாயிற்று. அவன் "அம்மா, நான் செய்ய வேண்டிய காரியத்தைச் செய்துமுடித்ததும் உங்களுக்காக எந்த வேலை வேண்டுமானாலுஞ் செய்யச்சித்தமாயிருக்கிறேன். தீனதயாளுவைப் பற்றி நினைக்கும்போது எனக்குப் பைத்தியம்பிடித்து விடும்போலிருக்கிறது" என்றான்.

கமலாஸனி தீனதயாளுவை எங்ஙனம் மணப்பதென்று கிலேசமுற்றிருந்தாளல்லவா? இப்பொழுது அவன் மர்மம் வெளியாய் விடவே அவள் மனக்கவலையும் ஒழிந்துவிட்டது. அந்தக் கிராதகனை விவாகஞ்செய்து கொள்ளும்படி ஸரஸ்வதி கூறுவாளா? பத்மாவதியைத் துரோகஞ்செய்த ஆடவனைப் பழிக்குப் பழிவாங்க வேண்டுமென்ற தங்கமணியின் சபதம் கமலாஸனியைத் துன்பத்தினின்றும் காப்பாற்றுவதாயிற்று.

## 28. கமலாஸனியின் செல்வம்.

தங்கமணி கூறியதையெல்லாங்கேட்டுச் சுந்தரம் மிக்க ஆச்சர்ய முறலானான். ஆனால் அவன் மனம் இடந்தரவில்லை. அவ்விஷயங்களெல்லாம் அஞ்சத்தக்கனவாயிருந்தன! எல்லோராலும் மதிக்கப்பட்ட தீனதயாளுவா அவ்வளவு கேவலமாக நடந்துகொண்டிருப்பான்? சென்னை வாசிகளெல்லாம் அவன் சிறந்த கன்வானென்று ஸ்தோத்திரஞ்செய்து வந்தார்களே!

தங்கமணி கூறியதைத்தான் நம்பியதாகக் கமலாஸனி எழுதியிராவிட்டால் சுந்தரம் அவனைப் பைத்தியக்காரனென்றே எண்ணியிருப்பான். அவனுக்கு இப்பொழுது என்ன செய்வ

தென்று விளங்கவில்லை. அவன் தனக்குள் "தீனதயாளு அங்ஙனஞ் செய்திருப்பானு? இன்னும் யாராவது அம்மாதிரி செய்திருந்தால் அதைப்பற்றித் தீனதயாளுவை யன்றோ யோசனை கேட்பேன்!" என்று சொல்லிக்கொண்டான். தான் கமலாஸனியின் கார்ட்டீனுதலால் இவ்விஷயத்தை விசாரித்தறிவது தன் கடமையாகுமென்று அவன் கருதினன்.

உடனே கமலாஸனியின் செல்வம் அவன் ஞாபகத்திற்கு வந்தது. தீனதயாளு தங்கமணி கூறியதுபோலவே அடாத தொழில் செய்பவனுயிருந்தால், அந்தப் பணத்தை அவனிடமிருந்து மீண்டும் எப்படிப் பெறுவதென்று திகிலடைந்து உடனே அவன் அதைப்பற்றி விசாரிக்கத் தன் வக்கீலிடஞ் செல்லத் தீர்மானித்தான். மறுநாள் பொழுதுவிடிந்ததும் அவன் தங்கமணியையழைத்துக்கொண்டு ஹைகோர்ட்வக்கீல் கிருஷ்ணஸ்வாமி ஐயரவர்களிடஞ்சென்றான். ஐயரவர்கள் சுந்தரத்தை மரியாதையுடன் வரவேற்று உபசரித்தனர்.

சுந்தரம் கூறிய விஷயங்களைக்கேட்டதும் வக்கீல் மிகவும் ஆச்சர்யமுற்றார். ஆனால் அவர் இருபது வருஷங்களாக இம்மாதிரி அநேக கதைகளைக்கேட்டுப் பழக்கப்பட்டிருந்ததால் அங்ஙனம் நிகழ்ந்திருக்கலாமென்றெண்ணலாயினர். அவர் சுந்தரத்தை நோக்கி "இப்பொழுது நாம் அதை நம்பக்கூடாது. சங்கதி முற்றும் காதலைப்பற்றியதாகையால் அதன் மர்மத்தைத் தந்திரமாயறியவேண்டும். அவசரப்பட்டு ஒன்றுஞ்செய்யலாகாது. ஆமாம், தங்கமணி என்பவன் யார்? அவனை வரவழையுங்கள் பார்ப்போம்" என்றார்.

சுந்தரம் அங்ஙனமே யாகட்டுமென்று கூறிவிட்டுக் கமலாஸனியின் செல்வத்தைத் தீனதயாளுவினிடங்கொடுத்ததைத் தெரிவித்தான். அதைக் கேட்டதும் ஐயாவர்கள் திகைப்புற்றனர். அவர் "அந்தப் பணத்தை யாதொரு ஆதாரமுமில்லாமலாகொடுத்து விட்டீர்கள்? எழுத்து மூலமாக யாதொன்றுமில்லையா?" என்றார்.

சுந்தரம்:—"தீனதயாளு அதைப்பெற்றுக்கொண்டதாக ரசீது கொடுத்திருக்கிறுன்" என்றான்.

தங்கமணி உள்ளே வந்ததும் தனக்குத்தெரிந்த கதையை மூன்றுமுறை சொல்லலாயினன். அவன் கூறுவது உண்மையாவென்றறியுமாறு வக்கீல் அவனைப்பல கேள்விகள் கேட்டார். தங்கமணி எல்லாக் கேள்விகளுக்கும் சரியாகப் பதில்சொன்னுன். தீனதயாளு பத்மாவதியை வஞ்சித்த விஷயத்தையும் வக்கீலிடந்தெரிவித்துவிட்டான். அவன் கூறியது முற்றும் உண்மையாகவே யிருக்குமென்று ஐயரவர்கள் எண்ணினர்.

வக்கீல்:—(தங்கமணியைநோக்கி) தீனதயாளு புதைத்தது இன்னதென்று உனக்குத் தெரியாதோ?

தங்க:—தெரியாது. இருள் அதிகமாயிருந்தபடியால் ஒன்றுந்தெரியவில்லை. ஆனால் அந்த இடத்தை அடையாளமாகப் பார்த்து வந்திருக்கிறேன்.

வக்கீல்:—(சுந்தரத்தைநோக்கி) சரி, நாம் முதலில் அந்த வேலையைப் பார்க்கவேண்டும். அங்கே தோண்டிப் பார்த்தால் ஏதாவதொரு மர்மம் வெளியாகும்.

அன்று சாயந்திரம் வக்கீல் சுந்தரத்தையும் தங்கமணியையும் அழைத்துக்கொண்டு பல்லாவரத்துக்குச் சென்றனர். செல்வராஜனது வீட்டுத்தோட்டத்தை யடைந்ததும் லாயர் தங்கமணியை நோக்கி "அந்த இடமெங்கே?" என்று கேட்டார்.

தங்கமணி புதர்களினிடையிற்புகுந்து சென்று இரண்டு மரங்களிலிருந்து காலாலளந்து கொண்டு வந்து ஓரிடத்தில் நின்று அது தான் அந்த இடமென்று காண்பித்தான். வக்கீலும் சுந்தரமும் அவ்விடத்திற்கு விரைந்து சென்றனர். தங்கமணி நின்ற இடத்திலிருந்த மண் ஈரமுள்ளதாக இருந்தது. குழிபறிக்க யாதோராயுதமுமில்லையேயென்று ஐயரவர்கள் சுந்தரத்தினிடம் பேசிக்கொண்டிருந்தார். தங்கமணி ஆயுதமில்லாமலே குழிதோண்டலாமென்று கூறிவிட்டு மண்ணைத் தோண்ட ஆரம்பித்தான்.

இருவரும் அவன் வேலை செய்வதை அவாவுடன் பார்த்துக்கொண்டு நின்றனர். தங்கமணி குழி முயலைப்போல் தோண்டிக்கொண்டிருந்தான். அவன் ஒரு தோற்பெட்டியைக் கையிலெடுத்துக்கொண்டே "அகப்பட்டு விட்டது" என்று கூறினான். அப்பெட்டியில் என்ன இருக்குமோவென்று அவர்கள் சந்தேகித்தார்கள். பெட்டி பூட்டப்பட்டிருந்ததால் தங்கமணி பூட்டை உடைக்க எத்தனித்தான்.

வக்கீல் ஸ்டேஷனண்டை செல்லும் வரையில் அதை அப்படியே வைத்திருக்கவேண்டுமென்று தெரிவித்தார். சுந்தரம் ஆச்சர்யத்துடன் "அதிலென்ன இருக்குமோ" என்று கூறினான். லாயர் அதைப் பிடித்துப்பார்த்து அதனுள்ளே காகிதங்களிருந்தனவென்று சொன்னார்.

சற்றுநேரத்திற்கெல்லாம் மூவரும் பல்லாவரம் ஸ்டேஷனுக்கு வந்து சென்னைக்குப் போகும் வண்டியிலேறிக்கொண்டனர். உடனே அய்யரவர்கள் தோற்பெட்டியை யறுத்துத் திறந்துவிட்டனர். அதில் ஒரு காகிதக்கட்டு இருந்தது. அவர் அதை எடுத்துப் பார்த்து "ஓ, நோட்டுகளிருக்கின்றன!" என்றார்.

மூவரும் ஆச்சரியத்தினால் ஒருவரை யொருவர் பார்த்துக்கொண்டனர்; வக்கீல் நோட்டுகளை எண்ண ஆரம்பித்தார். எல்லாம் அய்ந்து ரூபாய் நோட்டுகளும் பத்து ரூபாய் நோட்டுகளுமாகவேயிருந்தன. லாயர் ஆயிரமாயிரம் ரூபாயாக நோட்

டுகளை யடுக்கிவைத்தனர். சுந்தாம் அம்மாதிரி பத்து அடுக்குகளை ஒன்றாய்ச்சேர்த்துப் பதினாயிரம் ரூபாயாகும்படிசெய்தான். அந்தப் பெட்டியில் நாற்பதினாயிரம் ரூபாயுமிருந்தது! அவர்கள் அதைக் கண்டு மிக்க சந்தோஷமுற்றனர்.

சுந் :—கமலாஸனியின் பணம் நல்ல பணமாகையால் திரும்பி வந்தது.

வக்கீல் :—ஐயா, இப்பொழுது தான் எனக்குத் தைரியமுண்டாயிற்று! இப்பணத்தை மறுபடியுங் காண்போமென்று நான் கனவிலும் எண்ணவில்லை.

சுந் :—ஆமாம், தீனதயாளு இதை ஏன் இம்மாதிரி புதைத்து வைக்கவேண்டும்?

வக்கீல் :—அவனுக்கு ஏதேனும் ஆபத்து சம்பவித்திருக்கவேண்டுமென்று நினைக்கிறேன். இப்பொழுது நாமென்ன செய்வது? தற்சமயம் தீனதயாளுவின்மேல் நமக்கு யாதொரு தாவாவுமில்லை. ஏனெனில் பணத்தைப் பூமியிற் புதைப்பது குற்றமாகாது. பாங்கில் போட்டு வைத்தாலுமொன்றுதான், புதைத்து வைத்தாலுமொன்று தான். அவன் என்ன எண்ணிக்கொண்டு பணத்தைப் புதைத்தானென்று நாமறிந்துகொள்ளவேண்டும். அவனைச் செல்வ வந்தனென்று எல்லோரும் மதித்து வருகிறார்கள். ஆதலால் அவனைப்பற்றிச் சில இடங்களில் விசாரித்த பிறகே அவன் நிலைமை இப்படியிருக்கிறதென்று அறிதல் கூடும். இப்பொழுதிருக்குஞ் சந்தர்ப்பத்தை யோசித்துப் பார்த்தால் ஸரஸ்வதியும் செல்வராஜனுந்தான் அவன்மேல் தாவாசெய்யக் கூடுமென்று தோன்றுகிறது. ஸரஸ்வதியை ஏமாற்றமுயன்றான்; செல்வராஜனை அவதூறு கூறிப்பழித்தான்.

அவர் கடைசியாகச் சொன்னதைக்கேட்டதும் சுந்தரத்தின் முகம் மாறியது. தானும் ஒரு முறை செல்வராஜனைப் பழித்தது இப்பொழுது அவன் ஞாபகத்திற்கு வந்தது. தீனதயாளுவின் தூண்டுதலினாலேயே அவன் அங்ஙனஞ்செய்யும்படி நேரிட்டது.

சுந் :—தாவாவென்பதே கூடாது. கமலாஸனி அதற்குட்பட மாட்டாள். எல்லாவிஷயங்களுஞ் சலவரமில்லாமல் முடியவேண்டும்.

வக்கீல் :—மிகவுஞ் சந்தோஷம்! நாம் தீனதயாளுவைக் கண்டு பேசவேண்டும். நமக்கு வேண்டிய முக்கியமான பொருள் கிடைத்துவிட்டதன்றோ?

சுந் :—செல்வராஜனிடம் இவ்விஷயங்களைத் தெரிவிக்க வேண்டாமா?

வக்கீல் :—அவனுக்கும் நமக்கும் யாதொரு சம்பந்தமுமில்லையென்று எனக்குத் தோன்றுகிறது. பணத்தைப்பற்றியே நான் கவலையுற்றிருந்தேன்; அது கிடைத்துவிட்டது.

மர்மம் வெளியாய்விட்டபடியால் கமலாஸனி தீனதயாளுவைச் சரியானபடி நடத்திக்கொள்வாள். எல்லாவற்றிற்கும் நாம் சற்றுப் பொறுமையுடன் இருக்கவேண்டும்.

சுந் :—சரி, உங்கள் அபிப்பிராயமென்ன?

வக்கீல் :—ஸரஸ்வதிக்கு இச்செய்திகளைத் தெரிவித்து விடவேண்டும்; தீனதயாளுவிடஞ்சென்று அவனைச்சிலவிஷயங்கள் கேட்கவேண்டும். உங்களுடைய உத்தரவின்மேல் இந்தப் பணத்தை நானே சில காலம் வைத்திருக்கிறேன். தீனதயாளுவுக்கு ஒரு ரசீது வேண்டுமானாலுங் கொடுத்துவிடுகிறேன். அவன் பணத்தை அடக்கஞ்செய்த மாதிரியே அவனுடைய சூழ்ல்களை வெளிப்படுத்துவதாயிருக்கின்றது. அவன் பணமில்லாமல் வருந்துகிறனென்று நினைக்கிறேன்—அப்படியானால் அவன் மோசக்கருத்துடன் பணத்தைப் புதைத்திருக்க வேண்டும்.

சுந் :—ஆமாம், தீனதயாளுவுக்கு யார் தெரிவிப்பது?

வக்கீல்:—நானே தெரிவிக்கிறேன்—உங்களுக்காகநானே தெரிவிக்கிறேன். நாம் யாதொன்றையும் அவசரமாய்ச் செய்யலாகாது. சில சங்கதிகளை விசாரித்தறியும் வரையில் யாதொன்றுஞ் செய்யக்கூடாது. தீனதயாளுவினிடம் பணமில்லாமலிருந்தால் அவன் பணத்தைப் புதைத்தது குற்றமாகும்; இல்லையேல் அவன் பைத்தியக்காரனென்று ஏற்படும்.

அன்றிரவு சுந்தரம் திருவல்லிக்கேணிக்குச் சென்று கமலாஸனியுடன் வார்த்தையாடிக் கொண்டிருந்தான். வக்கீல் கூறியபடியே, அவன் பல்லாவரத்துக்குச் சென்றதையும் பணத்தையெடுத்து வந்ததையும் அவளிடஞ்சொல்லவில்லை. அவன் தான் வக்கீலைக் கண்டு சில சங்கதிகள் பேசியதாகவும் தங்கமணி கூறியது உண்மையென்று அவர் நினைக்கிறரென்றும் அவளிடங்கூறினான்.

கமலா :—செல்வராஜனுக்கு இதைத் தெரிவிக்கப்போகிறீர்களோ?

சுந் :—இல்லை, தீனதயாளுவின் விஷயம் பைசலாகும் வரையில் தெரிவிக்கவேண்டாமென்று வக்கீல் கூறியிருக்கிறார்.

கமலாஸனியின் முகத்தில் சிலகாலமாகக் குடிகொண்டிருந்த விசனக்குறி நீங்கிவிட்டது. அவள் முன்போலவே சந்தோஷமுடையவளாயிருந்தாள். அவள் முகத்தைப் பார்த்ததும் அவளை ஏதோ கேட்கவேண்டுமென்று சுந்தரத்துக்குத் தோன்றுதலாயிற்று. ஆகவே அவன் அவளை நோக்கி "கமலா, நானுன்னைக் கேட்பதற்காகக் கோபங்கொள்ளாதே. நீ—செல்வ—செல்வராஜனை நேசிக்கிறாயா?" என்றான்.

கமலாஸனி யாது சொல்வதென்று அறியாமல் மயங்கினாள். செல்வராஜனைப்பற்றிச் சுந்தரம் பல்லாவரத்தில் கூறியது இப்பொழுது அவள் ஞாபகத்திற்கு வந்தது. கடைசி

யாக அவள் தைரியத்துடன் "ஆம், நான் அவரை நேசிக்கிறேன்" என்றாள்.

சுந் :—சரி, என்னால் கூடியவரையில் உனக்கு உதவி புரிகிறேன். உன் தாயார் அதற்குச் சம்மதிப்பது கஷ்டம்; ஆயினும் நான் தகுந்தபடி ஏற்பாடு செய்கிறேன்.

கமலா :—(சந்தோஷத்துடன்) ஆமாம், பல்லாவரத்தில் அவரைப்பற்றி ஏதோ சொன்னீர்களே அது இப்பொழுது ஞாபகமிருக்கிறதா ?

சுந் :—ஓ, அது நானாகக் கூறியதல்ல; தீனதயாளு என்னை ஏமாற்றிவிட்டான்; அவனே என்னை அங்ஙனஞ்சொல்லச்சொன்னான். அவன் கூறியவாறே செல்வராஜன் அயோக்கியனாயிருந்தால் நீ கஷ்டப்படுவாயென்றெண்ணி உனக்கு எச்சரிக்கைசெய்தேன்.

கமலாஸனிக்கு ஒருபுறங் கோபமும் மற்றொருபுறம் சந்தோஷமும் உண்டாயிற்று. தீனதயாளுவின் சதியோசனையைப்பற்றிக் கேள்வியுற்றதும் அவள் மனம் பதைத்தது; செல்வராஜனைத் தானடையலாமென்றெண்ணியபோது சந்தோஷமுண்டாயிற்று.

சுந் :—செல்வராஜன் எங்கிருக்கிறானென்று உனக்குத் தெரியுமா ?

கமலா :—தெரியாது.

சுந் :—சரி, அவனைப்பற்றி விசாரிக்கிறேன். மவுண்ட்ரோட்டில் விசாரித்தால் சங்கதி தெரியவரும்.

தீனதயாளு தான் புதைத்து வைத்த பணத்தைவைத்துக்கொண்டு ஏதேதோ செய்யவேண்டுமென்றிருந்தான். அவனெண்ணம் சிதைந்துபோகுங் காலம் நெருங்கியதால் கமலாஸனியின் செல்வம் புதைத்த இடத்தை விட்டு நீங்கியது.

## 29. தீனதயாளுவின் அகாலமரணம்.

பல்லாவரத்திற்குச்சென்று வந்த இரண்டாவது நாள் வக்கீல் கிருஷ்ணஸ்வாமி ஐயரவர்கள் சுந்தரத்தை நோக்கி "நாம் பல்லாவரத்துக்குச்சென்று தெரிந்துகொண்ட விஷயம் சரியாய்விட்டது" என்றார். அப்பொழுது அவர் சுந்தரத்தையும் தங்கமணியையும் அழைத்துக்கொண்டு தீனதயாளுவின் பங்களாவைநோக்கிச் சென்று கொண்டிருந்தார். அவனைக் கண்டு பேசவேண்டுமென்று அவர் முன்னமே தெரிவித்திருந்தாரல்லவா ?

சுந்தரம் "அதெப்படி ?" என்று வினவினான்.

வக்கீல் "நான் சில விடங்களிற்சென்று விசாரித்தேன். நான் கொண்ட சந்தேகம் யதார்த்தமாய்விட்டது. தீனதயாளு அதிகமாகக் கடன் வாங்கியிருப்பதால் இன்ஸால்வெண்

டாய்ப்போகுந் தருவாயிலிருக்கிறான். அவன் மிகுந்த நஷ்டமடைந்திருக்கிறான். இதையெல்லாம் பட்டணத்திலுள்ளவர்கள் அறிந்தார்களல்லர்; எப்பொழுதும்போல் அவனைச் செல்வ வந்தனென்று யாவரும் மதித்து வருகிறார்கள். நமக்குத் தெரிந்திருப்பது மற்றவர்களுக்குந் தெரிந்துவிட்டால் என்ன நேரிடுமென்று உங்களுக்கே தெரியும்.

சுந்:—நாம் பணத்தையெடுத்துக் கொண்டதாக ஏன் அவனிடந் தெரிவிக்கலாகாது?

வக்கீல்:—நமக்குத் தெரிந்துள்ள எல்லா விஷயங்களையும் அவனிடஞ் சொல்லவேண்டிய அவசியமில்லை. அது நம்முடைய கௌரவத்திற்கு அழகன்று. துருப்புச்சீட்டை முதலிற் செலவிடாமல் வைத்திருந்தால் தான் ஆட்டத்தில் ஜயமடையலாம். மேலும், தந்திரசாலியான தீனதயாளு யாது செய்வானென்று நமக்குத் தெரியாது. மிகவும் அவசியமாகத் தோன்றினாலன்றி நாம் பல்லாவரத்துக்குப்போய் வந்த செய்தியை அவனிடந் தெரிவிக்கலாகாது.

சுந்:—ஆமாம், ஆமாம். அவன் அதைக்கேட்ட மாத்திரத்தில் பல்லாவரத்திற்கு ஓட ஆரம்பிப்பான்.

அவர்கள் தீனதயாளுவின் பங்களாவுக்குச்சென்று விசாரித்ததில் அவன் வெளியே போய்விட்டதாக ஏற்பட்டது. அவன் ஸரஸ்வதியின் பங்களாவிலிருப்பானென்று அவர்கள் எண்ணினார்கள். ஐயரவர்கள் சுந்தரத்தை நோக்கி "சரி, திருவல்லிக்கேணிக்குப்போவது தான் உத்தமம். அங்கேசென்றால் ஒரே கல்லால் இரண்டு பக்ஷிகளைக்கொன்று விடலாம்" என்றனர்.

சற்றுநேரத்திற்கெல்லாம் அவர்களேறிச்சென்ற கோச் வண்டி ஸரஸ்வதியின் பங்களாவாசலில் வந்து நின்றது. பங்களாவின் உட்புறத்தில் விளக்குகள் ஜ்வலித்துக்கொண்டிருந்தன. அவர்கள் வண்டியைவிட்டு இறங்கி உள்ளே சென்றனர்.

ஒரு ஹாலில் தீனதயாளு ஸரஸ்வதியோடு சந்தோஷமாய்ச் சம்பாஷித்துக் கொண்டிருந்தான். அவனைப்பார்க்கும் போது யாதொரு கவலையுமற்றவனாகக் காணப்பட்டான். ஆனால் நுணுக்கமாய்க் கவனிக்குமொருவன் அவன் முகத்தில் அடிக்கடி இருள் வந்து மூடியதைக் கவனியாமலிருந்திருக்கமாட்டான். அன்று காலையில் தன்னைப்பற்றிக் கம்பெனியிலும் தான் லாவாதேவி செய்துவந்த இடங்களிலும் யாரோ விசாரித்தன ரென்றறிந்ததும், அவனுக்குக் கலவரமுண்டாயிற்று. ஆகவே தனக்கு ஏதாவது கெடுதி சம்பவிக்குமோவென்று அவன் திகிலடைந்தான். அவன்மீது யாருஞ் சந்தேகங்கொள்ளாமலிருக்கும் பக்ஷத்தில் கம்பெனி மூன்று மாதம் வரையில் நிலைத்திருக்குமென்று எண்ணியிருந்தான். ஒரு முறை அவன் விஷயத்தில் யாரேனுஞ்சந்தேகங் கொள்வார்களாகில் அவன்

செய்திருந்த ஏற்பாடுகளெல்லாம் மணல்கோட்டையாய் விடும்.

கமலாஸனி ஒரு புஸ்தகத்தைப்பார்த்த வண்ணம் ஹாலின் ஒரு புறத்தில் உட்கார்ந்திருந்தாள். அவள் தீனதயாளுவை அடிக்கடி கோபத்துடன் பார்த்துக்கொண்டிருந்தாள். அவன் தன் மனதிலுண்டான கலக்கத்தை மறந்தவனாயும், கூடியசீக்கிரத்தில் சம்பவிப்பதாயிருந்த துன்பத்தைக் கனவிலும் கருதாமலும் சந்தோஷமாய்ப்பேசிக் கொண்டிருந்தான்.

திடீரென்று சுந்தரம் வக்கீலுடன் ஹாலில் நுழைந்தான். அவர்களைக் கண்டதும் ஸரஸ்வதி ஆச்சர்யமுற்றனள். சுந்தரம் இப்பொழுது மிகவுந் தைரியமுள்ளவனாகக் காணப்பட்டான். இதற்குமுன் அவனிடமிருந்த சிறு பிள்ளைத் தனமும் நீங்கிவிட்டது.

ஐயரவர்கள் தீனதயாளுவைச் சுட்டிக்காட்டி "இவர் தான் தீனதயாளுவோ?" என்றார். தீனதயாளு மரியாதையுடன் "ஆமாம்" என்றனன். கிருஷ்ணஸ்வாமி ஐயரைப் பார்த்ததும் அவர் வக்கீலென்று அறிந்துகொண்டு, யாது காரணம்பற்றி அங்கே வந்திருப்பாரென்று அவன் சந்தேகிக்கலானான்; என்ன நடந்துவிட்டதோவென்று கலங்கினான். சுந்தரம் அவனைப் பார்க்கவேயில்லை. அவன் முகத்தில் கோபாக்கினி வீசியது. அவன் கமலாஸனியிடஞ்சென்று ஏதோ இரகசியம் பேசிக்கொண்டிருந்தான். இதெல்லாம் தீனதயாளுவைப் பிரமிக்கச்செய்தன. அய்யரவர்களுடைய தோற்றமும் அவனைக் கலவரப்படுத்தியது. ஸரஸ்வதி யாது சங்கதியென்று அறியாதவளாய் அங்கிருந்தவர்களைப்பார்த்துக் கொண்டிருந்தாள்.

வக்கீல் மரியாதையுடன் ஸரஸ்வதியைநோக்கி "அம்மா, சுந்தரத்தின் வக்கீலாகிய நான் சில விஷயங்களைத் தெரிவிப்பதற்காக இங்கு வந்திருக்கிறேன். இப்பொழுது நிகழ்ந்துள்ள சில சந்தோஷமற்ற சம்பவங்களைப்பற்றிச் சுந்தரம் என்னிடஞ் தெரிவிக்கலாயினார். அவைகளை உங்களுக்கும் தீனதயாளுவுக்கும் உடனே தெரிவிக்கவேண்டுமென்பது என்னுடைய கருத்து" என்றார்.

அதைக்கேட்டதும் ஸரஸ்வதி கலக்கமுற்றாள். அவள் கமலாஸனியையும் தீனதயாளுவையும் கவனித்து விட்டு மறுபடியும் வக்கீலைப்பார்த்தாள். பிறகு அவள் "என்ன, என்ன சங்கதி? தீனதயாளரே—கமலா '—" என்று பிதற்றினாள்.

தீனதயாளு நாற்காலியை விட்டெழுந்து வந்து அவளுக்குச்சமாதானம் கூறிவிட்டு, வக்கீலைப்பார்த்து "அய்யா, தயவு செய்து சங்கதியைத் தெரிவியுங்கள்" என்றான்.

வக்கீல் அவனைப் பார்த்துக்கொண்டே "தீனதயாளரே! நான் சொல்லப்போகும் விஷயம் உங்களைப்பற்றியதே. அய்யா, நீங்கள் பல்லாவரத்தில் செய்துமுடித்த தந்திரம் வெளியாய்

விட்டது" என்றார்.

தீன :—"என்னுடைய தந்திரமா?" என்று ஆச்சர்யத்துடன் கேட்டுவிட்டு வக்கீலை உற்று நோக்கியவண்ணமிருந்தான். அவருக்குத் தன் இரகசியம் எவ்வளவு தெரிந்திருக்குமோவென்று கிலேசமுற்றான். அவன் "ஐயா, நீங்கள் கூறுவது ஒன்றும் விளங்கவில்லை. ஆதலால் சற்றுத்தெளிவாய்ச் சொல்லுங்கள்" என்றான்.

ஐயரவர்கள் யாதும் பேசாது எழுந்துசென்று கதவைத் திறந்தார். உடனே தங்கமணி அங்கு வந்து நின்றான். அவனைக் கண்டு தீனதயாளு ஆச்சரியப்படவில்லை. தங்கமணியே தன் மர்மங்களை வெளியிட்டிருக்கவேண்டுமென்று அவன் முன்னமே எண்ணியிருந்தான்.

வக்கீல் :—தங்கமணி, தீனதயாளு பல்லாவரத்தில் தங்கியிருந்தபோது நீ அவரிடத்தில் வேலைசெய்து கொண்டிருந்தாயா?

தங்க :—ஆம், அய்யா.

வக்கீல் :—சரி, நீ செல்வராஜனிடம் வேலைசெய்யப்போகும்படி எங்ஙனம் நேர்ந்தது?

ஸரஸ் :—யாரிடம்?

தீன :—அம்மா, பேசாதிருங்கள். அவர்கள் சொல்லவேண்டுவதையெல்லாம் சொல்லி முடிக்கட்டும்.

வக்கீல் :—தங்கமணி, நீ செல்வராஜனிடஞ்சென்ற காரணம் யாது? நடந்த விஷயங்களனைத்தையும் ஒன்றுவிடாமற் கூறிவிடு.

தங்கமணி கமலாஸனியிடங் கூறிய கதையை நாலாமுறை சொல்லத்தொடங்கினான். தான் தீனதயாளுவோடு பல்லாவரத்திலிருந்ததையும், பிறகு அவன் வேண்டுகோளின்படி செல்வராஜனிடஞ் சென்றதையும், இடையில் நடந்த சம்பவங்களையும் சொன்னான். அங்ஙனஞ் சொல்லிக்கொண்டு வரும்பொழுது "கமலாஸனி அம்மாள் செல்வராஜனைக் காதலித்திருந்தார்கள். தீனதயாளு அவர்களைத் தன் வசப்படுத்திக்கொள்ளவேண்டுமென்றெண்ணி இம்மாதிரி சதியோசனை செய்தான்" என்றனன்.

ஸரஸ்வதி கலக்கமுற்று "என்ன? செல்வராஜனையா? அதைச் சொல்ல உனக்கெப்படித் தைரியமுண்டாயிற்று? வீட்டைவிட்டு நீங்கள்—எல்லோரும் உடனே போய் விடுங்கள்! அந்தப் பேச்சை நான் கேட்கவேமாட்டேன்" என்றாள்.

தீனதயாளு அவளுக்கு எவ்வளவு தேறுதல் கூறியும் அவள் சமாதானமடையவில்லை. அவள் அவனை நோக்கி "தீனதயாளரே! அந்த வார்த்தை என் காதில் விழக்கூடாது. அது மிகவும் அருவருப்பாயிருக்கிறது" என்று கூறினாள்.

கமலாஸனி தான் உண்மையைக் கூறினால் தான் தன்

தாயார் கலங்காமலிருப்பாளென்றெண்ணி அவளருகிற் சென்று "அம்மா, தங்கமணி கூறுவது வாஸ்தவந்தான்" என்றனன். பிறகு ஸரஸ்வதி "சரி, இப்பொழுது எதைவேண்டுமானாலும் நம்புவேன்" என்று கூறினாள்.

தங்கமணி கதைசொல்லத் தொடங்கினான். இடையிடையில் வக்கீல் அவனைச் சில கேள்விகள்கேட்டு மர்மத்தை வெளிப்படுத்தினார். சற்றுநேரத்திற் கொருதரம் ஸரஸ்வதி பெருமூச்செறிந்து கொண்டிருந்தாள். தன் மகள் செல்வராஜனைப் பார்ப்பதற்காக இரவில் திருட்டுத் தனமாய்ச் சென்றதைக் கேள்வியுற்றதும் அவள் கமலாஸனியைக் கோபத்துடன் பார்த்தாள்.

அதையெல்லாங்கேட்டுக் கொண்டிருந்தபொழுது தீனதயாளுவின் முகத்தில் புன்னகை தோன்றிற்று. இந்த விஷயங்கள் மாத்திரம் அவர்களுக்குத் தெரிந்திருந்தால் அதனால் தனக்கு யாதொரு நஷ்டமுமுண்டாகாதென்று எண்ணிக் கொண்டான்.

தங்கமணி கதையை முடித்ததும் தீனதயாளு வக்கீலை நோக்கி "ஐயா, உங்களைப்போல் கௌரவம் வாய்ந்தவர்கள் இம்மாதிரியான கட்டுக்கதையைக் காதுகொடுத்துக்கேட்பது எனக்கு ஆச்சர்யத்தை விளைவிக்கின்றது. அதெல்லாஞ் சுத்தப்பொய்! இக்கதையைச் சொல்பவன் ஒரு சமயம் என் வேலைக்காரனாயிருந்தவன். அவன் அயோக்கியனாயிருந்தபடியால் வேலையினின்றும் நீக்கிவிட்டேன். அப்படிப்பட்ட அயோக்கியன் எதைத் தான் சொல்லத் துணியான்? அவன் கூறியதில் ஒரு பதங்கூட நிச்சயமானதன்று. மேலும் அதற்கென்ன அத்தாக்ஷியிருக்கிறது? இந்தக் கிராதகன் என்னை அவமானம் பண்ணியதற்கு ஸரஸ்வதியம்மாள் சாக்ஷியாக இருக்கிறார்கள். உங்களை அவன் ஏமாற்றிவிட்டான்போலும்!" என்று ஆத்திரத்துடன் சொன்னான்.

சுந்:—ஐயா, தீனதயாளரே! பல்லாவரத்துக்கு என்னை ஒரு முறை அனுப்பியதை மறந்துவிட்டீர்களோ? அது ஒரு அத்தாக்ஷியன்றோ?

தீன:—சுந்தரம்! மிகவும் நேர்த்தியாயிருக்கிறது! நானே அதை முற்றும் நம்பியபடியால் உன்னிடந்தெரிவித்தேன். கமலாஸனியை அவமானத்தினின்றுங்காப்பாற்ற எண்ணியே உன்னை அங்கே அனுப்பிவைத்தேன். அதை நானே கற்பித்தேனென்று எண்ணுகிறாயோ? செல்வராஜன் இப்படிப்பட்டவனென்று எனக்கு எங்ஙனந்தெரியும்?

வக்கீல்:—(மேஜையைத் தட்டிக்கொண்டே) "தீனதயாளரே, கதை அதோடு முடியவில்லை. இன்னொரு சங்கதியும் இருக்கிறது. அது மிகவும் கொடுமையானது. (ஸரஸ்வதியை நோக்கி) அம்மா, உங்கள் மகளுடைய பணத்தைத்தீனதயாளு

வாங்கிக்கொண்டார்—நாற்பதினுயிரம் ரூபாயையும் பெற்றுக் கொண்டார்.

தீன:—ஆமாம், அதைப்பற்றி என்ன? நானதைக்கேட்க வில்லை. அதைக் கம்பெனியில் கொடுத்து வைக்கும்படி சுந்தரமே என்னைக்கேட்டுக் கொண்டான். ஆகவே அதைப்பெற்றுக்கொண்டேன். கூடியசீக்கிரத்தில் நான் கமலாஸனியை மணம்புரிந்துகொள்ளப்போவதால் சுந்தரம் என்னை நம்பினுன் போலும்.

வக்கீல்:—அதெல்லாமிருக்கட்டும். தங்கமணிகூறியதைக் கேட்டதும் அது முற்றுங்காதல் சம்பந்தமானதென்று இருந்தேன். ஆயினும் உங்கள் போன்றவர்கள் அங்ஙனம் நடந்து கொள்வது பரிகசிக்கத்தகுந்ததாகும். பிறகு உங்களிடம் பணத்தைக்கொடுத்து விட்டதாகச் சுந்தரம் என்னிடந்தெரிவித்தார். பணத்தைப்பெற்றுக்கொண்ட பிறகு கமலாஸனியை நீங்கள் மணம்புரிந்துகொள்ள நிச்சயித்திருந்ததே எனக்கு ஒருவாறு சந்தேகத்தை உண்டுபண்ணியது—நான் சொல்வதையறிந்து கொண்டீர்களா?

தீனதயாளு யாதும் மறுமொழி கூருமல் லாயரைப்பார்த்துக் கொண்டிருந்தான். அப்பொழுது அவன் முகம் வெளுத்திருந்ததை அங்கிருந்தவர்கள் கண்டு கொண்டனர்.

வக்கீல்:—"நேற்றையதினம் சில விடங்களிற்சென்று உங்களைப்பற்றி விசாரித்தேன்" என்று கூறியதும், தீனதயாளு தன்னை யறியாமலே "ஓஹோ" என்று கூவினுன். அப்பொழுது அவனுக்குப் பெருந்திகிலுண்டாயிற்று. யாரோ தன்னைப் பற்றி விசாரித்ததாக முன்னமே கேள்வியுற்றிருந்தானல்லவா? இப்பொழுது அவனுடைய சந்தேகம் நீங்கிவிட்டது.

வக்கீல்:—அய்யா, நீங்கள் இன்ஸால்வெண்டாய்விட்டீர்களென்று தெரிந்துகொண்டேன்! உங்களுக்கு மிகுந்த நஷ்டமுண்டாயிருப்பது எனக்குத் தெரிந்த விஷயம். அது சென்னைவாசிகளுக்குத்தெரியுமானுல் நாளையதினம் உங்கள் கதிஎன்னவாகுமென்பதை நானறிவேன். இவ்விஷயத்தை வெளியிடவேண்டுமென்றே தீர்மானித்திருக்கிறேன்.

தன் வாழ்நாளில் தீனதயாளு இப்பொழுது தான் முதல் முதல் தோல்வியடைந்தான். அவனுல் ஒன்றும் பேசமுடியவில்லை—எதைப் பற்றியும் நினைக்கமுடியவில்லை. அவன் மரம் போல் நின்றவண்ணம் வக்கீலைப்பார்த்துக் கொண்டிருந்தான்.

"இன்ஸால்வெண்ட்," "நஷ்டம்" என்ற வார்த்தைகள் ஸரஸ்வதியின் காதில் விழவும், அவள் இடியுண்ட அரவம் போல் நடுங்கினுள். அவள் தீனதயாளுவின் முகத்தைப் பார்த்து வக்கீல் சொல்லியது முற்றும் உண்மையென்றறிந்து கொண்டு "அய்யோ! மோசம் போய்விட்டேன்! தீனதயாளரே, மோசம் போய்விட்டேன். முடியாது—முடியாது—

கமலாஸனியின் பணம்—" என்று அலறினான். அப்பொழுது தீனதயாளு மெதுவாகக் கதவண்டை சென்றான்.

உடனே தங்கமணி அவ்விடம் வந்து அங்குள்ளவர்களை நோக்கி, "சற்றுக் கவனியுங்கள். இந்தச் சண்டாளனுக்கு முன்னமே விவாகமாய்விட்டது" என்று கூறிவிட்டுப் பத்மாவதியின் வரலாற்றைச்சொல்லத் தொடங்கினான். அவளுக்கு விவாகமானது முதல் மோதிரமுங் கடிதங்களும் அகப்பட்டவரையிலுஞ்சொல்லி முடித்தான்.

தீன:—(கோபத்துடன் தங்கமணியைநோக்கி) மடையா! நீ பொய் சொல்லுகிறாய்.

தங்க:—"பாதகா! நீ தான் பொய் சொல்லி இவர்களை ஏமாற்றப்பார்க்கிறாய். கடிதங்களும் மோதிரமும் இதோ இருக்கின்றன" என்று சொல்லிக்கொண்டே அவைகளை மேஜையின்மேல் வைத்தான்.

அவைகளைக் கண்டதும் ஸரஸ்வதி மூர்ச்சித்து விழுந்தாள். கமலாஸனி அவைகளைப் பார்க்க அஞ்சியவளாய்த் தன் முகத்தைக் கரங்களால் மறைத்துக்கொண்டாள். ஐயரவர்கள் அது தான் சமயமென்று உணர்ந்து கதவைத்திறந்து தீனதயாளுவை அனுப்பிவிட்டார். பிறகு அவர் ஸரஸ்வதியிடம் வந்து "அம்மா, உங்கள் குமாரத்தியின் பணம் பத்திரமாக இருக்கிறது. அது தற்போது என் வசத்தில் தானிருக்கிறது. தீனதயாளு அதை அபகரிக்கவேண்டுமென்றிருந்தான். அவன் அதைப் பல்லாவரத்துக்கெடுத்துச்சென்று செல்வராஜனுடைய தோட்டத்தில் புதைத்துவிட்டான். தங்கமணி அதைப் பார்த்து எங்களிடந்தெரிவித்து விட்டபடியால் நாங்கள் அதை எடுத்து வந்து விட்டோம்" என்று தேறுதல் கூறினார்.

அதைச் செவியுற்றதும் ஸரஸ்வதியின் மனதிலிருந்த வியாகுலம் நீங்கியதெனினும், சற்று முன்னர் அங்கே நடந்த காட்சி அவள் மனதைவிட்டு அகலவில்லை. அவளெண்ணிய எண்ணஞ் சிதைந்துவிட்டது! இனி மானுட சுபாவத்தில் நம்பிக்கை வைக்கலாகாதென்று அவள் எண்ணினாள்.

சுந்தரம் கமலாஸனியிடஞ்சென்று ஏதோபேசிக்கொண்டிருந்தான். அவன் தான் செல்வராஜனைப்பற்றி விசாரித்ததாகவும், அவன் சென்னையிலிருப்பதாகக் கேள்வியுற்றதாகவும் அவளிடங்கூறினான். அதைக்கேட்டதும், அவள் மிக்க சந்தோஷமுற்றாள்.

அன்றிரவு நடந்த சம்பவங்கள் அதோடு முடியவில்லை. சுந்தரம் வெகுநேரம் கமலாஸனியோடு பேச எண்ணினான். ஆனால் வக்கீல் எங்கேயோ செல்லவேண்டுமென்று அவனை அழைத்துச் சென்றார். இருவரும் பங்களா வாயிலில் வந்து நின்றதும், ஐயரவர்கள் சுந்தரத்தைநோக்கி, "தங்கமணி

எங்கே?" என்று கேட்டார்.

சுந்:—தெரியாது. உங்களுடனிருந்தானென்று எண்ணியிருந்தேன்.

அங்கிருந்த ஒருவேலைக்காரன் 'ஐயா, அவன் பல்லாவரத்துக்குச்சென்ற ஒரு மோட்டார்காரில் ஏறிக்கொண்டுபோய் விட்டான் என்றான். சுந்தரம் அதைக்கேட்டு ஆச்சர்யமுற்றவனாய், "பல்லாவரத்திற்காசென்றான்?" என்று கேட்டான்.

வக்கீல் :—தீனதயாளு எங்கே?

வேலைக்காரன் :—ஐயா, அவருடைய மோட்டார்கார் இங்கே நின்றிருந்தது. அவர் அதில் ஏறிக்கொண்டு தனியாய் எங்கேயோ சென்றார்.

வக்கீல்:—தனியாகவா சென்றான்? ஓட்டுகிறவன் இல்லையோ?

வேலைக்காரன்:—இல்லை, அவர் மாத்திரந்தான் சென்றார்.

வக்கீல் :—அவர் சென்றதைத் தங்கமணி பார்த்திருந்தானா?

வேலைக்காரன்:—ஆம், அவர் சென்றபோது கதவண்டை நின்று பார்த்துக்கொண்டிருந்தான்.

தங்கமணி பல்லாவரத்துச்குச் சென்றபடியால் தீனதயாளுவும் அங்கே போயிருக்கவேண்டுமென்று வக்கீல் தீர்மானிக்கலாயினர். உடனே அவர் தாங்களும் அங்கே செல்லவேண்டுமென்று தெரிவித்தனர். ஸரஸ்வதியின் மோட்டார் கார் அங்கே கொண்டு வந்து நிறுத்தப்பட்டது.

வக்கீல் சுந்தரத்துடன் பல்லாவரத்துக்குப்பிரயாணமாயினர். அப்பொழுது அவர் சுந்தரத்தைநோக்கி, "தீனதயாளு பணத்திற்காகப் பல்லாவரத்துக்குப் போயிருக்கிறான். தங்கமணி அவனைப் பின்பற்றிச்சென்றிருக்கிறான்—பத்மாவதியை மோசஞ்செய்தவனைக் கொலைசெய்து விடுவதாக அவன் முன்னே சபதஞ்செய்து கொள்ளவில்லை?" என்றனர்.

அரை மணி நேரத்திற்குள் அவர்கள் செல்வராஜன் வீட்டை யடைந்தனர். அப்பொழுது ஒருவன் அவர்களெதிரில் ஓடினான். வெளிச்சம் அவன் முகத்தில் விழவும் அவன் தங்கமணியென்று தெரியலாயிற்று. "குடிசை" அன்றிரவு அந்த காரமாகவும் பயங்கரமாகவுங் காணப்பட்டது. தீனதயாளுவின் மோட்டார்கார் இருளில் நிறுத்தப்பட்டிருந்தது.

அவர்கள் ஒரு விளக்கை யெடுத்துக்கொண்டு தோட்டத்திற்குச்சென்றனர். இரண்டு நாட்களுக்குமுன் பணத்தைக் தோண்டியெடுத்த இடத்தண்டை வந்தபொழுது, தீனதயாளு தேகத்தில் இரத்தம் பிரவாகமாய் ஓட, இறந்து விழுந்து கிடந்ததைக் கண்டார்கள்!

மாந்தர்களின் வாழ்க்கை நிலையற்றதென்று கூறுவது உண்மையானதன்றோ? தீனதயாளுவின் ஏற்பாடுகள் என்ன

வாயின? கம்பெனி என்ன கதியாயிற்று! மோட்டாரகார் எங்கிருந்தது? அவன் யௌவனபருவத்தை யடைந்ததும் எவ்வளவு சந்தோஷமாகக் காலங்கழித்து வந்தான்! விலையுயர்ந்தபட்டாலான உடைகளைத் தரித்துக்கொண்டு சிங்காரவனத்திற்கும் சமுத்திரக்கரைக்கும்போய் நின்று அங்குள்ள ஐரோப்பியர்களைக் கண்ணுறும் போதெல்லாம் தான் இங்கிலாந்திலேயே பிறந்து வளர்ந்தவனென்று எண்ணிக்கொள்வான்; ஐரோப்பிய கனவான்களைவிடத்தான் அதிக நாகரிகமுடையவனாயிருக்கவேண்டுமென்றெண்ணி நேர்த்தியான ஐரோப்பிய உடையணிந்து கொள்வான். அவன் கனவான்களிடம் பேசும்போதெல்லாம் அலக்ஷியத்துடன் கரங்களைக் காற்சட்டையில் நுழைத்துக்கொண்டு நிற்பான். தன்னை ஐரோப்பிய மாதர்கள் மணம்புரிய எண்ணுவார்களென்று தானே நினைத்துக் கொள்வான். மோட்டார்காரிற்செல்லும் பொழுது யாவரையும் மதிக்கமாட்டான்!

ஒருகால் இவ்வளவு ஆடம்பரத்துடன் வாழ்ந்து வந்த அவன் திக்கற்றவனாய் இறக்குங்காலம் வந்ததல்லவா? பாவம்! பத்மாவதியின் மனம் எங்ஙனம் நொந்திருக்கும்? அவளை வஞ்சித்த பாவமே தீனதயாளுவை இப்பொழுது சுற்றிக்கொண்டது. அவன்போன்ற கிராதகன் வேறெவனிருப்பான்? தீனதயாளுவின் அகால மரணம் கடவுள் விதித்த தண்டனையாகுமென்று அநேகர் எண்ணலாயினர். கொலைப்பாதர்களின் கதி இது தான்!

## 30. கமலாஸனியின் பாக்கியம்.

மறுநாள் பகல் பன்னிரண்டு மணிக்குச் சுந்தரம் ஸரஸ்வதியின் பங்களாவுக்கு வந்தான். மங்களகரமான காரியம் நடக்க இருந்தபொழுது அசுபமான செய்தியைச்சொல்லக்கூடாதென்றெண்ணியவனாய் அவன் தீனதயாளுவின் அவலச்சாவைப்பற்றி அங்கு யாதுங்கூறவில்லை.

அவன் கமலாஸனியை நோக்கி, "புறப்படுவோமா?" என்று கேட்டான். கமலாஸனியின் தேகம் சௌக்கியமாய் விட்டது. அவள் முகம் காந்தியுடன் விளங்கியது; கண்கள் ஜ்வலித்தன; தேகம் பொன்னிறம் வாய்ந்திருந்தது. காதலும் நம்பிக்கையுமே அவளுக்கு இதஞ்செய்தன.

கமலாஸனி "எங்கே செல்வது?" என்று கேட்டாள். சுந்தரம் மவுண்ட்ரோட்டுக்குச் செல்லவேண்டுமென்று தெரிவித்தான்.

உடனே சுந்தரம் கமலாஸனியையும் ஸரஸ்வதியையும் அழைத்துக்கொண்டு செல்வராஜனுடைய ஷாப்புக்குப் பிரயாணமானான். கமலாஸனி தன்னை நல்ல ஆடையாபரணங்களால் அலங்கரித்துக் கொண்டிருந்தாள். அவள் எப்

பொழுதும் அம்மாதிரி அழகு வாய்ந்திருக்கவில்லையென்று சுந்தரம் எண்ணினான். உண்மையைக் கூறுமிடத்து, அவன் அவளது வடிவழகைக் கண்டு மயங்கி, தானே செல்வராஜனாயிருந்தால் புண்ணியஞ் செய்தவனாவானென்று எண்ணிக் கொண்டான்!

சற்றுநேரத்திற்கெல்லாம் மோட்டார்கார் செல்வராஜனுடைய ஷாப்பினெதிரில் வந்து நின்றது.

அப்பொழுது செல்வராஜன் ஏதாவது வேலை செய்ய வேண்டுமென்று முயன்றுகொண்டிருந்தான். சற்றுநேரத்திற்கெல்லாம் நிகழ்வதாயிருந்த திவ்ய சம்பவத்தை அவன் கனவிலும் நினைத்தானல்லன்! எவ்வளவு முயன்றும் அவன் மனம் வேலையின்மேல் நாடவில்லை. அவன் பல்லாவரத்தைவிட்டு வந்தது முதல் இங்ஙனமே அவஸ்தைப்பட்டுக்கொண்டிருந்தான்.

கமலாஸனியைப் போலவே அவனும் நிகழ்ந்ததனைத்தையும் மறந்துவிட வேண்டுமென்று தீர்மானித்தான்—அவளைப்போலவே அவனும் அதை மறக்கமுடியாமல் வருந்தினான். இரவிலும் பகலிலும் அவள் ஞாபகமே அவன் மனதில் குடிகொண்டிருந்தது. மறந்துவிடவேண்டுமென்று நினைக்க நினைக்க ஞாபகம் அதிகமாய் வர ஆரம்பித்தது. அன்னியோன்னியமாயிருந்த காதலர்கள் காலவித்தியாசத்தினால் பிரிந்துபோகும்படி நேரிட்டால் அவர்கள் இங்ஙனம் வருந்துவது இயற்கையன்றோ? மறுபடியும் முன்போல் ஒன்றாய்க்கூடிச் சந்தோஷமனுபவிப்பதே அவர்களது பெரும் பாக்கியமாகும்!

இரவில் சில சமயங்களில் அவன் விழித்துக்கொண்டே கமலாஸனியைப்பற்றி நினைக்கத் தொடங்குவான். பல்லாவரத்தில் தன் முன் தோன்றியவாறே இப்பொழுதும் அவள் தன்னிடம் வருவதாக எண்ணிக்கொள்வான். பிறகு தங்களிருவருக்குமுண்டான காதலைப்பற்றிச் சிந்திப்பான். எவற்றினும் மேலானவளாயிருந்த அவளை இழந்துவிட்டதை நினைத்துத் துக்கிப்பான்.

எப்பொழுதும் போல் இன்றும் அவன் மனதில் அவ்வித எண்ணங்கள் தோன்றலாயின. அவனுக்கு வேலைசெய்யத் தோன்றவில்லை. அவன் பெஞ்சியின்மேல் சாய்ந்துகொண்டே ஏதோ சிந்தித்துக் கொண்டிருந்தான். கமலாஸனி தீனதயாளுவை மணம்புரிந்து கொள்வதாக அவன் சமாசாரப் பத்திரிகைகளிற்படித்தானாகையால் அந்த விஷயமே இப்பொழுது அவனை வருத்தலாயிற்று. ஆனால் அவன் தன் மனதை ஒருவாறு திடப்படுத்திக்கொண்டான். கமலாஸனியைத் தான் இழந்துவிட்டபடியால் அவள் வேறு யாரையாவது மணஞ்செய்துகொள்வது சகஜமென்று அவன் எண்ணினான். தீனதயாளுவை விவாகஞ்செய்துகொள்ள அவள் எங்ஙனஞ் சம்மதித்திருப்பாள்? அவள் அவனை முன்னே வெறுக்கவில்லையா?

கமலாஸனியோடு தான் பல்லாவரத்தில் சந்தோஷமாயிருந்ததைப்பற்றி நினைத்துக்கொண்டிருந்தமையால் அச்சமயம் அங்குண்டான காலடிசப்தம் அவனுக்குக் கேட்கவில்லை. கமலாஸனி மலர்ந்த முகத்துடன் தன்னெதிரில் நிற்பதுபோல் அவன் எண்ணிக்கொண்டான்.

கதவைத்தட்டுஞ் சப்தங்கேட்டது. உடனே செல்வராஜன் மனோராஜ்யஞ் செய்வதை நிறுத்திவிட்டுக் கதவைத்திறந்தான். கதவைத் தட்டியது கமலாஸனியோவென்று அவன் சந்தேகித்தான்; கதவைத்திறந்து பார்த்ததும் அவனெண்ணியதுபோலவே கமலாஸனி இருவருடன் அங்கே நின்றிருந்தாள்.

கமலாஸனி செல்வராஜனைப் பார்க்க வெட்கியவளாய்த் தலை குனிந்த வண்ணம் நின்றிருந்தாள். பிறகு இருவரும் ஒருவரையொருவர் பார்த்தபொழுது அவர்களுக்கு உண்டான ஆனந்தத்தை அளவிட்டுக்கூற ஆயிரநாவைப் படைத்த ஆதிசேஷனாலும் ஆகாது. இணைவிட்டுப் பிரியாமல் கூடியிருந்து இன்பமாய்க் காலங்கழிக்க வேண்டுமென்பதன்றோ காதலர்கள் கொள்ளும் பேரவா?

சுந்தரம் செல்வராஜனிடம் வந்து ஏதோ சில விஷயங்களைக்கூறி அவனைத் தங்களுடன் அழைக்க, அபரிமிதமான ஆனந்த வெள்ளத்தில் அமிழ்ந்தவனான செல்வராஜன் உடனே அவர்களோடு புறப்பட்டான்.

ஆனி மாதம் ஆறுந் தேதி ஆதிவாரம் உதயாதி நாழிகை 10-க்குமேல் 15-க்குள்ளாக மிதுன லக்னத்தில் கூடிய சுப முகூர்த்தத்தில் காலஞ் சென்ற கருணானந்தர் குமாரத்தி சௌபாக்கியவதி கமலாஸனிக்கும், செங்கற்பட்டு சேஷாசல முதலியார் குமாரன் சிரஞ்சீவி செல்வராஜனுக்கும், விவாக மஹோற்சவம் நடந்தேறியது. அவ்விவாகத்திற்குப் போகாதவர்களுமில்லை, தம்பதிகளை மனப்பூர்வமாய் ஆசீர்வதியாதவர்களுமில்லை.

அதற்கு முன் பணப்பேய்பிடித்து ஆடிக்கொண்டிருந்த ஸரஸ்வதி இப்பொழுது தன் பேதமையை உணர்ந்து கமலாஸனியின் விவாகத்தைச் சிறப்புடன் செய்து உள்ளங்களித்திருந்தனள். தீனதயாளுவின் ஞாபகம் வரும்போதெல்லாம் "இவ்வுலகத்தை நம்பவே கூடாது" என்று எண்ணிக்கொள்வாள்.

தான் மனமுவந்து காதலித்த ஆடவனையே கணவனாகப் பெற்ற கமலாஸனியின் பாக்கியமே பாக்கியம்! சில காலம் அவளை விட்டகன்றிருந்த செல்வமும் வந்துவிட்டது. அவள் தன் புருஷனோடுங் குழந்தைகளோடும் இப்பொழுது பல்லாவரத்தில் பாங்குடன் வாழ்ந்து வருகின்றனள்.

தங்கமணியை அன்று பல்லாவரத்தில் வக்கீலும் சுந்தர

மும் கண்ட பிறகு வேறுயாருங் காணவில்லை. அது முதல் அவன் சென்னையிலில்லையென்று ஏற்படுகிறது. சிலர் அவன் இலங்கைத் தீவுக்குப் போய்விட்டானென்கின்றனர்; மற்றுஞ் சிலர் பர்மாவிலிருக்கின்றான் என்கின்றனர். தகவலாய் விசாரித்ததில் தங்கமணி இப்பொழுது நடக்கும் பெரிய ஐரோப்பிய யுத்தத்தைப்பார்க்கப் பிரியப்பட்டு லஸ்கர் உத்தியோகம் பெற்றுப் போயிருக்கிறானென்று ஏற்படுகிறது. எங்ஙனமாயினும் ஆகுக. அவன் சபதமும் சதுராய்முடிந்தது, கமலாஸனியின் காதலும் கைகூடியது.

அம்பலவாணன் குழந்தை இறந்தநாளாகப் பைத்தியம் பிடித்தவன்போல் ஆய்விட்டானென்று கேள்வியுற்றுக் கமலாஸனி தன் கணவனை விடுத்து அவனைத் தங்கள் வீட்டிற்கு அழைத்து வரச்சொல்லி ஆதரித்து வருகின்றனள்.

தீனதயாளு இறந்தசெய்தி தெரிந்ததும் கடன்காரர்கள் அவனுடைய சொத்துக்களையெல்லாம் ஏலம்போட்டு வந்த வரையில் பெற்றுக்கொண்டார்கள்.

கமலாஸனியின் சந்தோஷவாழ்வில் கருத்துள்ள சுந்தரம் அடிக்கடி பல்லாவரத்துக்கு வந்து அவர்களைப் பார்த்துப்போவான். அவனைக் கமலாஸனியின் குழந்தைகள் "மாமா"வென்று கூப்பிட்டு அவனிடம் வந்து விளையாடிக் கொண்டிருப்பார்கள்.

ஸரஸ்வதி தீனதயாளுவின் வஞ்சகப்பேச்சை வாஸ்தவமென்றெண்ணிச் செல்வராஜனை முன்னே பழித்தது இன்னும் அவள் மனதை விட்டு நீங்கவில்லையாதலின் அவனெதிரில் வரவும் நாணமுற்றிருந்தாள். ஆனால் செல்வராஜனும் கமலாஸனியும் அவளை மரியாதையுடன் உபசரித்து வருகிறார்கள். அவள் யாதொரு கவலையுமின்றித் தன் பேரன் பேத்திகளை எடுத்துக்கொஞ்சிக் குலாவிக்கொண்டிருக்கிறாள்.

கமலாஸனி

முற்றிற்று.

Printed at the "ODSIT" Press, Choolai High Road, Madras.